

# திருக்கோயில் வழிகாட்டி
## (கையேடு)

### திருவண்ணாமலை மாவட்டம்







தமிழ்நாடு அரசு

இந்து சமய அறநிலையத்துறை வெளியீடு

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | ஆகஸ்ட் 2015 |
| முன் அட்டை | : | அருள்மிகு உண்ணாமுலையம்மை<br>உடனுறை அருணாசலேசுவரர்,<br>திருவண்ணாமலை. |
| பின் அட்டை | : | அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன்,<br>அம்மன் கோயில் படைவீடு,<br>போளூர் வட்டம். |
| அச்சிட்டோர் | : | பாலா ஆப்செட் பிரிண்டர்ஸ்<br>67, இராசராசன் வீதி,<br>திருவண்ணாமலை-606 601. |
| விலை | : | ரூபாய் |
| உரிமை | : | இந்து சமய அறநிலையத்துறை,<br>தமிழ்நாடு அரசு. |

# அமைதி – வளர்ச்சி – வளம்



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்
புரட்சித் தலைவி **அம்மா** அவர்கள்

**ஆர். காமராஜ்**
உணவு, இந்துசமயம் மற்றும்
அறநிலையத்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009.

## வாழ்த்துச் செய்தி

"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்ற வைரவரிகளுக்கு இலக்கணமாக தமிழகத்தை தனிப்பெருந் தன்மையோடு ஆட்சி செய்து கொண்டிருக்கும் தெய்வத்தாய் **மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் இதய தெய்வம் புரட்சித்தலைவி அம்மா** அவர்களின் பொற்கால ஆட்சிக் காலத்தில் **திருவண்ணாமலை மாவட்ட** திருக்கோயில்கள் வழிகாட்டி நூல் வெளியிடுவதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

திருவண்ணாமலை மாவட்டத்தில் சைவ, வைணவ திருக்கோயில்கள் பல அமைந்துள்ளன. அத்திருக்கோயில்களுக்கு **மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் இதய தெய்வம் புரட்சித்தலைவி அம்மா** அவர்களின் ஆட்சிக் காலத்தில் பல்வேறு திருப்பணிகள் செய்யப்பட்டு பொலிவுடன் காணப்படுகின்றன. இத்தகைய திருக்கோயில்களை கண்டு களிப்பதற்கும், தரிசிப்பதற்கும் இம்மாவட்ட திருக்கோயில்கள் வழிகாட்டி நூல் மிகுந்த பயன் உள்ளதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

"திருக்கோயில்கள் நம் பண்பாட்டின் கலைக் களஞ்சியங்களாக" விளங்குகின்றன. திருக்கோயில்களில் காணப்படும் கலைநயமிக்க சிற்பங்களை படத்தொகுப்பின் மூலம் பதிக்கப்பட்டுள்ளது கண்டு இன்புறத் தக்கதாகும். இத்தகைய சிறப்பு வாய்ந்த திருவண்ணாமலை மாவட்ட திருக்கோயில்கள் வழிகாட்டி நூலை மிகவும் நேர்த்தியான முறையில் உருவாக்கிய அனைத்து நல் உள்ளங்களுக்கும் எனது மனமார்ந்த வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

(ஆர். காமராஜ்)

முனைவர் **இரா.கண்ணன்**,இ.ஆ.ப.,
அரசு கூடுதல் தலைமைச் செயலாளர்,



சுற்றுலா, பண்பாடு மற்றும்
அறநிலையங்கள் துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை-9.
தொலைபேசி:044-25670820.

## வாழ்த்துரை

தமிழ்நாட்டிலுள்ள திருக்கோயில்களைப் பற்றிய வரலாறுகளை மாவட்ட வரிசையாக எழுதி வெளியிடுவது காலத்தின் தேவையாகவுள்ளது. இதனை ஆன்மீக அன்பர்கள் பெரிதும் எதிர்நோக்கியுள்ளனர். தமிழக நாகரிகம் திருக்கோயில் நாகரிகமே.

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்"

"திருக்கோயிலில்லாத திருவிலூர்
.... ஊரல்ல அடவி காடே"

...என்னும் கருத்தாழம் தமிழக மக்களிடையே அழுந்தி உள்ளது. வாழ்க்கைச் சூழல் மற்றும் கால வளர்ச்சியில் பல்வேறு சிக்கல்களை எதிர்கொள்ள துணியும்போது ஏற்படும் மனச் சலனங்கள் ஆன்மீகத் தேடல்களை அதிகரித்துள்ளன. பாடல் பெற்ற தலங்கள், பரிகாரத் தலங்கள், மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருக்கோயில்கள், இராசித் தலங்கள் என மக்கள் தேவைகளுக்கேற்ற திருத்தலங்களை நோக்கி பயணிக்கத் தொடங்கியுள்ளனர்.

ஒரு கோவிலைப் பார்க்கும்போது அதில் உள்ள கல் சிற்பங்கள், மரச்சிற்பங்கள் மற்றும் பண்டைய ஓவியங்கள் என அக்கோயிலின் தல வரலாற்றை எடுத்துரைக்க அங்கே எவரும் இல்லர். பல கோயில்களில் இராமாயணம், மகாபாரதம், திருவிளையாடல் புராணம் போன்ற காப்பியங்களில் வரும் புராண வரலாற்றுக் காலத்தில் இறைவன் நடத்திய திருவிளையாடல்கள் காட்சிப்படுத்துவதன் மூலம் எடுத்துரைக்கப்படுகின்றன. உதாரணமாக திருநெல்வேலி மாவட்டத்தின் திருப்புடைமருதூர் இராஜகோபுர ஓவியங்கள், திருக்குற்றால சித்ரசபை ஓவியங்கள் போன்றவை. ஆதலால் அதிகாரப்பூர்வமாக வெளியிடப்படும் இவ்வழிகாட்டி நூல் செல்லும் கோயில்களைப் பற்றி அறிவதற்கு இன்றியமையாததாக இருக்கிறது.

மேலும் வெளிநாட்டு, உள்நாட்டு சுற்றுலாப் பயணிகள் குறிப்பாக இந்து மதத்தின் மீதும் இந்தியாவின் பண்டைய கலாச்சாரத்தை அறியவும் தங்கள் பயணத் திட்டங்களை வகுக்கவும் இவ்வழிகாட்டி நூல் நல்ல உறுதுணையாக அமையும்.

மாவட்டந்தோறும் இவ்வழிகாட்டி நூல்கள் இந்து சமய அறநிலையத் துறையினரால் வெளியிட்டமைக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள். எல்லா மாவட்டங்களையும் அடக்கிய மாநில அளவிலான ஒரு வழிகாட்டி நூலையும் மாவட்ட நூல்களைச் சுருக்கி வெளியிட வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு வாழ்த்துகிறேன்.

ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்பது அவ்வை பிராட்டியாரின் நல்லுரையாகும். அறம்காத்த பண்டைத் தமிழ் மன்னர்கள் அறச்சின்னங்களாக ஆலயங்களை எழுப்பி தத்தம் இயல்பிற்கேற்றவாறு பொன்னும் பொருளும் வழங்கி அவைகளைப் பண்பு களஞ்சியங்களாக உருவாக்கி வைத்துள்ளனர். அண்டை நாட்டார் வந்து வியந்து போற்றும் கவின்கலை சிற்பங்களையும், ஓவிய கலைகளையும் ஒவ்வொருவரும் கண்டு பேருவுவகை கொள்ள வேண்டிய ஒன்றாகும். திருக்கோவிலின் தொன்மை கருதி மாவட்டந்தோறும் உள்ள திருக்கோயில்களுக்குச் சென்று கண்ணாறக் கண்டு நெக்குருகி நின்று நினைந்தேத்தி வழிபட ஏதுவாக மாவட்டக் கையேடு தலவரலாற்றோடு வெளியிடுவது பக்தர்களுக்கு உள்ளங்கை நெல்லிக் கனியாகும்.

இக்கையேடு வெளியிடுவதற்குத் தலவரலாறு முதல் அப்பகுதி திருக்கோயில்களின் தனிச்சிறப்புகள் வரை கொடுத்துதவி, மாவட்டந்தோறும் இந்நூல் வெளியிட உறுதுணை புரிந்த அத்துணை அன்பர்களுக்கும் வாழ்த்துக்கள்.

ரா கண்ணன்
28/05/2014

(முனைவர் ரா. கண்ணன்)

முனைவர் **மா. வீர சண்முக மணி**, இ.ஆ.ப.,
ஆணையர்,
இந்து சமய அறநிலையத்துறை.



119, உத்தமர் காந்தி சாலை,
நுங்கம்பாக்கம்,
சென்னை-600 034.
அலுவலகம் : 044-2833 4815
நிகரி : 044-2833 4816
மின்னஞ்சல் : tn.endowments@ gmail.com

## வாழ்த்துரை

கர்ம மார்க்கம், பக்தி மார்க்கம், ஞானமார்க்கம் என்ற மூன்றினில் பக்தி மார்க்கம் ஒன்றே வெகு எளிதாக யாவராலும் பின்பற்றக் கூடியது. உலக வாழ்க்கையில் நமக்குத் தேவையான ஆயுள், ஆரோக்கியம், மன அமைதி இவற்றை அளிப்பதோடு மீண்டும் பிறவாப் பேறு எளிதில் அளிக்க வல்லது பக்தி மார்க்கம். இதில் அவரவர் வாழ்வியல் வேட்கையினால் அவர் அடைந்த பாவ புண்ணியத்தை எளிதில் கணக்கிட இயலாது. தன்னால் காண இயலாத வாழ்வின் சூக்குமங்களை உணரவும், புண்ணியங்களைத் தேடி புனிதத்தலங்களை நாடவேண்டிய கட்டாயமும் ஒவ்வொருவருக்கும் ஏற்பட்டுள்ளது.

அரிதரிது மானிடராய் பிறத்தலரிது என்பதற்கிணங்க எடுத்த பிறவியை பயனுள்ளதாக்கி கொள்ள வேண்டும். அதற்கானத் தேடல்களை உருவாக்க வேண்டும்.

இறைவனின் நாமம் ஆற்றல் மிக்கது; அத்தகைய நாமங்கள் பல கொண்டுள்ள கடவுளரை வேண்டி கடுந்தவம் புரிந்து அவனது கருணைக்கு பாத்திரமானவர்களைப் பற்றிக் கேட்டும் படித்தும் தெரிந்து கொண்டிருக்கிறோம். இத்தகைய தவம் சாதாரண மக்களாகிய நமக்கு எளிதாகக் கைகூடாது. புத்தியைக் கொண்டு இறைவனை அறிதலும் சாத்தியமானதன்று. கடவுளரின் அருளாசி பெற திருத்தல வழிபாடு ஒன்றே எளிதான வழி.

யோகங்கள் பயின்று முத்தியை நாடுபவர் வெகு சிலரே. அது மிகவும் கடினமான பாதை கர்மயோகம் பயின்று ஞானம் பெறலாம். அதன் பின்னர் ஞானயோகம் பயின்று முக்திக்கு வழிதேடலாம். இதனை அடைய எத்தனையோ சோதனைகளைக் கடந்து வரவேண்டியுள்ளது. நடைமுறையில் திருத்தல வழிபாடே காலத்திற்கேற்ற எளிதான வழி. இதற்கு இந்நூல் பெரிதும் வழிகாட்டும். இந்நூல் வெளியிட உறுதுணையாய் இருந்த அத்துனை அலுவலர் மற்றும் ஆன்மிக அன்பர்களுக்கும் வாழ்த்துக்கள்.

(முனைவர் **மா. வீர சண்முக மணி**)

**இரா. செந்தில் வேலவன்**, பி.எஸ்ஸி., பி.எல்.,
இணை ஆணையர்,
இந்து சமய அறநிலையத் துறை,
விழுப்புரம்.

## முகவுரை

உபநிடத சுலோகம் ஒன்றில் இறைவன் முழுமையானவர், இந்தப் படைப்புக்களும் முழுமையானவை. முழுமையான இறைவனிடமிருந்து முழுமையான படைப்பு தோன்றியுள்ளது. முழுமையிலிருந்து முழுமையானது பிரிந்த பின்பும் முழுமையே எஞ்சியுள்ளது என குறிப்பிடப்பட்டுள்ளது.

அக்கினியிலிருந்து கற்பூரம், தீப்பந்தம் முதலானவற்றை ஏற்றியபிறகும் மூல அக்கினியின் தன்மை எங்ஙனம் மாறாமல் உள்ளதோ அங்ஙனமே இறைவன் தன்னிலிருந்து விநாயகன், முருகன், திருமால், பிரமன் முதலான கடவுளர்களாகத் தன்னைப் பிரித்துக் கொண்டாலும் தனது அருட்தன்மை சற்றும் குறையாது என்றும் முழுமையாகவே விளங்குகின்றான் என்பதாக பெரியோர்களால் உணரப்பட்டுள்ளது.

உருவமாகவும், அருவமாகவும், அருவுருவமாகவும் அருளும் அந்த இறைவனை ஒளிவடிவினராக, சோதி ரூபத்தினராகப் பாவித்துப் பலரும் பாடியுள்ளனர். "எரியலால் உருவமில்லை" என்று தேவாரமும். "சோதியே சுடரே" என்று திருவாசகமும் "அலகிற் சோதியன்" என்று பெரியபுராணமும் இறைவனின் வடிவினைப் பற்றித் தெரிவிக்கின்றன.

தம்முள் யார் பெரியவர் என்று பிரமன், திருமால் ஆகிய இருவரும் மாறுபட்டிருந்தபோது அவ்விருவருக்குமிடையே ஆதியந்தமிலா அருட்பெருஞ்சோதியாகச் சிவபெருமான் எழுந்தருளிய பின்னர் யாவரும் அணுகவியலா அண்ணாமலையெனும் அணிமலையாகி நின்றார். உயிர்கள் பிறவிக்கடலைக் கடக்கும் பொருட்டு அருவுருவத் திருமேனி கொண்டு அருணாச்சலேசர் எனும் திருப்பெயர் கொண்டு அருளாட்சி புரிந்து வருகின்றார். நினைத்தாலே முக்திப்பேற்றை வழங்கும் திருவண்ணாமலை எனும் இந்தத் திருத்தலத்தின் பெருமைகள் அளவிடற்கரியனவாம்.

புராணச் சிறப்புகளும், வரலாற்றுப் பெருமைகளும் உடைய திருவண்ணாமலை மாவட்டத்தின் தலைநகராகவும் விளங்குகின்றது. இந்த மாவடத்தில் சைவ, வைணவத் திருக்கோயில்கள் பல உள்ளன.

சங்க காலத்தில் நன்னன் சேய் நன்னன் எனும் அரசன் செங்கண்மா எனும் செங்கம் நகரினைத் தலைமை இடமாகக் கொண்டு ஆட்சி புரிந்தான். அவனது குலதெய்வக் கோயிலாக நவிரமலை எனும் பருவதமலைக் கோயில் விளங்கியது. பல்லவ மன்னன் முதலாம் மகேந்திரவர்மனின் கலைத்திறனுக்குச் சான்றாக மாமண்டூர் மற்றும் சீயமங்கலம் குகைக்கோயில்கள் உள்ளன. தெள்ளாற்றெறிந்த நந்திவர்மன் திருப்பணி செய்த தெள்ளாறு சிவன் கோயிலும் வெண்குன்றம் மலைக்கோயிலும் பல்லவ மன்னர்களின்

சமயப் பற்றுக்குச் சான்று பகர்கின்றன. சம்புவராய மன்னர்களின் தலைமையிடமாக அ.கோ.படைவீடு திகழ்ந்தது. அங்குள்ள பல கோயில்களும், தேவிகாபுரம், நெடுங்குன்றம் ஆகிய ஊர்களில் உள்ள கோயில்களும் சம்புவராய மன்னர்களின் கலைத் திறனுக்குச் சான்றாக மிளிர்கின்றன.

திருஞானசம்பந்தர் ஆண்பனையைப் பெண் பனையாக மாற்றியருளிய அற்புதம் நிகழ்த்திய திருத்தலமாக திருவோத்தூர் உள்ளது. குரங்கு அணில், காகம் ஆகிய உயிரினங்கள் வழிபட்ட குரங்கணில் முட்டம் எனும் தலமும், சுந்தரர் பெருமான் பாடியருளிய திருப்பனங்காடு எனும் தலமும் சிறப்பான வரலாறுகளைத் தெரிவிக்கின்றன. குழந்தைப்பேற்றையருளும் பிரார்த்தனைத் தலமாக ஆவணியாபுரம் உள்ளது. பக்தர்கள் கூழமந்தல் பேசும் பெருமாளை வழிபட்டு பேசும் குறைகளை நிவர்த்தி செய்து செல்கின்றனர். இம்மாவடத்தில் இன்னுமுள்ள பல கோயில்கள் பற்பல வரலாறுகளையும் அற்புதங்களையும் கொண்டு இன்றளவும் செம்மாந்து விளங்குகின்றன.

இவ்வாறு சிறப்புக்கள் பலவற்றைக் கொண்டு திகழும் திருவண்ணாமலை மாவட்டத்திலுள்ள முக்கிய திருக்கோயில்களின் விவரங்கள் இந்தத் திருக்கோயில் வழிகாட்டி நூலில் உள்ளன. இந்த நூலிற்கு வாழ்த்துரை வழங்கிய மாண்புமிகு இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு. இரா. காமராஜ் அய்யா அவர்களுக்கும், அரசுக் கூடுதல் தலைமைச் செயலாளர் முனைவர் இரா. கண்ணன் இ.ஆப., அவர்களுக்கும் பணிவான நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இந்நூலினைச் சிறப்பாக உருவாக்க எல்லா வகையிலும் ஆலோசனை வழங்கி ஆற்றுப்படுத்திய இத்துறையின் ஆணையர் முனைவர். ப.மு.வீரசண்முகமணி, இ.ஆ.ப. அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியினையும், வணக்கத்தினையும் உரித்தாக்குகின்றேன்.

இந்த நூல் வெளிவர உதவிகள் புரிந்த உதவி ஆணையர் திருமதி. த.வேதா அவர்களுக்கும், திருக்கோயில் வரலாறுகளைத் தொகுத்தும் எழுதியும் நூலினைச் செவ்வனே உருவாக்கிய ஆவணியாபுரம். அருள்மிகு இலட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயிலின் செயல் அலுவலர் சோ. செந்தில்குமார் மற்றும் திருக்கோயில்கள் பற்றிய விவரங்களை வழங்கிய அனைத்து செயல் அலுவலர்கள், ஆய்வர்கள், திருக்கோயில் பணியாளர்களுக்கும் எனது நன்றிகளைத் தெரிவிக்கின்றேன்.

இம்மாவட்டத்திற்கு வருகை தரும் பக்தர்களுக்கும், சுற்றுலா பயணிகளுக்கும் இந்த நூல் சிறந்த வழிகாட்டியாக இருக்கும் என்று நம்புகின்றேன். இதனை அனைவரும் பெற்று, பயன்பெற்று இறைவனின் திருவருளை அடைய எல்லாம் வல்ல அண்ணாமலையாரை இறைஞ்சுகின்றேன்.

இணை ஆணையர்

# பொருளடக்கம்



**அருள்மிகு கற்பக விநாயகர் திருக்கோயில்,**
திருவண்ணாமலை.

இறைவன் : அருள்மிகு கற்பக விநாயகர்

## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் திருவண்ணாமலை பேருந்து நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவிலும், இரயில் நிலையத்திலிருந்து 2 கி.மீ. தொலைவிலும் திருவூடல் தெருவில் அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

திருவண்ணாமலை

## திருத்தல வரலாறு

திருவண்ணாமலையைச் சேர்ந்த வணிகரொருவர் மாதந்தோறும் பிள்ளையார்பட்டி சென்று கற்பக விநாயகப் பெருமானை வழிபட்டு வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். ஒரு சமயம் அவருக்குத் தீராத நோய் ஏற்பட்டது. குறித்த காலத்தில் பிள்ளையார்பட்டி செல்ல இயலாமல் வருந்திய அவர் நாள்தோறும் பெருமானை நினைந்துருகிக் கண்ணீர் மல்க வேண்டினார். அப்பா கணேசா! நான் உன்னைத் தரிசிக்கவியலாமல் சித்தங்கலங்கி

பித்தனானேன். அத்தா! அருளாளா! எளியேனுக்கு அருள்செய்ய மாட்டாயா! என்று நெஞ்சுருக வேண்டினார். ஒருநாள் அவரது கனவில் விநாயகர் தோன்றி, தமக்கு அருணையம்பதியில் திருக்கோயில் ஒன்று எழுப்புமாறு அருளிச் செய்தார். மறுநாள் கண் விழித்துப் பார்க்கையில் நோயெல்லாம் தீர்ந்து முன்பைவிட உடல் பொலிவுபெற்று அவ்வணிகர் திகழ்ந்தார். பின்னர் அவர் திருவூடல் தெருவில் கற்பக விநாயகப் பெருமானைத் தாபித்து திருக்கோயில் எழுப்பி விழாக்கள் செய்வித்தார் என்று இக்கோயிலின் வரலாறு தெரிவிக்கின்றது. திருவண்ணாமலையில் கிரிவலம் செல்வோர் இப்பெருமானை வணங்கிச் சென்று மேன்மை பெறுகின்றனர். கிழக்கு நோக்கிய திருக்கோயிலாக இது உள்ளது.

### பூசைகள் மற்றும் விழாக்கள்

இங்கு நாள்தோறும் இரண்டு கால பூசை நடைபெறுகிறது. விநாயக சதுர்த்தி விழா சீரும் சிறப்போடும் கொண்டாடப் படுகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10.30 மணி வரை

மாலை 5 மணி முதல் 8.30 மணி வரை


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்,**

**அருள்மிகு கற்பக விநாயகர் திருக்கோயில்,**

**திருவூடல் தெரு, திருவண்ணாமலை – 606 601.**

**அலைபேசி எண் : 9486463231.**




### அறக்கருணை, மறக்கருணை

இறைவன் உயிர்களை அறக்கருணை, மறக்கருணை ஆகியவற்றால் ஆட்கொள்கின்றான். நல்லவர்களை அறக்கருணையாலும், சூரன் முதலான பொல்லாதவர்களை மறக்கருணையாலும் ஆட்கொள்கிறான்.



**அருள்தரும் உண்ணாமுலையம்மை உடனுறை**
**அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில்,**
திருவண்ணாமலை.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு அருணாசலேசுவரர், அண்ணாமலையார் |
| இறைவி | : | அருள்மிகு அபீதகுசாம்பாள், உண்ணாமுலையம்மை |
| தலவிருட்சம் | : | மகிழம் |
| தீர்த்தம் | : | பிரமதீர்த்தம், சிவகங்கைத்தீர்த்தம் முதலிய தீர்த்தங்கள் உள்ளன. |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

ஞானத் தபோதனர்களை வா என்றழைக்கும் மலை அண்ணாமலை என்று சிறப்பித்து வழங்கப்படும் திருத்தலம் அருணைப் பதியாகும். பஞ்சபூதத் தலங்களில் நெருப்புத் தலமாக விளங்குகின்ற திருவண்ணாமலை எனும் இத்தலம் மாவட்டத்தின் தலைநகரமாகும். நெடுங்காலமாக வடாற்காடு மாவட்டத்தில் ஒரு சிறப்புமிக்க நகரமாக இருந்த இவ்வூர், சிறிது காலத்துக்குமுன் ஏற்பட்ட மாவட்டச் சீரமைப்புப் பிரிவின்படி, திருவண்ணாமலை

என்னும் புதிய மாவட்டமாகப் பிரிக்கப்பட்டு தலைநகராகவும் விளங்குகிறது. தமிழகத்தின் பிற ஊர்களிலிருந்து இத்திருத் தலத்தை இணைக்கும் பெருவழிச்சாலைகள் (High Ways) உள்ளதால் இந்நகரை அடைவது மிகவும் எளிது. இத்தலம் தேவாரப் பாடல் பெற்ற நடுநாட்டுத் தலமாகும். திருவண்ணாமலை பேருந்து நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவிலும், தொடர்வண்டி நிலையத்திலிருந்து 2 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ள இத்திருக்கோயில் வேலூரிலிருந்து 86 கி.மீ. தொலைவிலும், திண்டிவனத்திலிருந்து 60 கி.மீ. தொலைவிலும், விழுப்புரத்திலிருந்து 60 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

### தங்கும் வசதி

இத்திருக்கோயிலில் தங்கும் விடுதிகள் உள்ளன.

### அருணைப்பதியின் திருப்பெயர்கள்

அருணாசலம், சோணாசலம், அண்ணாமலை என்றெலாம் வழங்கப்பெறும் ஒப்பற்ற இப்பதியின் திருப்பெயர்களை அருணாசல புராணம் நவில்கின்றது.

| | | |
|---|---|---|
| விரும்பியவையெல்லாம் சித்திக்கப் பெறுவதால் | - | கௌரி நகரம் |
| ஒளி பொருந்திய தலமாதலால் | - | தேசு நகரம் |
| சூரியனையொத்த செந்நிற (நெருப்பு) மலை உள்ளதால் | - | அருணை நகரம் |
| சிறப்பு பொருந்திய இறைவன் வீற்றிருப்பதால் | - | சிவலோக நகரம் |
| நான்மறையொலி நீங்காது காற்றில் கேட்டுக் கொண்டேயிருப்பதால் | - | வாயு நகரம் |
| வீடுபேற்றை அருளுவதால் | - | முத்தி நகரம் |
| ஞானத்தை வழங்குவதால் | - | ஞான நகரம் |
| முதன்மையான பதியாதலால் | - | தலேச்சுரம் |
| வினைகள் அறுபடுவதால் | - | சுத்த நகரம் |
| கயிலையை ஒத்திருத்தலால் | - | தென் கயிலை |
| சோண(நெருப்பு) மலையாதலால் | - | சோணகிரி |

இவ்வாறு பல பெயர்கள் திருவண்ணாமலைக்கு வழங்கப்படு கின்றன.

## புராண வரலாறு



ஒருசமயம் பிரமன், திருமாலுக்கிடையே தங்களுக்குள் யார் பெரியவர் என்ற சர்ச்சை ஏற்பட்டுச் சண்டையிட்டனர். அவ்வமயம் அவ்விருவருக்கிடையே ஆதியந்தமிலாத பெருஞ் சோதி ஒன்று எழுந்தது. இச்சோதியின் அடிமுடியை எவர் முதலில் கண்டு வருகின்றார்களோ, அவரே பெரியவர் என்று பெருமான் அச்சோதியிலிருந்து அசரீரியாய்க் கூறினர். பிரமன் அன்னப்பறவை உருவெடுத்து சோதியின் திருமுடியைக் காண மேலே பறந்து சென்றான். திருமால் வராக உருவெடுத்து பூமியைக் குடைந்து சென்றார். பல்லாண்டுகள் தேடியும் சோதியின் (இறைவனின்) திருவடியினைக் காண இயலாமல் திரும்பி வந்து திருமால் தோல்வியை ஒப்புக் கொண்டார். திருமுடியைக் காணச் சென்ற பிரமன் எதிரில் வந்த தாழம்பூவிடம், தான் திருமுடியைக் கண்டதாகப் பொய் சாட்சி சொல்லுமாறு கேட்க, தாழம்பூ கீழிறங்கி வந்து பிரமன், இறைவனின் திருமுடியைக் கண்டதாகப் பொய்யுரைத்தது. அப்போது சோதியிலிருந்து பெருமான் காட்சியளித்து, பொய்சொன்ன பிரமனுக்குப் பூலோகத்தில் ஆலயம் அமையாதென்றும், தாழம்பூ சிவபூசைக்கு உதவாதென்றும் சாபமிட்டனர். அதன்பின் பிரமனும், திருமாலும் அகந்தை நீங்கிச் சிவபெருமானே உயர்ந்தவர் என்பதை ஒப்புக்கொண்டு, அவ்விடத்து இலிங்க ரூபமாய் எழுந்தருளுதல் வேண்டும் என்று பெருமானிடம் வேண்டினர். அவ்வேண்டுதலுக்கிரங்கிய பெருமான் இலிங்க ரூபமாய் எழுந்தருள்புரிய, அந்த இலிங்கத்தைப் பிரமனும், திருமாலும் பூசித்து வணங்கினர். பெருமான் அக்னி ஸ்தம்பமாய் நின்ற இடம் அருணாசலமாயிற்று. (அருணம், சோணம் - சிவப்பு, நெருப்பு; அசலம் - மலை; அருணாசலம் - செந்நிற மலை) பெருமானும் அருணாசலேசுவரர் எனும் திருப்பெயர் பெற்றார்.

## இறைவி இடதுபாகம் பெற்றது

கைலையில் ஒரு சமயம் சிவபெருமானின் கண்களை உமாதேவியார் தனது கைகளால் விளையாட்டாக மூட உலகெலாம் இருண்டது. அதனால் உயிர்களெல்லாம் இன்னலுற்றன. அதற்குக் கழுவாயாகத் தேவியார் கச்சியம்பதியில்



மணல் இலிங்கம் ஒன்றினைத் தாபித்துப் பூசை செய்துவரும் வேளையில் பெருமான் தோன்றி, திருவண்ணாமலை சென்று தவமியற்றி தனது இடப் பாகத்தைப் பெறுமாறு அருளிச் செய்தார். அத்திரு வருளின்படி தேவி திருவண்ணா மலையை அடைந்து பவழக்குன்று மலையில் பர்ண சாலை அமைத்து தவஞ்செய்து கார்த்திகைத் தீபநாளன்று பெருமானது இடப்பாகத்தைப் பெற்றனள். அவள் இடப்பாகம் பெற்றதை உணர்த்தும் வண்ணம் கார்த்திகை தீபத்தன்று மாலை வேளையில் இத்திருக் கோயிலின் கொடிமரத்திற்கு முன்பாக அர்த்த நாரீஸ்வரர் எழுந்தருளும் போது மலை உச்சியில் தீபமேற்றப் படுகிறது. இதனை அன்றொருநாள் மட்டுமே தரிசிக்கவியலும்.

### கார்த்திகை தீபச் சிறப்பு

கார்த்திகை மாத முழுநிலவில் வரும் கார்த்திகை தீபம் பற்றி அனைவரும் அறிவர். இவ்விழா சங்க காலத்திலேயே குறிக்கப் பட்டிருக்கிறது. அகநானூறு முதலான நூல்கள் தீப விழாவைச் சிறப்பாகத் தெரிவிக்கின்றன. கார்த்திகை விளக்கிட்டன்ன என்று சீவகசிந்தாமணியும், தலைநாள் விளக்கு என்று கார்நாற்பது எனும் நூலும் செப்புகின்றன. திருஞானசம்பந்தர் மயிலாப்பூரில், பூம்பாவை உயிர் பெற்றெழுப் பாடியபோது, கார்த்திகை விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய் என்று தீபவிழாவைக் குறிப்பிட்டதைக் காண்கிறோம். இவ்வாறு மிகப் பழமையும், பெருமையும் உடைய கார்த்திகை தீபம் என்றாலே நினைவுக்கு வருவது இத் திருவண்ணாமலைத் தலமே ஆகும். அன்று மலை உச்சியில் ஏற்றப்படும் தீபம் தொடர்ந்து பல நாள்கள் எரிவதும்



நெடுந்தொலைவுக்குக் காட்சி தருவதும் தலச்சிறப்புடைய தாகும். கார்த்திகை தீப தரிசனத்தால் இருபத்தொரு தலைமுறைக்கு முத்திப்பேறு கிடைக்கும் என்கிறது அருணாசல புராணம்.



## தனிச்சிறப்பு கொண்ட சந்நிதிகள்

### யானை திறைகொண்ட விநாயகர்

ஒருசமயம் அண்டை நாட்டைச் சேர்ந்த முகிலன் எனும் அரச னொருவன் போரில் திருவண்ணா மலையைக் கைப்பற்றி தனது படைவீரர்களுடன் தங்கியிருக் கையில், அன்றிரவு யானையொன்று அவனையும், அவனது படை வீரர்களையும் விரட்டியடிப் பதாகக் கனவு கண்டான். இது குறித்து மறுநாள் விசாரித்தபோது, விநாயகப் பெருமானால் பாதுகாக்கப்பட்டு வரும் புனிதத்தலத்தின் மீது தவறுதலாகப் போரிட்டுத் தங்கியிருப்பதை உணர்ந்தான். தன் தவற்றை உணர்ந்த அவன் விநாயகப் பெருமானைப் பணிந்து மன்னித்தருளுமாறு இறைஞ்சி, அவருக்குத் தன்னுடைய யானைகளைக் காணிக்கையாக அளித்து தனது நாட்டிற்குத் திரும்பினான். இந்த வரலாற்றைக் கொண்ட பெருமான் யானை திறைகொண்ட விநாயகர் என்னும் திருப்பெயர் பெற்று தல விநாயகராகக் கிளி கோபுரத்தி னடியில் எழுந்தரு ளியுள்ளார்.



### சந்பந்த விநாயகர்

செந்தூரம் வழக்கமாக அனுமனுக்கு மட்டுமே பூசி அலங்கரிக்கப்படும். ஆனால் இத்திருத்தலத்தில் கொடிமரம் அருகிலுள்ள விநாயகருக்கும் செந்தூரம் பூசி அலங்கரிக் கின்றனர். இதற்குப் பின்னணியில் புராண வரலாறு ஒன்றுண்டு. சம்பந்தாசுரன்

என்னும் அசுரனை விநாயகர் வதஞ்செய்து அவனது உதிரத்தைத் தனது திரு மேனியில் ஏற்றுக்கொண்டதால் இவ் விநாயகர் மீது செந்தூரம் பூசி அலங்கரிக்கின்றனர். சித்திரைத் தமிழ் ஆண்டுப்பிறப்பு, விநாயகர் சதுர்த்தி, திருக்கார்த்திகை மற்றும் தை மாதத்தில் ஒருநாள் என முக்கிய நாட்களில் மட்டும் செந்தூரம் சாற்றும் வைபவம் நடைபெறுகின்றது. சம்பந்தாசுரனை வதஞ் செய்ததால் இவர் சம்பந்த விநாயகர் என வழங்கப் படுகின்றார்.

## அருணகிரிநாதர் வரலாறு

திருவண்ணாமலையில் வாழ்ந்த தலைசிறந்த அடியார் பெருமக்களுள் ஒருவர் அருணகிரியார் ஆவர். இவர் இளமைக்காலத்தில் சிற்றின்பத்தில் உழன்று பின் தனது தவற்றை உணர்ந்தவராய் இத்திருக்கோயிலை அடைந்து வல்லாள மகாராசன் கோபுரத்தின்மீது ஏறிச் சென்று உயிரை விடக் கீழே விழுகையில் அவரைக் குன்றெறிந்த குமரக் கடவுள் தனது இரண்டு கரங்களால் தாங்கிப் பிடித்துக் காப்பாற்றி ஆட்கொண்டனர். பின்னர் தனது வேலினால் அருணகிரியாரின் நாவில் ஆறெழுத்து மந்திரத்தை எழுதி, முத்தைத்தரு என்று சொல்லெடுத்துக் கொடுத்துப் பாடும் ஆற்றலை வழங்கியருளிச் செய்தார்.



அதன்பின் அருணகிரிநாதர், எண்தோள் இறைவனின் திருமகன் ஆறிரு தடந்தோள் ஆறுமுகப் பரமனின் அணிமிகு தலங்கள் பலவற்றிற்கும் சென்று திருப்புகழெனும் சந்த கவிமாலை சாற்றியருளினார்.

## கம்பத்திளையனார், கோபுரத்திளையனார்

இராசகோபுரத்தில் நுழைந்தவுடன் முருகப்பெருமான் கம்பத்திளையனார் எனும் திருப்பெயரில் காட்சியருளுகின்றார். சம்பந்தாண்டான் எனும் தேவி உபாசகன், அருணகிரியாரிடம் முருகனை நேரில் காட்டும்படிச் சொல்லி அவரது பக்தியை இகழ்ந்தான். பிரபுட தேவராய மன்னனுக்குக் காட்சியருள வேண்டுமென்று அருணகிரியார் முருகப்பெருமானை வேண்டி நிற்க, அவர் இங்குள்ள 16 கால் மண்டபத்தின் ஒரு கம்பத்தில் காட்சி தந்தருளினார். அதனால் கம்பத்திளையனார் என்று வழங்கப்படுகின்றார். இங்குள்ள வல்லாள மகாராசா கோபுரத்தின் அடியில் கோபுரத்திளையனார் எனும் பெயரிலும் முருகன் கோயில் கொண்டுள்ளார். அருணகிரியார் அக்கோபுரத்திலிருந்து விழுந்து உயிர்விட முயன்றபோது அவரைத் தனது திருக்கரங்களில் தாங்கிக் காப்பாற்றி, திருப்புகழ் பாட அருளியவர் இப்பெருமான்.

## கிளிகோபுரம் வரலாறு

விசயநகர மன்னன் பிரபுட தேவராயர் என்பவன் ஒரு சமயம் கண்பார்வையிழந்து துன்பமுற்றான். பாரிசாதமலரைக் கொண்டு வந்து சிகிச்சை செய்தால் மீண்டும் கண்பார்வை கிடைக்கும் என்றும், இப்பணியைச் செய்ய வல்லவர் அருணகிரிதான் என்றும் மன்னனின் நம்பிக்கைக்குரிய சம்பந்தாண்டான் கூறினான். மன்னரும் அதனையேற்று அருணகிரியாரை அழைத்து, பாரிசாத மலரைக் கொண்டுவருமாறு பணித்தார்.

அருணகிரியார் கூடுவிட்டுக் கூடு பாயும் திறமையால் ஒரு இறந்த கிளியின் உடலுக்குள் தனது உயிரைப் புகுத்தி, மறைவான ஓரிடத்தில் தனது உடலைக் கிடத்தி, தேவருலகில் இருக்கும் பாரிசாதமலரைக் கொண்டுவரப் பறந்து சென்றார். மலரைக் கொண்டு வருவதற்குள் சம்பந்தாண்டானது சூழ்ச்சியால் அருணகிரியாரின் உடல் தகனம் செய்யப்பட்டுவிட்டது. பின்னர் பாரிசாத மலரைக் கொண்டுவந்து மன்னனுக்குப் பார்வை வரும்படி செய்த அருணகிரியார், தனது பூதவுடலை மீண்டும் திரும்பப் பெற முடியாததால் கிளியின் வடிவத்திலேயே அங்குள்ள

கோபுரத்தின்மீது வாழ்ந்திருந்து கந்தரனுபூதி முதலான பாடல்களை இயற்றினார் என்பர். அதனால் அக்கோபுரத்திற்குக் கிளி கோபுரம் என்று பெயர் வழுங்கலாயிற்று.

## அண்ணாமலையார் இறந்தோர்க்குத் திதி செய்தல்

அனைத்து நற்குணங்களும் பொருந்திய வல்லாள மகாராசா என்பவரும், அவரது மனைவியும் குழந்தைப் பேறின்றி வருந்தினர். அண்ணாமலையாரைப் பணிந்து குறையிரந்தனர். பெருமான் அத்தம்பதியினருக்குக் குழந்தையாகத் தோன்றினார். இறைவனின் அருளை வியந்து மகிழ்ந்த அவர்கள் குழந்தையைத் தழுவும்போது மறைந்துவிட்டது. மன்னன் தனது மனக்குறையை வெளிப்படுத்தி கண்ணீர் பெருக வேண்டி நிற்கையில், பெருமான் காட்சியளித்து, மன்னனுக்குண்டான கடமைகளைச் சரிவரச் செய்துவருமாறும், அவனுடைய ஈமக்கிரியைகளைத் தானே செய்வதாகவும் வாக்களித்து மறைந்தருளினார். அத்திரு வாக்கின்படி வல்லாள மகாராசா இறந்தபின் ஆண்டுதோறும் அருணாசலேசுவரப் பெருமானே திதி செய்து வருகிறார். அருணாசலேசுவரர் மாசி மகத்தன்று பள்ளிகொண்டாப்பட்டு எனும் கிராமத்திற்கு எழுந்தருளி அம் மன்னனுக்குச் சம்பிரதாயங்களுடன் திதி கொடுக்கின்றார். இவ்விழா மாசிமக தீர்த்தவாரி எனக் கொண்டாடப்படுகின்றது.

இறந்தோருக்கு ஆண்டுதோறும் திதி செய்தல் என்பது இந்துக்களின் கடமையாகும். இதனைத் திருவண்ணாமலையில் இறைவனே செய்து நமக்கு வழிகாட்டியருளுகின்றார்.

## பைரவர்

இங்கு பிரம தீர்த்தக் கரையில் உள்ள பைரவர் சந்நிதி சிறப்பு வாய்ந்ததாகும். இவரது சிலையை திருவாசியுடன் ஒரே கல்லில் வடித்துள்ளனர். எட்டு திருக்கரங்களில் ஆயுதங்களை ஏந்தியும், கபால மாலை தரித்தும் தலையில் பிறை சந்திரன் சூடியும் கம்பீரமாகக் காட்சியருளு கின்றார். அட்டமியன்று சிறப்பு வழிபாடு இங்கு செய்யப்படுகின்றது.



## திருக்கோயில் அமைப்பு

கிழக்கு நோக்கியுள்ள இராசகோபுரத்தில் நுழைந்தவுடன் வலதுபுறம் ஆயிரங்கால் மண்டபமுள்ளது. அங்கு இரமண மகரிஷி தியானித்திருந்த பாதாள லிங்கேசுவரரைத் தரிசிக்கலாம். இராசகோபுரத்திற்கு இடதுபுறம் கம்பத்திளையனார் சந்நிதி உள்ளது. இங்குதான் முருகன், பிரபுட தேவராய மன்னனுக்குக் காட்சியளித்தார். இதற்குத் தெற்குப்புறமாக சிவகங்கை தீர்த்தம் அமைந்துள்ளது. இதன் மேல்புறம் சர்வசித்தி விநாயகர் சந்நிதியும் அருகில் பெரிய நந்தியும் உள்ளது. நந்திக்கெதிராகத் தென்படும் கோபுரம் வல்லாள மகாராசன் கோபுரம் எனப்படுகிறது. இதன் முன்பு வலப்புறம் கல்யாண சுந்தரேசுவரர் சந்நிதியும் இடப்புறம் கோபுரத்திளையனார் சந்நிதியும் காணப்படுகின்றன.

வல்லாள மகாராசன் கோபுரத்தைக் கடந்தவுடன் அடுத்து கிளி கோபுரம் அமைந்துள்ளது. இதனடியில் புடைப்புச் சிற்பமாக யானை திறை கொண்ட விநாயகர் காட்சியருளுகின்றார். கோபுரத்தின் உட்புறமாகச் சென்றால் எதிர்ப்படுவது பதினாறுகால் மண்டபம். இம்மண்டபத்தில்தான் கார்த்திகை தீப விழாவன்று மாலை வேளையில் பஞ்சமூர்த்திகள் எழுந்தருளுகின்றனர். அடுத்து பிரகாரத்தின் தென்புறம் தலவிருட்சமாகிய மகிழமரம் உள்ளது. பிரகார வடகிழக்கு திசையில் காளத்தீசுவரர், ஏகாம்பரேசுவர், ஜம்புகேசுவரர், சிதம்பரேசுவரர், பிடாரியம்மன் ஆகிய சந்நிதிகள் உள்ளன.



பதினாறுகால் மண்டபத்திற்கு முன்பு பலிபீடம், கொடிமரம், நந்திதேவர் ஆகியவற்றைக் கடந்து உள்ளே செல்கையில் காணப்படுகின்ற உட்பிரகாரத்தில் 63 நாயன்மார்களும் உள்ளதைக் காணலாம். உற்சவர் சந்நிதி, வேணுகோபால சுவாமி சந்நிதி, கஜலட்சுமி சந்நிதி, சண்முகர் சந்நிதி, வடபுறம் பைரவர் சந்நிதி, பள்ளியறை, நடராஜர் சந்நிதி, ஆகியன உள்ளன. கருவறையில் ஆதியந்தமிலா அருட்பெருஞ் சோதியான அருள்மிகு அருணாசலேசுவரர் இலிங்கத் திருமேனி கொண்டு காட்சியருளுகின்றார் பிரம்மன், திருமால் கண்டறியா எம்பெருமானின் தரிசனம் பிறவித் துன்பத்தைப் போக்குவதாகும். அவ்வருட்பெருங்கடலைத் தரிசித்துவிட்டு வருகையில் வடக்கு பிரகாரத்தில் அமைந்துள்ள வைகுண்ட வாசல் வழியாக வெளியேவந்து அருள்மிகு அபீதகுசாம்பாள் சந்நிதியை அடையலாம். அடிமுடிகாணா அண்ணலின் தரிசனமும், உண்ணாமுலையம்மனின் தரிசனமும் வாய்க்கப்பெற்றோர் பெரும் பேறுகள் சொல்லிலடங்கா.

விசுவாமித்திரர், அகத்தியர், பதஞ்சலி, வியாக்கரபாதர், துருவாசர் போன்ற முனிவர்கள் வழிபட்ட தனித்தனி சிவலிங்கங்களும் இன்னபிற சந்நிதிகளும் இத்திருக்கோயிலில் காணப்படுகின்றன.

## கோபுரங்கள்

தென்னிந்தியாவின் இரண்டாவது உயர்ந்த கோபுரமாக கிழக்கு கோபுரம் உள்ளது. பதினொரு நிலைகளைக் கொண்டுள்ள இதன் உயரம் 217 அடி ஆகும். கிருஷ்ண தேவராய மன்னனால் இக்கோபுரம் அமைக்கப்பெற்றது. கோயிலுக்கு மேற்குப் புறமுள்ளது பேகோபுரம் எனப்படும். தென்புறம் உள்ளது திருமஞ்சன கோபுரம் என்று வழங்கப் படுகிறது. திருமஞ்சனத் திற்கான தீர்த்தம் இக்கோபுரத்தின் வழியாகக் கொண்டு செல்வதால் அப் பெயர் பெற்றது. வடபுற முள்ள கோபுரம் அதனை அமைத்தவர் பெயரால் அம்மணியம்மன் கோபுரம் என்று



வழங்கப்படுகிறது. நாற்புறமும் உயர்ந்தோங்கிய கோபுரங்களையுடைய இத்திருக்கோயிலில் வல்லாள மகாராச கோபுரம், கிளி கோபுரம் என இன்னபிற கோபுரங்களையும் சேர்த்து 9 கோபுரங்கள் உள்ளன.

## கலைச் சிறப்பு

கோபுரங்களின் நுழைவாயிலில் உள்ள நடன மங்கையர் சிற்பங்கள் கண்களைக் கவர்கின்றன. விசயநகர மன்னர்கள் ஆடல் கலையைப் போற்றி வளர்த்தமையை அவை நமக்கு உணர்த்துகின்றன.

கிழக்கு கோபுரம் வழியாக உள்ளே நுழைந்தவுடன், இடதுபுறமுள்ள கம்பத்திளையனார் சந்நிதியின் முன் மண்டபத் தூணொன்றில் உள்ள சங்கிலி போன்ற சாளரம் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றது. அதைக் கண்டுகளித்து அந்த சந்நிதியை வலம் வருகையில் பின்புறமுள்ள 16 கால் மண்டபத்தின் தூணொன்றில் யானையை அடக்கும் சிம்மத்தின் மீது தேவி அமர்ந்துள்ள சிற்பம் சிறப்பாக அமைந்துள்ளது.

அம்மண்டபத்திற்கு வடதிசையில் ஆயிரங்கால் மண்டபம் உள்ளது. இதில் உள்ள ஒவ்வொரு தூணும் ஒரு கதை சொல்லும். இவற்றைக் கண்டுகளித்துச் செல்கையில், அடுத்து நந்திதேவரின் பெரிய கற்றிருமேனியுள்ளது. அவர் வீற்றிருக்கும் மண்டபத்திலும் வியப்பிலாழ்த்தும் புராணச் சிற்பங்கள்!

அவற்றையெல்லாம் கண்டு வல்லாள மகாராச கோபுரம், கிளி கோபுரம் ஆகியவற்றைக் கடந்து உள்ளே சென்று செந்தூர விநாயகரின் சந்நிதியினை அடையலாம். இச் சந்நிதி முன்புள்ள மண்டபத் தூண்கள் காணக் கிடைக்காத கலைப்பெட்டகங்களாக மிளிர்கின்றன. அவை பாதுகாக்கப்பட வேண்டிய கலைப் பெட்டகங்கள்! தூணில் அமைந்துள்ள சாளரங்களில் நுணுக்க



மான வேலைப் பாடுகளுடன் நடன மங்கையர் சிற்பங்கள் உள்ளமை வியப்பின் எல்லைக்கே நம்மை அழைத்துச் செல்லும்! சாளரங்கள் மட்டுமா பேசுகின்றன? அந்தத் தூணில் நுண்ணிய சிற்பங்களாக அடியார்கள் வரிசையாக உள்ளனர். அதற்கு மேல் சர்பங்கள் வரிசையாக உள்ளன. அதற்கும் மேல் முனிவர்கள் வரிசை, சங்கிலித் தொடர், மீண்டும் அடியார்கள் வரிசை என்ற அமைப்புடன் காணப்படுகின்றது.

பண்டைத் தமிழர் கல்லைக் கலையாக்கி, கலையைக் கோயிலாக்கி, கோயிலைத் திருக்கோயிலாக்கி, நட்ட கல்லைப் பேச வைத்துள்ளனர். அவற்றைக் காப்பது நமது கடமையன்றோ!

அடுத்து ரிஷி கோபுரத்துள் நுழைந்தவுடன் வலதுபுறம் தென்படும் தூணின் மேல்பகுதியில் யாளிச் சிற்பத்தின் திறந்த வாயிலிருந்து தொங்கும் கற்சங்கிலி தமிழர்களின் சிற்பக் கலைத் திறனுக்கோர் எடுத்துக்காட்டாகும். கருவறைக்கு முன்புள்ள மகா மண்டபத்தின் இருபுறங்களிலும் சுமார் 12 அடி உயரமுள்ள துவார பாலகர்கள் மிரள வைக்கும் தோற்றத்துடன் கம்பீரமாக உள்ளனர். அதற்கடுத்து உண்ணாமுலையம்மன் சந்நிதி முன்புள்ள மகாமண்டபத்தில் ஒவ்வொரு தூணிலும் உள்ள தெய்வச் சிற்பங்கள் காண வேண்டிய ஒன்றாகும். எமன் பாசக் கயிற்றை வீசுதல், மார் கண்டேயன் இலிங்கத்தைத் தழுவுதல், பெருமான் தோன்றி எமனை உதைத்தல் என அம்மண்டபத்தின் முன்புறமுள்ள தூணொன்றில் புராண வரலாற்றைத் தெரிவிக்கும் சிற்பமுள்ளது கண்டு வணங்க வேண்டிய ஒன்றாகும்.



அடுத்து மகிழ மரத்திற்குப் பின்புறம் பரந்து விரிந்த கல்யாண மண்டபத்தில் பழங்கால ஓவியங்கள் காணப் படுகின்றன. உருளை வடிவத் தூண்கள், சதுரத் தூண்கள் என அனைத்து விதமான தூண்களுடன் அமைந்துள்ள இம்மண்டபம் ஓவியக் கூடமோ எனும் ஐயப்பாட்டை ஏற்படுத்துகின்றது.

இவ்வாறு சிற்பக் கலை, ஓவியக் கலை ஆகிய அனைத்தும் நிறைந்த கலைக் கோயிலாகவும், அண்ணாமலையார் கோயில் திகழ்கின்றது. இதனுள் உள்ள கலைச் சிறப்பை நவில ஒரு நா போதாது. இவற்றையெல்லாம் முழுமையாகக் கண்டுகளிக்க ஒரு நாளும் போதாது. நினைத்தாலே முத்தி தரும் அருணைப்பதி அண்ணலை நேரில் தரிசித்து பண்டைத் தமிழரின் கருவூலங்களான சிற்பங்களையும் கண்டுகளித்து பிறப்பின் பயனை முழுமையாக அடையலாம்.

## மகான்களும், சித்தர்களும்

இப்புண்ணிய பூமியில் எண்ணற்ற மகான்களும், சித்தர்களும் வாழ்ந்தார்கள் என்றும், இன்றும் பல சித்தர்கள் வாழ்கின்றனர் என்றும் கூறுவது உண்டு. எனவே இது ஞான பூமி எனக் கூறப்படும். புகழ்பெற்ற இரமண மகரிஷி வாழ்ந்த - தோற்றுவித்த ஆசிரமம் மலைவலப்பாதையில் காட்சியளிப்பதைக் காணலாம். குகை நமசிவாயர், குரு நமசிவாயர், சேஷாத்திரி மகரிஷி, விசிறிச் சாமியார் முதலானோர் வாழ்ந்து பல அற்புதங்கள் நிகழ்த்திய தலம் இத்தலம்.

## அண்ணாமலையாரின் கிரிவலம்

அருள்மிகு அருணாசலேசுவரர், உண்ணாமுலை யம்மையுடன் தீபத்திருவிழாவிலும், தை மாட்டுப் பொங்கல் நாளிலும் மலை வலம் கண்டருளுகின்றார். இறைவனே செய்யும் இந்த கிரிவலத்திற்கு வாழ்வில் ஒருமுறையேனும் நாமும் சென்று பயன்பெறுதல் வேண்டும். எண்ணிலா முனிவர்கள், சித்தர்கள், பக்தகோடிகள் கிரிவலம் வந்து பயன்பெற்றுள்ளனர். கிருதயுகத்தில் அக்னி மலையாகவும், திரேதாயுகத்தில் மாணிக்க மலையாகவும், துவாபரயுகத்தில் பொன் மலையாகவும், கலியுகத்தில் கல்மலையாகவும் சுமார் 2668 அடி உயரத்துடன் காட்சியளிக்கும்

இம்மலையினை மாதந்தோறும் பௌர்ணமியன்று இலட்சக்கணக்கில் பக்தர்கள் வலம்வந்து வழிபடுவது இத்தலத்திற்கே உரிய சிறப்பாகும். முழு நிலவொளியில் மூலிகைக் காற்றின் வாசத்தை நுகர்ந்து சுமார் 14 கி.மீ. தூரம் கிரிவலம் வருவது மனத்திற்கும், உடலுக்கும் நன்மை பயப்பதாகும் என்பது விஞ்ஞானபூர்வ உண்மையாகும். எண்ணிறந்த தீர்த்தங்களும் மலைசுற்றும் பாதையில் உள்ளன.

## அஷ்டலிங்கங்கள்

இந்திரன், அக்னி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்போர் எட்டு திசைகளுக்கும் காவல் தெய்வங்களாக விளங்குகின்றனர். அஷ்டதிக்கு பாலகர்கள் என வழங்கப்படும் இவர்கள் அருணாசலேசரைப் பணிந்து கிரிவலம் வந்து தங்கள் பெயரால் இலிங்கங்களைப் பிரதிட்டை செய்து பூசித்தனர். அவை, இந்திரலிங்கம், அக்னிலிங்கம், எமலிங்கம், நிருதிலிங்கம், வருணலிங்கம், வாயுலிங்கம், குபேரலிங்கம், ஈசானியலிங்கம் என்ற பெயர்கள் கொண்டு தனித்தனி கோயில்களாக மலையைச் சுற்றி அமைந்துள்ளன.

## திருமுறைத் தலம்

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர், முதலிய பெருமக்கள் அண்ணாமலையாரைப் பணிந்து திருப்பாடல்கள் அருளிச் செய்துள்ளனர்.

திருஞானசம்பந்தர் அறையநல்லூரை அடைந்து பரமனைப் பணிந்து பதிகமாலைச் சாற்றி அக்கோயிலை வலம் வருகையில், அடியார்கள் அண்ணாமலையைக் காட்டிட, பிள்ளையாரும், அண்ணாமலையை அடைந்து பெருமானைப் பாடிப் பரவினார். அண்ணாமலையைத் தொழுவாரது வினைகள் அற்று வீழும் என்றருளிச் செய்தார்.

உண்ணாமுலை உமையாளொடும்
உடனாகிய ஒருவன்
பெண்ணாகிய பெருமான்மலை
திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள்
மழலைம் முழவு அதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை
வழுவாவண்ணம் அறுமே. (திருஞானசம்பந்தர்)

திருநாவுக்கரசு பெருமானும் அண்ணாமலையாரைத் தொழுதால் வினைகள் கெட்டொழியும் என்றருளியுள்ளார்

பட்டி ஏறுகந்து ஏறிப் பலஇ(ல்) லம்
இட்ட மாக இரந்துண்டு உழிதரும்
அட்ட மூர்த்தி யண்ணாமலை கைதொழக்
கெட்டுப் போம்வினை கேடில்லை காண்மினே. (திருநாவுக்கரசர்)

மாணிக்கவாசகப் பெருமான் திருவண்ணாமலைக்கு வந்து பலகாலம் தங்கியிருந்து திருவெம்பாவை அருளிச் செய்தார். கிரிவலப்பாதையில் அடியண்ணாமலை எனுமிடத்தில் மாணிக்கவாசகருக்கு ஒரு கோயில் இருப்பதைக் காணலாம்.

அடியார் பெருமக்கள் பாடிப் பரவிய அருணைப் பதியானது நினைத்தாலே வீடுபேற்றையளிக்கும் தலமாகும். இதனை நேரில் தரிசிப்போர் பெரும்பேறுகளைச் சொல்லவுமெளிதோ!

### சேக்கிழார் பார்வையில் திருவண்ணாமலை

சீரின் மன்னிய பதிகமுன் பாடிஅத் திருஅறை யணிநல்லூர்
வாரின் மல்கிய கொங்கையான் பங்கர்தம் மலைமிசை வலங்கொள்வார்
பாரின் மல்கிய தொண்டர்கள் இமையவர் நாடொறும் பணிந்தேத்தும்
காரின் மல்கிய சோலைஅண் ணாமலை அன்பர்காட் டிடக்கண்டார்

(பெ.புரா.969)

திருஞானசம்பந்தர் அறையணிநல்லூரை அடைந்து பெருமானைப் பணிந்தேத்திப் பின் அம்மலையினை வலம் வருகையில் அடியார்கள் காட்டிட அண்ணாமலையைக் கண்டார். அம்மலையின் திருக்காட்சியானது, தேவர்களுக்கு இறைவனாக விளங்கும் சிவபெருமானின் வடிவுபோன்று ஞானசம்பந்தருக்குத் தோற்றமளித்தது என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிட்டுள்ளார்.

அண்ணா மலைஅங் கமரர்பிரான் வடிவுபோன்று தோன்றுதலும்

(பெ.புரா.970)

தேவர்களுக்கெல்லாம் இறைவனாகிய அந்த ஆதிதேவர் வீற்றிருக்கும் திருவண்ணாமலையினை வாகீசர் அடைந்து பண் நிறைந்த தமிழ்ப்பதிகங்களைச் சாற்றி வழிபட்டு உழவாரப்பணி செய்து வந்தார். இதனை அருண்மொழித்தேவர் இன்தமிழால் இயம்புகின்றார்.

அண்ணா மலைமேல் அணிமலையை ஆரா அன்பின் அடியவர்தங்
கண்ணார் அமுதை விண்ணோரைக் காக்கக் கடலில் வந்தெழுந்த
உண்ணா நஞ்சம் உண்டானைக் கும்பிட் டுருகுஞ் சிந்தையுடன்
பண்ணார் பதிகத் தமிழ்பாடிப் பணிந்து பரவிப் பணி செய்தார்.

(பெ.புரா.313)



உழவாரப் பணியே சிவத் தொண்டாகக் கருதி பல தலங்களில் பணி செய்த திருநாவுக்கரசர் திருவண்ணாமலையிலும் தங்கி அப்பணியினைத் தொடர்ந்ததைப் பெரிய புராணம் வாயிலாக நாம் அறிகின்றோம்.

## இலக்கிய சிறப்பு

இத்தலத்தின் வரலாற்றைக் கூறும் அருணாசல புராணம், அருணைக் கலம்பகம் ஆகிய நூல்களைச் சைவ எல்லப்ப நாவலர் என்பவர் பாடியுள்ளார். குமரகுருபர சுவாமிகள் இயற்றிய சோன சைலமாலை என்பது ஒரு சிறந்த பாராயண நூல் ஆகும். புகழ்பெற்ற முருகபக்தராகிய அருணகிரியார் வாழ்ந்து பல விந்தைகள் புரிந்ததும் திருப்புகழ் பாடல்கள் கொண்டதும் இத்தலமாகும்.

| | | |
|---|---|---|
| நமச்சிவாய சுவாமிகள் | - | சாரபிரபந்தம் |
| திருச்சிற்றம்பல நாவலர் | - | அண்ணாமலையார் சதகம் |
| பல்லாவரம் சோணசல பாரதியார் | - | அண்ணாமலை கார்த்திகை தீபவெண்பா, சோணாசலவெண்பா, திருவருணைக் கலிவெண்பா, சோணாசல சதகம் |
| இராமலிங்க சுவாமிகள் | - | திருவண்ணாமலை திருவருட்பதிகம் |
| புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியார் | - | அருணாசலேசுவரர் பதிகம் |
| காஞ்சிபுரம் சபாபதி முதலியார் | - | அருணாசல பதிகம் |
| யாழ்பாணம் நல்லூர் தியாகராஜபிள்ளை | - | அண்ணாமலையார் வண்ணம் |

இவையன்றி மேலும் நூல்கள் பல உள்ளன.

## பூசைகள்

இத்திருக்கோயிலில் காமிக ஆகமப்படி நாள்தோறும் ஆறுகால பூசைகள் செய்யப்படுகின்றன. அதிகாலை 5 மணியளவில் கோயில் திறக்கப்பட்டு கோபூசை செய்யப்படுகின்றது.

| நேரம் | பூசை விவரம் |
|---|---|
| காலை 5.30 மணி | உஷக்கால பூசை |
| காலை 8.00 மணி | காலசந்தி பூசை |
| முற்பகல் 11.30 மணி | உச்சிகால பூசை |
| மாலை 5.30 மணி | சாயரட்சை பூசை |
| இரவு 7.30 மணி | இரண்டாம்கால பூசை |
| இரவு 9.00 மணி | அர்த்தசாம பூசை |

இவையன்றி பஞ்சபருவ பூசைகளும் நடைபெறுகின்றன.

## திருவிழாக்கள்

இத்தலத்தில் மாதந்தோறும் திருவிழாக்கள் மரபுவழியிலும், புராண நிகழ்வுகளை அடியொற்றியும் கொண்டாடப் படுகின்றன.

சித்திரை - தமிழ்ப்புத்தாண்டு,
வசந்தோற்சவம் 10 நாட்கள்
வைகாசி - வைகாசி விசாகம்
ஆனி - ஆனித்திருமஞ்சனம்,
ஆனி பிரம்மோற்சவம் 10 நாட்கள்
ஆடி - ஆடிப்பூரம், அம்பாளுக்கு 10 நாட்கள் உற்சவம்
ஆவணி - பிட்டுக்கு மண் சுமந்தது
புரட்டாசி - நவராத்திரி, அம்பாளுக்கு 10 நாட்கள் உற்சவம்
ஐப்பசி - அன்னாபிசேகம், கந்தசஷ்டி 6 நாட்கள்
கார்த்திகை - கார்த்திகை தீபம் 17 நாட்கள் உற்சவம்
மார்கழி - ஆருத்ரா, மாணிக்கவாசகர் உற்சவம்
தை - உத்ராயன உற்சவம் 10 நாட்கள்,
திருவூடல் உற்சவம்
மாசி - மகாசிவராத்திரி, மாசிமக தீர்த்தவாரி
பங்குனி - பங்குனி உத்திர உற்சவம்

## கல்வெட்டுக்கள்

மிகப்பழமையான இத்திருக்கோயிலில் தமிழ், சமஸ்கிருதம், கன்னடம் போன்ற மொழி கல்வெட்டுக்கள் நூற்றுக்கும் மேற்பட்டு உள்ளன. காஞ்சிபுரம் பச்சையப்ப முதலியார் கோயிலின் அர்த்தசாம பூசைக்கு ஒருலட்சம் வராகன் பொன் அளித்த கல்வெட்டும் இத்திருக்கோயிலில் உள்ளது.

இங்கே கொடுக்கப்பட்ட செய்திகள் மிகமிகச் சிறிய அளவே ஆகும். மேலும் பல விவரங்களை இத்தலத்துடன் தொடர்புடைய அருள் நூல்களைக் கற்று அன்பர்கள் அறிந்துகொள்ளலாம்.

## தரிசன நேரம்

அதிகாலை 5.00 மணி முதல் 12.30 மணிவரை

மாலை 3.30 மணி முதல் 9.30 மணி வரை

சனி, ஞாயிறு, பௌர்ணமி நாட்களில் நாள் முழுவதும் தரிசனம் உண்டு.


**தொடர்பு முகவரி**

**இணை ஆணையர் / செயல் அலுவலர்**
**அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில்**
**திருவண்ணாமலை - 606 601.**
**தொலைபேசி : 04175 - 252438.**
**மின்னஞ்சல்** :arunachaleswarartempletvm@gmail.com
**இணையதளம் :** :arunachaleswarartemple.tnhrce.in








**அருள்மிகு ஆதி காமாட்சியம்மன்**
**திருக்கோயில்**
திருவண்ணாமலை

| | | |
|---|---|---|
| இறைவி | : | அருள்மிகு ஆதி காமாட்சியம்மன் |
| ஆகமம் | : | காமிகம் |

## திருக்கோயில் அமைவிடம்

நினைக்க முக்திதரும் அருணைப்பதியில் வடக்கு வீதி சின்னக்கடைத் தெருவில், அருள்மிகு காமாட்சியம்மன் திருக்கோயில் அமைந்துள்ளது. பேருந்து நிலையத்திற்கு அருகிலும் இரயில் நிலையத்திற்கு 2 கி.மீ. தொலைவிலும் இத்தலம் உள்ளது.

## தங்கும் வசதி

திருவண்ணாமலை

## திருத்தல வரலாறு

கச்சியம்பதியில் திருஏகம்பப் பெருமானைத் தொழுது பின்னர் அங்கிருந்து புறப்பட்டு திருவண்ணாமலைக்கு வருகைதந்த காமாட்சிதேவி முதலில் இத்தலம் அமைந்துள்ள இடத்தினை அடைந்தனள். அவ்வமயம் அங்கேயிருந்த காய்ந்த

மரஞ்செடிகொடிகள் அனைத்தும் பூத்துக்குலுங்கின. அவ்விடத்து தேவி, சந்தியாவந்தனம், அதிகாலைப்பூசை முதலான அனுட்டானங்களையெல்லாஞ் செய்து முடித்து பின்னர் கௌதம முனிவரின் ஆசிரமத்தை அடைந்தாள். திருவண்ணாமலையில் முதன் முதலில் தேவி வந்தடைந்த இடத்தில் பிற்காலத்தில் பக்தர்களால் ஆலயமொன்று எழுப்பப்பட்டது என்பது இத்தலத்தின் வரலாறாகும். இங்கு தேவி சிவலிங்க பூசை செய்து தவக் கோலத்தில் எழுந்தருளியுள்ளாள்.

### பூசைகள்

நாள்தோறும் மூன்று கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசை விவரம் |
|---|---|
| காலை 6.00 மணி | உஷக்கால பூசை |
| காலை 11.00 மணி | உச்சிக்கால பூசை |
| மாலை 6.00 மணி | சாயரட்சை பூசை |

### வழிபாட்டுச் சிறப்பு

இத்திருக்கோயிலுக்கு வந்து குங்குமார்ச்சனை செய்து வழிபடுவோரது எண்ணங்கள் ஈடேறும். காரிய சித்தி கிடைக்கும். நவராத்திரி, தீபாவளி, கந்தசஷ்டி, பெரும்பொங்கல் ஆகிய உற்சவங்கள் இத்தலத்தில் நடைபெறுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 12 மணி வரை

மாலை 4 மணி முதல் 8 மணி வரை

**தொடர்பு முகவரி**

**இணை ஆணையர் / செயல் அலுவலர்**

**அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில்**

**திருவண்ணாமலை – 606 601.**

**தொலைபேசி : 04175 – 252438.**

**மின்னஞ்சல்** :arunachaleswarartempletvm@gmail.com

**இணையதளம் :** :arunachaleswarartemple.tnhrce.in





## அருள்மிகு துர்க்கையம்மன் திருக்கோயில்

திருவண்ணாமலை

| | | |
|---|---|---|
| இறைவி | : | அருள்மிகு துர்க்கையம்மன் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| தீர்த்தம் | : | கட்க தீர்த்தம் |
| ஆகமம் | : | காமிகம் |

### திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் நினைக்க முக்திதரும் அருணைப்பதியில் வடக்கு வீதியின் உட்புறமாகக் காமாட்சியம்மன் திருக்கோயிலுக்குத் தென்புறத்தில் அமைந்துள்ளது. பேருந்து நிலையத்திற்கு அருகிலும் இரயில் நிலையத்திலிருந்து 2 கி.மீ. தொலைவிலும் இத்தலம் உள்ளது.

### தங்கும் வசதி

திருவண்ணாமலை

### புராண வரலாறு

இறைவனின் இடப்பாகம் பெறவேண்டி உமாதேவியார் திருவண்ணாமலையை அடைந்து கௌதம முனிவரின் ஆசிரமத்தில் தங்கித் தவஞ்செய்து வருகையில் அங்கு

அனைவரையும் துன்புறுத்தி வந்த மகிஷன் எனும் அசுரனின் கொடுமைகளைப் பற்றிப் பிரமன் முதலான தேவர்கள் தேவியிடம் எடுத்துரைத்து அவனையழித்திடுமாறு வேண்டினர். தேவி, துர்க்கையையழைத்து மகிஷனை வதஞ்செய்யுமாறு சொல்லியருளினள்.

துர்க்காதேவி பெரும்படையுடன் சென்று மகிஷனுடன் போரிட்டாள். மகிஷன் எருமையின் உருவெடுத்து வந்து துர்க்கையுடன் போரிட, துர்க்கை அவனது (எருமை) தலையைக் கொய்து அவன் கழுத்தில் அணிந்திருந்த சிவலிங்கத்தை எடுத்துவந்து காமாட்சிதேவியிடம் அளித்தனள். பின்பு மகிஷனின் தலைமீது அர்ச்சாரூபமாய் துர்க்காதேவி எழுந்தருளினாள் என்பது இத்திருக்கோயிலின் புராண வரலாறாகும்.

இங்கு கருவறையினுள் பக்தர்களின் வேண்டுதலுக்குச் செவிசாய்த்து அருள்மழை பொழியும் கருணைக்கடலாகத் துர்க்கையம்மன் அருள்பாலிக்கின்றாள். கருவறைக்குப் பின்புறம் காமாட்சிதேவி தாபித்துப் பூசித்த பாபவிநாசமகாலிங்கேசர் சந்நிதி உள்ளது.

## திருக்கோயில் அமைப்பு

கிழக்கு நோக்கி அமைந்துள்ள இத்திருக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகா மண்டபம், பிரகாரம் என்ற அமைப்புடன் திகழ்கின்றது. கருவறையினுள் மகிஷனாகிய எருமைத் தலைமீது துர்க்கையம்மன் காட்சியருளுகின்றாள். அவளை வணங்கி வெளியே வருகையில் பின்புறம் அருள்மிகு பாபவிநாச மகாலிங்கேசுவரர் சந்நிதியும், அதற்குப் பின்புறம் மனோன்மணி சந்நிதியும் உள்ளன. அதற்கருகில் திருக்கல்யாண மண்டபம் அமைந்துள்ளது. கோயிலுக்கு வடபுறம் கட்க தீர்த்தம் உள்ளது.

## பூசைகள்

நாள்தோறும் மூன்று கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசை விவரம் |
|---|---|
| காலை 6.00 மணி | உஷக்கால பூசை |
| காலை 10.00 மணி | உச்சிக்கால பூசை |
| மாலை 6.00 மணி | சாயரட்சை பூசை |

### விழாக்கள்

நவராத்திரி சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. வாரந்தோறும் செவ்வாய், ஞாயிறு ஆகிய நாட்களில் இராகு காலத்தில் சிறப்பு வழிபாடு செய்யப்படுகின்றது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 12 மணி வரை

மாலை 4 மணி முதல் 8 மணி வரை

### தொடர்பு முகவரி

**இணை ஆணையர் / செயல் அலுவலர்**
**அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில்**
**திருவண்ணாமலை – 606 601.**
**தொலைபேசி : 04175 – 252438.**
**மின்னஞ்சல்** :arunachaleswarartempletvm@gmail.com
**இணையதளம் :** :arunachaleswarartemple.tnhrce.in



### பிரசாதம்

பிரசாதம் என்பது மேலான பொருள் என்று பொருள்படும். உயர்ந்தவர்கள் தங்கள் அருளால் பிறருக்கு வழங்குவது பிரசாதம் எனப்படும். பொதுவாகத் தெய்வத்திடமிருந்து அடியார்கள் பக்தர்கள் பெறுவது பிரசாதம் ஆகும். தெய்வத்திற்குப் படையலிட்டு வழங்குவதும் பிரசாதம் ஆகும். பழனி பஞ்சாமிர்தம், திருப்பதி லட்டு, அபிசேகத் திருநீறு, தீர்த்தம் முதலியவை பிரசாதமாக வழங்கப்படுவதை அன்பர் ஏற்றுப் பயன்படுத்திப் பலனடைவதை இன்றும் நாம் கண்டுகளிக்கிறோம். உண்டு மகிழ்கிறோம். இவைகளை இறைவனே வழங்குவதாக ஒரு ஐதீகம் நம்பிக்கை.




**அருள்மிகு ஆதி அருணாசலேசுவரர்**
**திருக்கோயில்**

அடி அண்ணாமலை,
திருவண்ணாமலை வட்டம் மற்றும் மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு ஆதி அருணாசலேசுவரர், அணி அண்ணாமலையார் |
| இறைவி | : | அருள்மிகு ஆதி அபீதகுசாம்பாள் |
| தல விருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

திருவண்ணாமலை பேருந்து நிலையத்திலிருந்து சுமார் 6 கி.மீ. தொலைவில் திருவண்ணாமலை கிரிவலப் பாதையில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. அருகிலுள்ள பேருந்து நிலையம், திருவண்ணாமலை. இரயில் நிலையம் திருவண்ணாமலை. இத்தலத்தின் புராணச் சிறப்பை அருணாசல மகாத்மியம் எனும் நூல் தெரிவிக்கின்றது.

## தங்கும் வசதி

திருவண்ணாமலை

## புராண வரலாறு

ஒரு சமயம் திருவண்ணாமலையில் தவஞ்செய்து கொண்டிருந்த முனிவர்களின் தவத்திற்கு இடையூறாக இச்சையைத் தூண்டும் தேவ கன்னி ஒருத்தியைப் பிரமன் படைத்தான். பின்பு தன்னால் படைக்கப்பட்ட அக்கன்னிகையின் அழகில் மயங்கி அவளை அடைய முயற்சித்தான். பிரமன் தன்னைத் தொட விரும்புவதைக் கண்ட அத்தேவமாது அங்கிருந்து ஓடினாள். அவள் ஓடும்போது அவளைப் பார்க்க விரும்பிய பிரமனுக்கு நாற்புறமும் முகங்கள் தோன்றி நான்முகனாயினன். தேவமாது மானுருக் கொண்டு ஓடினாள். பிரமன் கலைமான் உருவெடுத்துச் சென்றான். அவள் பெண் கிளியாக மாறிச் சென்றாள். பிரமன் ஆண்கிளியாக உருமாறிப் பின் தொடர்ந்தான். தேவமாது விரைவாகப் பறந்து சென்று அருணாசலேசரைச் சரண்புகுந்தாள். அவ்வமயம் பெருமான் வேடன் உருக்கொண்டு தோன்றி பிரமன்மீது அம்பெய்தினர். அம்பினால் தாக்கப்பட்ட பிரமன் மோகந்தெளிந்து நற்புத்தி வரப்பெற்று பெருமானின் அடிபணிந்து வருந்தி, பின்னர் புண்ணிய தீர்த்தமொன்றில் நீராடி, அணி அண்ணாமலையார் எனும் பெயரால் இலிங்கமொன்று பிரதிட்டை செய்து வணங்கினன். பிரமன் மூழ்கிய தீர்த்தம் பிரமதீர்த்தம் என்று வழங்கப்படுகிறது.

## திருத்தல சிறப்பு

அணி அண்ணாமலை என்று வழங்கப்படும் இத்தலம் திருநாவுக்கரசு சுவாமிகளால் பாடப்பெற்ற வைப்புத்தலமாகும்.

பைப்பொனே பவளக்குன்றே பரமனே பால்வெண்ணீறா
செம்பொனே மலர்செய் பாதா சீர்தரு மணியே மிக்க
அம்பொனே கொழித்து வீழும் அணி அணாமலையுளானே
என்பொனே உன்னையல்லால் ஏது(ம்) நான் நினைவிலேனே.

(திருநாவுக்கரசர்)

எழிலுடன் காட்சி தரும் இராசகோபுரத்துள் நுழைந்தால் காணப்படும் வெளிப்பிரகாரத்தில் வாகனமண்டபம், அதையடுத்து சப்த கன்னியர், துவார பாலகர்கள் உள்ளனர். அடுத்தாற்போல் நால்வர், பாலகணபதி, மூன்று சிவலிங்கங்கள், சிதம்பரேசுவரர், ஏகாம்பரேசுவரர், சஹஸ்ர லிங்கம், முகலிங்கம், வள்ளி தெய்வானை முருகன் முதலிய மூர்த்தங்கள் வரிசையாக உள்ளன. உள்மண்டபத்தில் வலப்பக்கம் நடராசர் சபை உள்ளது. கருவறையில் மூலவர் அற்புதமாகக் காட்சியருளுகின்றார். கிரிவலம் செல்வோர் இத்தலத்தையும் வணங்கிச் சென்றால்

மட்டுமே முழுப் பலனை எய்துவர் என்பது பக்தர்களின் நம்பிக்கை. கருவறைக்கு அருகில் இடப்பக்கம் அபீதகுசாம்பாள் சன்னதி உள்ளது. பெரிய கோயிலில் நடைபெறும் விழாக்கள் அனைத்தும் இத்தலத்திலும் நடை பெறுகின்றன. இத்தலத்தில்தான் மணிவாசகர் திருவெம்பாவை பாடினார் என்பர்.

### பூசைகள்

நாள்தோறும் மூன்று கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | | பூசைவிவரம் |
|---|---|---|
| காலை 6.00 மணி | : | உஷக்கால பூசை |
| காலை 11.00 மணி | : | உச்சிகால பூசை |
| மாலை 6.00 மணி | : | சாயரட்சை பூசை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 -00 மணி முதல் 12.00 மணி வரை

மாலை 4 -00 மணி முதல் 8.30 மணி வரை

### தொடர்பு முகவரி

**இணை ஆணையர் / செயல் அலுவலர்,**
**அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில்,**
**திருவண்ணாமலை - 606 601.**
**தொலைபேசி - 04175 252438**
மின்னஞ்சல் - arunachaleswarartempletvm@gmail.com
இணையதளம் - arunachaleswarartemple.tnhrce.in



### பஞ்ச சம்ஸ்காரம்

வைணவத்தில் ஐந்து குறிகள் உண்டு. அவை தாபம் புண்ட்ரம், நாமம், மந்திரம் அர்ச்சனம் என்பனவாம். இதனைப் பஞ்ச சம்ஸ்காரம் என்பர்.




**அருள்மிகு ஏகாம்பரேசுவரர்**
**சமேத காமாட்சி அம்மன் திருக்கோயில்,**

திருமஞ்சன கோபுர வீதி, திருவண்ணாமலை.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு ஏகாம்பரேசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு காமாட்சியம்மன் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

பஞ்சபூத தலங்களுள் நடுநாயகமாகிய திருவண்ணாமலை எனும் பதியில் அண்ணாமலையார் திருக்கோயிலுக்குத் தெற்குத் திசையில் திருமஞ்சன கோபுரவீதியில் ஸ்ரீ ஏகாம்பரேசுவரர் சமேத காமாட்சி அம்மன் திருக்கோயில் அமைந்துள்ளது. இத்தலம் பேருந்து நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவிலும் இரயில் நிலையத்திலிருந்து 2 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

திருவண்ணாமலை

### திருத்தல சிறப்பு

அழகிய கருவறையுடன் திகழும் இந்த ஆலயத்தில் கருணை ததும்பும் விழிகளைக் கொண்டு நின்ற கோலத்தில் அன்னை காமாட்சி தேவி எழுந்தருளியுள்ளாள். அவளுக்கு முன்புறம் இலிங்கரூபத்தில் ஸ்ரீ ஏகாம்பரேசுவரர் திருமேனியும் உள்ளது. ஒரே கருவறையில் அம்பிகையும், இலிங்கரூபத்தில் பெருமானும் உள்ளமை மிகவும் சிறப்பாகும். அருணாசலேசுவரர் திருக்கோயிலைக் கட்டிய ஸ்தபதியே இத்திருக்கோயிலையும் அமைத்ததாக வரலாறு பிரகாரத்தில் விநாயகர் யக்ஞேசுவரர், யக்ஞேஸ்வரி உள்ளனர். இங்கு காலை வேளையில் பகலவன் தனது ஒளி கிரணங்களைக் காமாட்சி தேவி மீது படரவிட்டு வழிபாடு செய்வது சிறப்பாகும்.

### திருவிழாக்கள்

இங்கு தீர்த்தவாரி, நவராத்திரி, கந்தசஷ்டி முதலான உற்சவங்கள் நடைபெறுகின்றன. வாரந்தோறும் வெள்ளியன்று இரவு நடைபெறும் ஊஞ்சல் சேவையில் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் கலந்துகொண்டு அன்னையின் பேரருளைப் பெறுகின்றனர்.

### பூசைகள்

நாள்தோறும் இரண்டுகால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசை விவரம் |
|---|---|
| காலை 6.00 மணி | உஷக்கால பூசை |
| மாலை 6.00 மணி | சாயரட்சை பூசை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 12.00 மணிவரை

மாலை 4.30 மணி முதல் 8.00 மணிவரை


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்,**

**அருள்மிகு காமாட்சியம்மன் திருக்கோயில்,**

**திருமஞ்சன கோபுர வீதி,**

**திருவண்ணாமலை - 606 601.**

**ஆய்வாளர் அலைபேசி எண் : 9655777628.**






**அருள்மிகு பூதநாராயணப் பெருமாள்**
**திருக்கோயில்,**
திருவண்ணாமலை.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு பூதநாராயண பெருமாள் |
| இறைவி | : | ஸ்ரீதேவி, பூதேவி |

## அமைவிடம்

இத்தலம் அருணையம்பதியில் பேருந்து நிலையத்திலிருந்து 500 மீட்டர் தொலைவில் பெரியதெருவில் அமைந்துள்ளது.

## புராண வரலாறு

வசுதேவர், தேவகிக்கு எட்டாவது குழந்தையாக ஸ்ரீ கிருஷ்ணர் அவதரித்தார். அக்குழந்தையால் தனது உயிருக்கு ஆபத்து என்பதையறிந்த கம்சன் அதனைக் (கிருஷ்ணனை) கொல்லப் பல வழிகளில் முயற்சித்தான். பூதகி எனும் அரக்கியை அழைத்து குழந்தையைக் கொல்லுமாறு கட்டளையிட்டான். அதன்படி சிறுவர்கள் விளையாடிக்கொண்டிருக்கும் இடத்திற்குச் சென்ற பூதகி கிருஷ்ணனைத் தனியாக அழைத்துப் பாலூட்டினாள். வந்திருப்பது யாரென்பதை அறிந்து கொண்ட மாயக்கண்ணன் பூதகியின் விஷப்பாலை அருந்துவதுபோல் பாவித்து அவளைக்

கொன்றனன். பின்பொரு சமயம் அரக்கியை வதஞ்செய்த கிருஷ்ணாவதாரக் கோலத்தைத் தனக்கு காட்டியருளுமாறு பிருகு முனிவர், திருமாலிடம் வேண்டினார். அவ்வேண்டுதலுக்குச் செவி சாய்த்து, திருமால் திருவண்ணாமலையில் பூதநாராயணப் பெருமாளாகக் காட்சியளித்து அர்ச்சாரூபமாய் எழுந்தருளினார். காலமாற்றத்தால் அப்பெருமாளை மணல் மூடிற்று.

வெகு நாட்களுக்குப் பிறகு அப்பகுதியில் வாழ்ந்துவந்த ஒரு முனிவரின் கனவில் திருமால் தோன்றி, அருகில் உள்ள மணற்புற்றில் தாம் வசித்து வருவதாகவும், அங்கு கோயிலொன்று எழுப்புமாறும் அருளிச்செய்தார். மறுநாள் முனிவர் சென்று மணற்புற்றை முழுவதுமாக அகற்றுகையில் திருமாலின் அர்ச்சாரூபம் அங்கு உள்ளதைக் கண்டு பெருமகிழ்வுற்று கிருஷ்ணா! முகுந்தா! கோவிந்தா! என்று சொல்லிப் பணிந்தார். மணமிக்க மலர்களைக் கொண்டு அர்ச்சித்து வணங்கி அணிமிகு கோயிலொன்றை அங்கு எழுப்பினார். இவ்வாறு புராண வரலாற்றோடு நிகழ்கால வரலாற்றையும் கொண்ட இத்தலத்தில் வடக்கு நோக்கி எம்பெருமான் காட்சியருகின்றார்.

### பூசைகள் மற்றும் திருவிழாக்கள்

நாள்தோறும் ஒருகால பூசை நடைபெறுகிறது. வைகுண்ட ஏகாதசியன்று திருவிழாவும், சனிக்கிழமை தோறும் சிறப்பு பூசையும், மாதந்தோறும் திருவோண நன்னாளில் சிறப்பு வழிபாடும் செய்யப்படுகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 -00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5-00 மணி முதல் 8.30 மணி வரை

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்,
அருள்மிகு பூதநாராயணப் பெருமாள்
திருக்கோயில்,
பெரிய தெரு, திருவண்ணாமலை.
அலைபேசி எண் - 9486463231.





**அருள்மிகு பாலசுப்பிரமணியர் திருக்கோயில்,**
சோமாசிபாடி, திருவண்ணாமலை வட்டம்,
மற்றும் மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு பாலசுப்பிரமணியர் |
| இறைவி | : | வள்ளி, தெய்வானை |
| தீர்த்தம் | : | அகத்தியர் தீர்த்தம் |

## அமைவிடம்

இத்திருக்கோயில் திருவண்ணாமலையிலிருந்து சென்னை செல்லும் சாலையில் சுமார் 10 கி.மீ. தொலைவில் சோமாசிபாடி எனும் எழில்சூழ் கிராமத்தில் சிறுகுன்றின்மீது அமைந்துள்ளது. திருவண்ணாமலையிலிருந்து பேருந்து வசதி உள்ளது. அருகிலுள்ள இரயில் நிலையம் திருவண்ணாமலை.

## தங்கும் வசதி

திருவண்ணாமலை

## திருத்தல சிறப்பு

குன்றின்மீது அமைந்துள்ள இத்திருக்கோயிலைச் சுற்றிலும் சுனைகளும் தடாகங்களும் உள்ளன. அவற்றுள் வற்றாது நீர் சுரந்துகொண்டேயிருக்கும். செங்கழுநீர் என்ற ஒரு சுனையில்

செங்கழுநீர்க் கொடியின் வேர் பாகத்தில் ஒவ்வொரு மாதமும் கிருத்திகையன்று ஒரு மலர் பூக்கும். அம்மலரின் நிறத்தைக் கொண்டு அப்பகுதிவாழ் மக்கள் கால நிலையை அறிவர். பச்சை வண்ணத்தில் மலர் மலர்ந்தால் அந்த ஆண்டு மிகுந்த மழை உண்டாகுமென்றும், இளஞ்சிவப்பு நிறத்தில் மலர்ந்தால் மிதமான மழை பெய்யும் என்றும், வெண்மை நிறத்தில் மலர்ந்தால் அந்த ஆண்டு மழை குறைவு என்றும் மக்கள் கருதினர். கிருத்திகை தோறும் அந்தச் சுனையில் பூக்கும் மலரினைப் பறித்து வந்து மலைமீது எழுந்தருளியுள்ள பாலசுப்பிரமணியப் பெருமானுக்கு அணிவிக்கின்றனர். அதனால் அவர் மலர்க்காட்டு குகன் என்றும் அழைக்கப்படுகின்றார். இங்கு கருவறையில் பாலசுப்பிரமணியப் பெருமான், வள்ளி, தெய்வானையுடன் அருள்பாலிக்கின்றார். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இப்பெருமானைப் பாடியுள்ளார்.

### திருவிழாக்கள்

இத்தலத்தில் கந்தசஷ்டி உற்சவம் பத்து நாட்கள் விமரிசையாக நடைபெறுகிறது. அன்று திருமலை வலம் வருதல் காவடி எடுத்தல் முதலான நேர்த்திக் கடன்களைப் பலரும் செலுத்துகின்றனர். விஜயதசமி அன்று அம்புத்திருவிழா சிறப்பாக நடைபெறுகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6-00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5-00 மணி முதல் 7.00 மணி வரை

### தொடர்பு முகவரி

**இணை ஆணையர் / செயல் அலுவலர்,**

**அருள்மிகு பாலசுப்பிரமணியர் திருக்கோயில்,**

**சோமாசிபாடி, திருவண்ணாமலை வட்டம்,**

**மற்றும் மாவட்டம். தொலைபேசி : 04175 - 252438**

**மின்னஞ்சல்** - arunachaleswarartempletvm@gmail.com

**இணையதளம்** - arunachaleswarartemple.tnhrce.in





**அருள்மிகு சோமநாத ஈசுவரர் திருக்கோயில்,**

மங்கலம், திருவண்ணாமலை வட்டம் மற்றும் மாவட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு சோமநாத ஈசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு அமுதாம்பிகை |
| தீர்த்தம் | : | சந்திர தீர்த்தம் |
| தல விருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

### அமைவிடம்

திருவண்ணாமலை - வந்தவாசி சாலையில் திருவண்ணா மலையிலிருந்து சுமார் 15 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள மங்கலம் என்னும் கிராமத்தில் நெற்கதிர் நிறைந்த வயலுக்கு மத்தியில் இந்த ஆலயம் அமைந்துள்ளது. திருவண்ணாமலை யிலிருந்து அடிக்கடி பேருந்து வசதி உள்ளது. அருகிலுள்ள இரயில் நிலையம் திருவண்ணாமலை.

### தங்கும் வசதி

திருவண்ணாமலை

## புராண வரலாறு

தேவாசுரர்கள் அமுதம் வேண்டி திருப்பாற்கடலைக் கடையும் போது, அமுதம் ததும்பும் கலசத்தைக் கையில் ஏந்திக் கொண்டு தன்வந்திரி பகவான் தோன்றினார். அப்போது அமுதத்தின் ஒரு துளி புவியில் இப்பகுதியில் தெறித்து விழுந்தது. மங்கலமிக்க அமுதம் விழுந்த காரணத்தினால் இத்தலம் மங்கலம் எனத் திருப்பெயர் பெற்றது. அமுதம் விழுந்த இடத்தில் பெருமான் சுயம்புவாக எழுந்தருளியுள்ளார். சோமன் என்று வழங்கப்படும் சந்திரபகவான் பௌர்ணமி தோறும் தனது அமுதக்கலையின் ஒரு பகுதியை இப்பகுதியில் செலுத்துவதால், இவ்விறைவன் சோமநாத ஈசுவரர் என்றும் இறைவி அமுதாம்பிகை என்றும் திருப்பெயர்கள் பெற்றனர். சந்திரன் வந்து வணங்கி சாபம் நீங்கப் பெற்றான் என்றொரு வரலாறும் இத்தலத்திற்குண்டு.

## திருத்தல சிறப்பு

பண்டைக்காலத்தில் இங்கு வசித்துவந்த நான்மறை அந்தணர்கள் காலந்தவறாது யாகங்கள் செய்து பெருமானைப் பூசித்து வந்தனர். அதனால் இத்தலம் சதுர்வேதி மங்கலம் எனவும், பெருமான் சதுர்வேத சோமநாத ஈசுவரர் எனவும் வழங்கப் படுகின்றார்.

கருவறையைச் சுற்றிலும் வெளிப்பக்கம் காமாட்சி தேவி கஜசங்கார மூர்த்தி, அர்ஜுனன் பாசுபதாஸ்திரம் பெறும் காட்சி, எமனிடமிருந்து மார்க்கண்டேயனைக் காப்பாற்றும் காட்சி, இராமனின் அம்பு ஏழு மரங்களைத் துளைக்கும் காட்சி, மயில் லிங்கபூசை செய்தல் முதலான புடைப்புச் சிற்பங்கள் அழகுபட உள்ளன.

## தீர்த்தம்

இத்திருக்கோயிலின் தீர்த்தம் யக்ஞகுளம் என்பதாகும். இதில் சந்திரன் மூழ்கி பெருமானை வணங்கியதாக புராண வரலாறு. இத்தீர்த்தத்தில் மூழ்கி யாகங்கள் செய்வோர் எண்ணிய காரியங்கள் ஈடேறப் பெறுவர் என்பது ஐதீகம்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7-00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5-00 மணி முதல் 8.00 மணி வரை

## தொடர்பு முகவரி

**தக்கார்/ஆய்வர்**
**அருள்மிகு சோமநாத ஈசுவரர் திருக்கோயில்**
**மங்கலம், திருவண்ணாமலை வட்டம்**
**மற்றும் மாவட்டம்.**
**அலைபேசி எண் : 9486463231.**



## திருவிளக்கின் முறைகள்



"பூஜைக்கு ஏற்றப்படும் விளக்கு, பித்தளை, செம்பு, வெள்ளி போன்ற உலோகங்களில் அமைய வேண்டும். 'எவர்சில்வர்' இரும்பினால் ஆனது பயன்படுத்தக் கூடாது. திருவிளக்கில் ஐந்து சுடர்கள் இருக்க வேண்டும், ஐந்து சுடர்களையும் ஏற்றுவது சிறந்தது. நாள்தோறும் வழிபடும் வழிபாட்டில் ஒரு முகமே போதுமானது. தீபத்திற்குச் சிறந்தது நெய். நெய் விளக்கேற்றி வழிபட்டால் குலம் தழைக்கும். நல்லெண்ணெய் விளக்கு மகாலட்சுமி, மகா விஷ்ணு, சனீசுவரனுக்குச் சிறப்பானது. தேங்காய் எண்ணெய் விநாயகருக்குச் சிறப்பானது. இலுப்பை எண்ணெய் நெய்க்குச் சமமானது. பஞ்சினாலே திரியிடலாம், தாமரைத் தண்டின் நூலால் திரியிடல் மிக மிகச் சிறப்பானது."



## அருள்மிகு போர்மன்ன லிங்கேசுவரர் திருக்கோயில்

மங்கலம், திருவண்ணாமலை வட்டம்

மற்றும் மாவட்டம்.

இறைவன் : அருள்மிகு போர்மன்ன லிங்கேசுவரர்

### அமைவிடம்

திருவண்ணாமலை - வந்தவாசி சாலையில் திருவண்ணா மலையிலிருந்து சுமார் 15 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள மங்கலம் என்னும் கிராமத்தில் பேருந்து நிலையத்திற்கு அருகில் இந்த ஆலயம் அமைந்துள்ளது. திருவண்ணாமலையிலிருந்து அடிக்கடி பேருந்து வசதி உள்ளது. அருகிலுள்ள இரயில் நிலையம் திருவண்ணாமலை.

### திருத்தல சிறப்பு

கிராம தெய்வமாக உள்ள போர்மன்ன லிங்கேசுவரர் மரத்தேரில் எழுந்தருளியுள்ளார். நான்கு சக்கரங்கள் கொண்ட

அழகிய பீடம் அமைந்த தேரின்மீது நின்ற கோலத்தில் உள்ளார். தனது தலைமீது லிங்கத்தினைத் தாங்கியும், வலது கையில் கத்தியுடனும், இடது கை சிம்மத்தின் வாலைப் பிடித்து அடக்குவது போன்றும் காட்சியருளுகின்றார். இவரது திருவுருவம் சுமார் 23 அடி உயரத்துடன் மிகவும் கம்பீரமாக வணங்குவோர் மருட்சி கொள்ளும் வண்ணமும், எதிரிகளைப் பயந்தோடச் செய்யும் வண்ணமும் உள்ளது. இது வேறெங்கும் இல்லாத சிறப்பாகும்.

### பூசை மற்றும் திருவிழாக்கள்

போர்மன்ன லிங்கேசருக்கு அருகில் உள்ள காளியம்மனுக்குப் பூசைகள் முடிந்த பிறகே இவருக்குப் பூசை செய்யப்படுகிறது. மாசி மாதம் 5 நாட்கள் உற்சவம் நடை பெறுகிறது. விழாவில் ஆயிரக்கணக்கானோர் குடும்ப சமேதராக வருகை தந்து வழிபாடாற்றுகின்றனர்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7-00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5 -00மணி முதல் 7.00 மணி வரை

### தொடர்பு முகவரி


தக்கார்/ஆய்வர்

**அருள்மிகு போர்மன்ன லிங்கேசுவரர் திருக்கோயில்**

**மங்கலம், திருவண்ணாமலை வட்டம்**

**மற்றும் மாவட்டம்.**

**அலைபேசி எண் : 9884650991.**




## தென்திசைக்கயிலை

**திருக்காளத்தி,**

**திருச்சிராப்பள்ளி,**

**திருகோணமலை.**



**அருள்மிகு நவநீத கோபாலகிருஷ்ண சுவாமி திருக்கோயில்**

மேக்களூர், திருவண்ணாமலை வட்டம்
மற்றும் மாவட்டம்.

இறைவன் : அருள்மிகு நவநீத கோபாலகிருஷ்ண சுவாமி

## அமைவிடம்

இத்தலம் திருவண்ணாமலையிலிருந்து சுமார் 30 கி.மீ. தொலைவில் சென்னை செல்லும் வழியில் மேக்களூர் எனும் கிராமத்தில் அமைந்துள்ளது. திருவண்ணாமலையிலிருந்து பேருந்து வசதியுள்ளது. அருகிலுள்ள இரயில் நிலையம் திருவண்ணாமலை.

## தங்கும் வசதி

திருவண்ணாமலை

## வரலாற்றுச் சிறப்பு

செஞ்சியை ஆண்ட தேசிங்கு மன்னன் திருமாலின் மீது மிகுந்த பக்தி கொண்டவன். அவன் தனது பூசையறையில் அழகிய நவநீத கோபாலகிருஷ்ணனின் திருமேனியை வைத்துப் பூசித்து வந்தான். ஒரு சமயம் அவனது நாட்டின் மீது அந்நியர்

படையெடுப்பு நிகழ்ந்தது. கிருஷ்ணனின் திருமேனியைப் பாதுகாக்க வேண்டி அவ்விக்கிரகத்தைப் பட்டு பீதாம்பரத்தால் சுற்றி எடுத்துச் சென்று அழகிய சோலைகள் சூழ்ந்த மேக்களூர் எனும் கிராமத்திலிருந்த ஒரு மண்டபத்தின் அடியில் அவன் புதைத்து வைத்தான்.

வெகுநாட்களுக்குப் பிறகு மக்கள் அவ்விடத்திலிருந்த மண்மேட்டை அகற்றியபோது சுரங்கம் போன்ற ஒரு அமைப்பு இருப்பதைக் கண்டு அவ்விடத்தை அகழ்ந்தனர். அங்கு தேசிங்கு மன்னன் பூசித்த நவநீத கோபாலகிருஷ்ணன், வரதராஜப் பெருமாள் முதலான இறைத்திருவுருவங்கள் கிடைக்கப் பெற்றன. பின்பு அந்தத் திருவுருவங்களுக்குக் கோயில் எழுப்பினர். நீண்டு நெடிதுயர்ந்த மதிற்சுவரும், பிரகார திருச்சுற்றும், அழகிய வேலைப் பாடுகளுடன் அமைந்த கோபுரங்களும் தன்னுள் கொண்டு இத்தலம் விளங்குகின்றது.

### விழாக்கள்

சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, வைகாசி கருடசேவை, ஆனி மாதத்தில் பிரம்மோற்சவம், மார்கழியில் வைகுண்ட ஏகாதசி முதலான விழாக்கள் வெகு சிறப்பாக நடைபெறுகின்றன. கருட வாகனத்தில் வரதராஜப் பெருமாள் திருவீதிவுலாக் காட்சியும் இரவு இந்திர விமானத்தில் பவனி வரும் காட்சியும் பக்தர்களைப் பரவசத்தில் ஆழ்த்தும்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7-00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5-00 மணி முதல் 7.00 மணி வரை


**தொடர்பு முகவரி**

**தக்கார்/ஆய்வர்,**

**அருள்மிகு நவநீத கோபாலகிருஷ்ண சுவாமி**
**திருக்கோயில் மேக்களூர், திருவண்ணாமலை**
**வட்டம் மற்றும் மாவட்டம்.**






**அருள்மிகு சிவசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்**

தேவனாம்பட்டு, திருவண்ணாமலை வட்டம் மற்றும் மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு சிவசுப்பிரமணிய சுவாமி |
| இறைவி | : | வள்ளி, தெய்வயானை |
| தீர்த்தம் | : | குமார தீர்த்தம் |

## அமைவிடம்

இத்தலம் திருவண்ணாமலையிலிருந்து நார்த்தாம்பூண்டி செல்லும் வழியில் சுமார் 20 கி.மீ. தொலைவில் தேவனாம்பட்டு எனும் கிராமத்தில் சிறிய குன்றின் மீது அழகிய கருங்கல் கருவறையுடன் அமையப்பெற்றுள்ளது. இத்திருக்கோயிலுக்குச் செல்லத் திருவண்ணாமலையிலிருந்து பேருந்து வசதியுள்ளது. அருகிலுள்ள இரயில் நிலையம் திருவண்ணாமலை.

## தங்கும் வசதி

திருவண்ணாமலை

## புராண சிறப்பு

கயிலைநாதனின் இடப்பாகம் பெறவேண்டி உமாதேவியார் கச்சியம்பதியிலிருந்து அருணையம்பதிக்குச் செல்லும் வழியில் ஒரு மாலை வேளையில் வாழைப்பந்தல் அமைத்து சிவபெருமானைப் பூசித்தனர்.

அப்போது அங்கு இலிங்கம் ஒன்றினைத் தாபித்து அபிசேகத்திற்குண்டான நீரினைக் கொணர வேண்டி முருகப் பெருமானைப் பணித்தனள். முருகன் தனது கூரிய வேலினை மேற்குத் திசை நோக்கி எய்தான். அந்த வேல் குன்றுகளைப் பிளந்து சென்று அடர்ந்த கானகத்தில் தவஞ்செய்து கொண்டிருந்த புத்திராண்டன், புருகூதன், பாண்டுரங்கன், போதவான், போதன், கோமகன், வாமன் ஆகிய ஏழு முனிவர்களின் மீது ஊடுருவிச் சென்று ஒரு மலையில் குத்திட்டு நின்றது. அந்த இடத்திலிருந்து நீர் பீறிட்டு ஆறாகப் பாய்ந்தது. ஏழு முனிவர்களிடமிருந்து செந்நீர் பெருகி ஆற்றில் கலந்தது. சேய் ஆகிய முருகப் பெருமானால் தோற்றுவிக்கப்பட்ட அந்த ஆறு சேயாறு எனப் பெயர் பெற்றது.

முனிவர்களைக் கொன்ற பாவம் நீங்க அன்னையின் அறிவுரைப்படி முருகப்பெருமான் சிவபூசை செய்து தன் குறை நீங்கினார். அதன்பின்பு தேவனாம்பட்டு எனும் தலத்திற்கு வந்திருந்து அங்கிருந்த ஒரு குன்றின் மீது சிவபூசை செய்து தேவசேனாபதி எனும் பட்டம் பெற்றார் என்பது இக்கோயிலின் வரலாறு ஆகும்.

## பரிகாரச் சிறப்பு

திங்கள் தோறும் வரும் கிருத்திகையில் விரதமிருந்து கிரிவலம் வந்து சிவசுப்பிரமணியப் பெருமானை வணங்குவோருக்கு விரும்பும் பதவிகள் கிடைக்கும். பணியிலிருப்போருக்கு மேலான பதவிகள் கிடைக்கும்.

## பூசை மற்றும் திருவிழாக்கள்

தினமும் ஒரு கால பூசை நடைபெறுகிறது. கந்த சஷ்டி, ஆடிகிருத்திகை, தைகிருத்திகை, பங்குனி உத்திரம் முதலான உற்சவங்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6-00 மணி முதல் 10.00 மணி வரை

மாலை 5 -00 ம ணி முதல் 8.00 மணி வரை

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்**
**அருள்மிகு சிவசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்,**
**தேவனாம்பட்டு, திருவண்ணாமலை வட்டம்**
**மற்றும் மாவட்டம்.**
**அலைபேசி எண் : 9655777628.**



### திவ்ய தேசங்கள்

| | | |
|---|---|---|
| சோழ நாடு | - | 40 |
| பாண்டி நாடு | - | 18 |
| மலை நாடு | - | 13 |
| நடு நாடு | - | 2 |
| தொண்டை நாடு | - | 22 |
| வட நாடு | - | 12 |
| பரமபதம் | - | 1 |

ஆக திவ்ய தேசங்கள் **108** ஆகும்

ஆழ்வார்களால் பாடப்பெற்ற வைணவ தலங்களைத் திவ்ய தேசங்கள் என்றும் மங்களாசாசனம் பெற்ற தலங்கள் என்றும் வழங்குவர். அவை மொத்தம் 108 ஆகும்.



**அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்,**
வேட்டவலம், திருவண்ணாமலை வட்டம்
மற்றும் மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு அகத்தீசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு தர்மசம்வர்த்தினி |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

திருவண்ணாமலையிலிருந்து விழுப்புரம் செல்லும் வழியில் சுமார் 30 கி.மீ. தொலைவில் உள்ள வேட்டவலம் எனும் கிராமத்தில் அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில் உள்ளது. இத்திருக்கோயிலுக்குச் செல்லத் திருவண்ணாமலையிலிருந்தும் விழுப்புரத்திலிருந்தும் பேருந்து வசதியுள்ளது..

## தங்கும் வசதி

திருவண்ணாமலை

## வரலாற்றுச் சிறப்பு

பண்டைக்காலத்தில் சிங்கபுரம் என்று அழைக்கப்பட்ட வேட்டவலம் பகுதியை வீரபாண்டிய சோழன் எனும் மன்னன் அரசு செய்து வந்தான். அவனது காலத்தில் விவசாயி ஒருவன் தனது நிலத்தில் ஏர் கலப்பை கொண்டு உழும்போது, ஓரிடத்தில் ஏர் கலப்பை நின்று கணீர் என்று சப்தம் கேட்டது. அதனைக் கவனத்தில் கொள்ளாது தொடர்ந்து அவன் நிலத்தினை உழுது சென்றான். அவ்வமயம் ஏர் கலப்பை நின்று சப்தம் கேட்ட இடத்தில் இரத்தம் பீறிட்டுச் செல்வதைக் கண்டு பயந்தோடி ஊர் மக்களிடம் விவரம் கூறினான். பின்னர் அனைவரும் ஒன்று சேர்ந்து அரசனை நாடி விவரத்தைக் கூறினர். அரசன் தனது அமைச்சர்களுடன் சேர்ந்து குலகுருவை நாடினான். அவர் ஞானதிருட்டி மூலம் விவரம் அறிந்து இரத்தம் பெருகியோடிய விவசாயியின் நிலத்தில் அபிசேக ஆராதனைகள் செய்யுமாறும் அங்கு பெருமான் சுயம்பு ரூபமாய் உறைவதாகவும், அவ்விடத்து திருக்கோயில் ஒன்றை எழுப்புமாறும் கூறியருளினார்.

அரசன் நான்மறை வேதியர்களுடன் விவசாயியின் நிலத்தை அடைந்தான். அங்கு ஏர்கலப்பை நின்ற இடத்தில் பலவகைப் பொருட்களைக் கொண்டு அபிசேகித்து அவ்விடத்தைத் தோண்டுகையில் அங்கு பெருமான் சுயம்புலிங்க ரூபமாய் திருக்காட்சியருளினார். அனைவரும் மகிழ்ந்து பஞ்சாட்சர மந்திரஞ் சொல்லி தங்களது கரமலரை சிரமலர் மேல் குவித்து வணங்கினர்.

பின்னர் அரசன் ஒரு ஒப்பிலா கருங்கற் கோயிலை அங்கு எழுப்பினான் என்பது வரலாறு. இங்கு இலிங்கத்திருமேனி மீது ஏர் கலப்பை பட்ட வடு உள்ளதைப் பக்தர்கள் இன்றும் கண்டு வணங்கலாம்.

அகத்தியர் கயிலையிலிருந்து தென்திசை செல்லும் சமயம் பல தலங்களில் தங்கிச் சிவபூசை செய்தார். அவர் வழிபட்ட தலங்களெல்லாம் அவரது திருப்பெயரால் அகத்தீசுவரம் என்று அழைக்கப்படுகின்றன. அவர் இத்தலத்தில் எழுந்தருளியுள்ள பெருமானையும் வழிபட்டுச் சென்றதால் இப்பெருமான் அகத்தீசுவரர் என வழங்கப்படுகின்றார்.

## இராமலிங்க அடிகளார் அற்புதம்

இவ்வூரில் வாழ்ந்து வந்த ஜமீன்தார் ஒருவரின் இரண்டு மனைவியருள் ஒருவருக்குத் தீய பேய் ஒன்று பிடித்திருந்தது. மற்றொரு மனைவி மகோதரம் எனும் கொடிய நோயினால் பீடிக்கப்பட்டு வருந்தினாள். இதனை நீக்குவதற்கு மந்திரவாதிகள் பல உயிர்களைப் பலிகொடுத்து பூசைகள் செய்தும் பேயும் நோயும் விலகவில்லை.

ஒரு சமயம் வடலூர் இராமலிங்க சுவாமிகள் அவ்வழியே சென்றார். ஜமீன்தார் வீட்டை கடக்குஞ்சமயம் அங்கு பல உயிர்கள் பலிகொடுக்கப்பட்டது அறிந்து மனம் துடித்து, கிராமத்தினரைச் சந்தித்து விவரம் கேட்டறிந்தார். வள்ளலாரின் வருகையையறிந்த ஜமீன்தார் அவரைப் பயபக்தியுடன் வரவேற்று, தனது மனைவிமார்களின் குறைகளைத் தெரிவித்தார். வள்ளலாரின் அருட்பார்வை ஜமீன்தாரின் மனைவிமார்களின்மீது பட்டவுடன் அவர்களைப் பீடித்திருந்த பேயும், நோயும் விலகி, பொலிவான உடலைப் பெற்றுத் திகழ்ந்தனர். இந்த அற்புதத்தைக் கண்ட அனைவரும் வள்ளலாரின் அடிபணிந்து வணங்கினர். இவ்வாறு அகத்தீசரின் புண்ணியப் பதியில் அருட்பிரகாச வள்ளலாரின் அற்புதமும் நிகழ்ந்தது.

## திருக்கோயிலின் அமைப்பு

இங்கு அகத்தீசுவரர் மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். மூலவருக்கு எதிர்திசையில் தர்மசம்வர்த்தினி அம்மன் சன்னதி உள்ளது. கருவறையைச் சுற்றிலும் பிரம்மன், துர்க்கை, தட்சிணாமூர்த்தி, விநாயகப் பெருமான், பைரவர், சூரிய சந்திரர், 16 நாயன்மார்கள், நால்வர் ஆகியோரது திருமேனிகள் உள்ளன. அருகில் சோமாஸ்கந்தர் சன்னதி, அர்த்தநாரீசுவரர் சன்னதி, நடராஜர் சன்னதி, பள்ளியறை ஆகியன உள்ளன. மூலவருக்கு எதிரில் அலங்கார மண்டபம் மற்றும் வாகன மண்டபமும் திருக்கோயிலை ஒட்டி திருக்குளம் ஒன்றும் உள்ளன.

## பூசை

நாள்தோறும் இரண்டு கால பூசைகள் நடைபெறுகின்றன. பிரதோச காலங்களில் பெருமளவில் பக்தர்கள் வந்திருந்து நந்தீசனையும் பெருமானையும் அபிசேகித்து வழிபாடாற்று கின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 4.30 ம ணி முதல் 8.00 மணி வரை

**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**
**அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்,**
**வேட்டவலம், திருவண்ணாமலை வட்டம்**
**மற்றும் மாவட்டம்**
**ஆய்வாளர் அலைபேசி எண் : 9655777628.**

**அருகில் உள்ள தலம்**

ஆவூர்



## ஆலய நிர்மானங்கள்

ஆலய நிர்மானங்கள் ஆவர்த்தம், அநாவர்த்தம், புனராவர்த்தம், அந்தரிதம் என நான்கு வகைப்படும். ஆவர்த்தம் என்பது ஓர் ஆலயத்தைப் புதிதாகக் கட்டி முடித்துக் குடமுழுக்குச் செய்தலாகும். அநாவர்த்தம் என்பது இயற்கைச் சீற்றங்களால் ஆலயங்கள் அழிந்துபோனால் அவற்றைத் திரும்பவும் கட்டிமுடித்துப் புதுப்பித்துக் குடமுழுக்குச் செய்வதாகும். புனராவர்த்தம் எனும் ஜீர்ணோத் தாரண அட்டபந்தன மகா கும்பாபிசேகம் நடை முறையில் இருக்கும் ஆலயங்கள் காலப்போக்கில் சிதிலமடைந்து போனால் அவற்றைப் புதுப்பித்து குடமுழுக்குச் செய்வதாகும். அந்தரிதம் என்பது கள்வர்கள் புகுந்து அசுத்தப்படுத்திய ஆலயத்தைச் சுத்தப்படுத்தும் பொருட்டுச் செய்யும் புனித நீராட்டு ஆகும்.



**அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்,**

ஆவூர், திருவண்ணாமலை வட்டம்

மற்றும் மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு அகத்தீசுவரர் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## திருக்கோயில் அமைவிடம்

திருவண்ணாமலையிலிருந்து விழுப்புரம் செல்லும் வழியில் சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ள ஆவூர் எனும் கிராமத்தில் அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில் உள்ளது. இத் திருக்கோயிலுக்குச் செல்ல திருவண்ணாமலையிலிருந்து பேருந்து வசதியுள்ளது. அருகிலுள்ள இரயில் நிலையம் திருவண்ணாமலை.

## தங்கும் வசதி

திருவண்ணாமலை

## திருத்தல வரலாறு

முற்காலத்தில் பசுக்கூட்டமொன்று அடர்ந்த மரங்கள் சூழ்ந்த இடமொன்றில் மேய்ச்சலுக்குச் சென்று வந்தது. அக்கூட்டத்தில் இருந்து தினமும் ஒரு பசு மட்டும் விலகிச் சென்று அருகிலிருந்த

புற்றின் மீது பால் சொரிந்து வந்தது. அதனைக் கண்ட கிராமத்தினர் பசு பால் சொரிந்த இடத்திலிருந்த மண்புற்றை அகற்றிப் பார்த்தபோது, அங்கு பெருமானது இலிங்கத்திருமேனி உள்ளமை கண்டு வணங்கி, அப்பெருமானுக்குத் திருக்கோயில் அமைத்து நாட்பூசைகளைத் தொடர்ந்தனர். ஆ (பசு) பால் சொரிந்து பூசித்த ஊராகையால் ஆவூர் என இத்தலம் வழங்கப்படுகிறது. இப்பெருமானை அகத்தியரும் பூசித்து சென்றதால் அகத்தீசுவரர் எனும் திருப்பெயரால் பெருமான் அழைக்கப்படுகின்றார்.

இத்திருக்கோயிலில் மொத்தம் 13 கல்வெட்டுக்கள் தொல்லியல் துறையால் அடையாளமிடப்பட்டுள்ளன. இவை சோழர், பாண்டியர் மற்றும் விசயநகர மன்னர்களின் தானங்களைப் பற்றித் தெரிவிக்கின்றன. திருமடப்பாறைராய உடையார் கோயில் என்றும் திருவகட்டீஸ்வரமுடைய நாயனார் கோயில் என்றும் இறைவனின் திருப்பெயர்களைக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

சோழ மன்னன் ராஜராஜ ராஜகேசரிவர்மன் நிலதானம் அளித்தது, பாண்டிய மன்னன் மாறவர்மன் நிலதானம் செய்தது, திருவிழாக்களுக்கு மன்னர்கள் நில தானம் வழங்கியது முதலான செய்திகளும் காணப்பெறுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.00 மணி வரை

## தொடர்பு முகவரி

**தக்கார் / ஆய்வர்,**
**அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்,**
**ஆவூர், திருவண்ணாமலை வட்டம்**
**மற்றும் மாவட்டம்.**
**ஆய்வாளர் அலைபேசி எண் : 98846 50991.**

## அருகில் உள்ள தலம்

**வேட்டவலம்.**





**அருள்மிகு காக்குங்கரை விநாயகர்**
**திருக்கோயில்,**
செங்கம், திருவண்ணாமலை மாவட்டம்

**இறைவன் : அருள்மிகு காக்குங்கரை விநாயகர்**

## அமைவிடம்

சங்க கால நூல் மலைபடுகடாம் இயம்பும் தொன்மைமிக்க மூதூர் செங்கம் எனும் நகரமாகும். இவ்வூர் திருவண்ணாமலை யிலிருந்து சுமார் 37 கி.மீ. தொலைவிலும் போளூரிலிருந்து சுமார் 45 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. திருவண்ணாமலை யிலிருந்து செங்கம் செல்ல அடிக்கடி பேருந்து வசதி உள்ளது. இவ்வூரின் மையப்பகுதியில் செங்கம்-போளூர் சாலையில் அருள்மிகு காக்கங்கரை விநாயகர் திருக்கோயில் அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

செங்கம்

## திருத்தல சிறப்பு

பழங்காலத்தில் செங்கத்திற்கு மேற்கே உள்ள காக்கங்கரை எனும் கிராமத்தில் வாழ்ந்த அடியவரொருவர் இத்தலத்திற்கு

வந்திருந்து விநாயகப் பெருமானைத் தாபித்து திருக்கோயில் எழுப்பியமையால் இப்பெருமான் காக்கங்கரை விநாயகர் எனும் திருப்பெயர் கொண்டு அழைக்கப்படுகின்றார்.

ஒரு சமயம் செங்கம் நகரின் வழியாகச் செல்லும் செய்யாற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஆற்றின் கரையோரமாக இருந்த மரம், செடி, கொடிகள், வீடுகள், ஆகிய அனைத்தையும் மூழ்கடித்தபடிப் பாய்ந்தது. மக்கள் அனைவரும் பயந்தோடி, கண்களில் நீர் பெருக, உள்ளம் உருக ஆற்றின் கரையோரமாயிருந்த காக்கங்கரை விநாயகப் பெருமானைச் சரண் புகுந்து தங்களைக் காத்தருளுமாறு வேண்டினர்.

எளியோருக்கருளும் ஆனைமுகத்தான் சீறிவந்த ஆற்று வெள்ளத்தின் போக்கை மாற்றியருளினார். ஆற்றின் போக்கு ஆலயத்திற்கும் வீடுகளுக்கும் சற்று தொலைவில் விலகிச் சென்றது. அதனைக் கண்ட அனைவரும் ஆனந்தக் கண்ணீர் பெருக ஆனைமுகத்தானின் பொற்பாதம் பணிந்து போற்றி ஆயிரமாயிரம் பழங்களைக் கொண்டு ஆராதித்தனர். ஆற்று வெள்ளத்திலிருந்து மக்களைக் காத்தருளிய அப்பெருமான் காக்குங்கரை விநாயகர் எனும் திருப்பெயரும் பெற்றார்.

## வழிபாட்டுச் சிறப்பு

காக்கங்கரை விநாயகரைச் சங்கடஹர சதுர்த்தியன்று விரதமிருந்து பதினெட்டுமுறை வலம்வந்து வணங்குவோரது எண்ணங்கள் ஈடேறும். விக்கினங்கள் விலகும். பணியில் பதவி உயர்வு, கன்னிப் பெண்களுக்கு திருமணப் பேறு முதலானவை கிடைக்கும் என்பது பக்தர்களின் நம்பிக்கை.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

இத்திருக்கோயிலில் நாள்தோறும் ஒருகால பூசை நடைபெறுகிறது. மாதந்தோறும் சங்கடஹர சதுர்த்தியன்று சிறப்பு வழிபாடும், விநாயக சதுர்த்தியன்று திருவிழாவும் நடை பெறுகின்றது.

## திருக்கோயில் பரப்பளவு

15 அடி நீளமும் 17 அடி அகலமும் கொண்டு இத்தலம் விளங்குகின்றது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 10.00 மணி வரை

மாலை 6.00 ம ணி முதல் 9.00 மணி வரை

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்**
**அருள்மிகு காக்கங்கரை விநாயகர் திருக்கோயில்,**
**செங்கம் 606 701.**
**திருவண்ணாமலை மாவட்டம்.**
**அலைபேசி எண் : 98656 06828.**



## தேவார திருத்தலங்கள்

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், ஆகியோரால் பாடப்பெற்ற திருக்கோயில்களைத் தேவார திருத்தலங்கள் என்று வழங்குவர். அவை மொத்தம் 276 ஆகும்.

| | | |
|---|---|---|
| சோழ நாடு | - | 190 |
| தொண்டை நாடு | - | 32 |
| நடுநாடு | - | 22 |
| பாண்டி நாடு | - | 14 |
| மலை நாடு | - | 1 |
| துளுவம் | - | 1 |
| கொங்கு நாடு | - | 7 |
| ஈழ நாடு | - | 2 |
| வடநாடு | - | 5 |
| புதிதாக கண்டறியப்பட்டவை | - | 2 |



**அருள்மிகு வேணுகோபால பார்த்தசாரதி**
**பெருமாள் திருக்கோயில்,**
செங்கம், திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு வேணுகோபால பார்த்தசாரதிபெருமாள் |
| இறைவி | : | அருள்மிகு கனகவல்லி தாயார் |
| தலவிருட்சம் | : | மகிழம் |
| தீர்த்தம் | : | தீர்த்தவாரி குளம் |

## அமைவிடம்

திருவண்ணாமலையிலிருந்து சுமார் 37 கி.மீ. தொலைவிலுள்ள செங்கம் நகரில் இத்தலம் அமைந்துள்ளது. திருவண்ணாமலை, போளூர். திருப்பத்தூர், ஊத்தங்கரை ஆகிய ஊர்களிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

செங்கம்

## வரலாற்றுச் சிறப்பு

மதுரையை ஆட்சி செய்த திருமலை நாயக்கர் மரபில் வந்த தளவாய் என்பவன் செங்கத்தைத் தலைமையிடமாகக் கொண்டு சிற்றரசனாக அரசு செய்தான். அவனது குலதெய்வ கோயிலாக வேணுகோபால பார்த்தசாரதி பெருமாள் கோயில் விளங்கியது. தினமும் அக்கோயிலுக்குப் பழங்களையும் மணமிக்க மலர்களையும் சமர்ப்பித்து அவன் தியானித்திருப்பான். பெருமாளுக்குப் பலவித அலங்காரங்களைச் செய்து மெய்மறந்திருப்பான். கண்கண்ட தெய்வமாக விளங்கிய அப்பெருமாளின் திருக்கோயிலினை அர்த்தமண்டபம், மகாமண்டபம் என அமைத்து அவன் விரிவு செய்தான்.

இங்கு கருவறையினுள் ஸ்ரீ வேணுகோபால பார்த்தசாரதி பெருமாள் தனது தேவியர் பாமா ருக்மணி சமேதராக நின்ற கோலத்தில் அருள்பாலிக்கின்றார். கருவறைக்கு வெளிப்புறம் சுமார் 10 அடி உயரமுள்ள துவார பாலகர்களின் கற்றிருமேனி காண்போரை வியக்கச் செய்கின்றது. வெளியே பிரகாரத்தில் தாயாருக்குத் தனிச் சந்நிதியுள்ளது.

இங்குள்ள கல் மண்டபத்தில் பெருமாளின் அவதாரங்கள் கலைநயமிக்க சிற்பங்களாக மிளிர்கின்றன. மண்டப தளத்தின் கீழ் பகுதியில் இராமாயண வரலாற்றுப் படங்கள் பல வண்ணங்களால் காண்போரைக் கவரும் வண்ணம் வரையப்பட்டுள்ளன.



## பூசைகள் மற்றும் விழாக்கள்

நாள்தோறும் இரண்டு கால பூசைகள் நடைபெறுகின்றன. கிருஷ்ணஜெயந்தி, ஆடிப்பூரம், வைகுண்ட ஏகாதசி முதலான நாட்களில் பெருமளவில் பக்தர்கள் வருகைதந்து வழிபாடு செய்கின்றனர். வைகாசி மாதம் 10 நாட்கள் பிரம்மோற்சவம் நடைபெறுகின்றது. அவ்விழாவில் கருடசேவை அன்று சுற்றிலும் உள்ள கிராமங்களிலிருந்து பெருமளவில் பக்தர்கள் வருகைதருவதால் அன்று செங்கம் நகரமே விழாக்கோலம் காணும். நகரம் முழுவதும் கடைகளும், சிறுவர்களுக்கான பொழுதுபோக்கு அம்சங்களும், இசை நிகழ்ச்சிகளும், வாண வேடிக்கைகளும் விமரிசையாக நிறைந்திருக்கும்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 9.00 மணி வரை

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு வேணுகோபால பார்த்தசாரதி
பெருமாள் திருக்கோயில், செங்கம் - 606 701.
திருவண்ணாமலை மாவட்டம்.
அலைபேசி எண் : 9865606828.



### காசிக்குச் சமமான தலங்கள்

**திருவெண்காடு, திருவையாறு,**

**திருமயிலாடுதுறை, திருவிடைமருதூர்,**

**திருச்சாய்க்காடு, திருமுதுகுன்றம்,**

**திருவாஞ்சியம்.**



**அருள்மிகு ரிஷபேசுவரர் திருக்கோயில்,**
செங்கம் நகரம் மற்றும் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு ரிஷபேசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு அனுபாம்பிகை |
| தலவிருட்சம் | : | மகிழம் |

## அமைவிடம்

திருவண்ணாமலையிலிருந்து சுமார் 37 கி.மீ. தொலைவில் செங்கம் அமைந்துள்ளது. திருவண்ணாமலை, போளூர், திருப்பத்தூர், ஊத்தங்கரை ஆகிய ஊர்களிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

செங்கம்

## திருத்தல சிறப்பு

இத்தலம் திருநாவுக்கரசு சுவாமிகளால் கண்ணை என்று பாடப்பெற்ற தேவார வைப்புத் தலமாகும். சங்ககாலத்தில் செங்கண்மா என்றும் கல்வெட்டில் நவிரை செங்கண்மா என்றும் வழங்கப்பட்ட இத்தலத்தின் பெயர் இன்று மருவி செங்கம் என்று வழங்கப்படுகிறது. தேவாரப் பெயர் கண்ணை என்பதாகும். இங்குள்ள இறைவனின் திருப்பெயர் தென் கண்ணை ஆட் கொண்ட நாயகன் என்று கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன திருக் கோயிலினுள்



பலிபீடம், நந்தி தேவர் ஆகிய வற்றைக் கடந்து மூலவர் சந்நிதியினை அடையலாம். நந்தி தேவர் வணங்கிப் பேறு பெற்றதால் இறைவன் ரிஷபேசுவரர் என வழங்கப்படுகின்றார். இங்கு அம்பாள், முருகன் சந்நிதிகளும், உட்பிர காரத்தில் விநாயகர், மகாலட்சுமி, வீரபத்திரர், நவகிர கங்கள் ஆகிய சந்நிதிகளும் உள்ளன.

மண்ணிப் படிக்கரை வாழ்கொளிப் புத்தூர்
வக்கரை மந்தாரம் வாரணாசி
வெண்ணி விளத்தொட்டி வேள்விக்குடி
விளமர் விராடபுரம் வேட்களத்தும்
பெண்ணை அருட்டுறை தண் பெண்ணாகடம்
பிரம்பில் பெரும்புலியூர் பெருவேளூருங்
கண்ணை களர் காறை கழிப்பாலையுங்
கயிலாய நாதனையே காணலாமே. [ அப்பர் ]

## பூசை மற்றும் திருவிழாக்கள்

நாள்தோறும் இரண்டுகால பூசை நடைபெறும். இத்திருக் கோயிலில் பிரதோச நாளன்று திரளான பக்தர்கள் வருகின்றனர். திருவாதிரை, மகாசிவராத்திரி சிறப்பாகக் கொண்டா டப்படுகிறது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 10.00 மணி வரை

மாலை 6.00 ம ணி முதல் 8.00 மணி வரை

### தொடர்பு முகவரி


செயல் அலுவலர்
அருள்மிகு ரிஷபேசுவரர் திருக்கோயில்,
செங்கம் 606 701.
திருவண்ணாமலை மாவட்டம்.
அலைபேசி எண் : 9865606828.






**அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி**
**திருக்கோயில்,**
மண்மலை, செங்கம் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி |
| தீர்த்தம் | : | சேயாறு |
| தலவிருட்சம் | : | வேம்பு |

## அமைவிடம்

செங்கம் நகரிலிருந்து சுமார் 3 கி.மீ. தொலைவில் திருவண்ணாமலை சாலையில் சந்தன மணங்கமழும் சவ்வாது மலைக்குத் தெற்கே செய்யாற்றின் தென்கரையில், மண்மலை என்னும் கிராமத்தில் சிறுகுன்றின் மீது இக்கோயில் அமைந்துள்ளது. செங்கத்திலிருந்து 30 நிமிடத்திற்கொருமுறை பேருந்து வசதியுள்ளது.

## தங்கும் வசதி

செங்கம்

## திருத்தல வரலாறு

ஒரு சமயம் பிரணவத்திற்குப் பொருள் தெரியாத பிரமன் முருகனிடம் சிறைப்பட்டனன். பின்னர் ஆணவம் நீங்கி முருகப்

பெருமானை வழிபாடு செய்ய உத்தம தலத்தைத் தெரிவிக்குமாறு வேண்டினன். முருகன் தன்னால் உருவாக்கப்பட்ட நதியொன்றின் கரையில் தன்னைப் பூசித்து வணங்குமாறு அருளிச் செய்ய, அத்திருவருளினால் மகிழ்ந்து பிரமன் செங்கண்மா எனும் நகருக்குக் கீழ்திசையில் செய்யாற்றின் தெற்கேயுள்ள சிறுமணற்குன்றின் மீது முருகனின் திருமேனியைத் தாபித்துப் பூசித்தனன். அப்பூசனைக்கு மகிழ்ந்த செவ்வேள் முருகன் அங்கு தோன்றி பிரணவப் பொருளைப் பிரமனுக்கு அருளினன் என்று இத்திருக்கோயிலின் வரலாறு தெரிவிக்கின்றது.

## பூசை மற்றும் விழாக்கள்

இங்கு தினமும் ஒரு காலபூசை செய்யப்படுகின்றது. ஆடி மாதம் அனைத்து செவ்வாய்க்கிழமைகளிலும் பெருமளவில் பக்தர்கள் வருகைதந்து முடிக்காணிக்கை, காவடியெடுத்தல், அலகு குத்துதல் முதலான பிரார்த்தனைகளை நிறைவேற்றுகின்றனர். மாதந்தோறும் கிருத்திகை, சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, கந்தசஷ்டி, தைப்பூசம், பங்குனி உத்திரம் முதலான நாட்களில் சிறப்பு வழிபாட்டு ஆராதனைகள் நடைபெறுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 10.00 மணி வரை

மாலை 6.00 மணி முதல் 7.00 மணி வரை

## தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்,
மண்மலை, செங்கம் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.
அலைபேசி எண் : 9865606828.

## அருகில் உள்ள தலம்

செங்கம்





**அருள்மிகு அக்னீசுவரர் திருக்கோயில்,**
தாமரைப்பாக்கம், செங்கம் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு அக்னீசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு திரிபுரசுந்தரி |
| தலவிருட்சம் | : | வில்வம் |

## அமைவிடம்

இத்தலம் திருவண்ணாமலையிலிருந்து காஞ்சி வழியாக சுமார் 25 கி.மீ. தொலைவிலும், செங்கத்திலிருந்து சுமார் 25 கி.மீ. தொலைவிலும் உள்ள தாமரைப்பாக்கம் எனும் கிராமத்தில் அமைந்துள்ளது. செங்கத்திலிருந்து 30 நிமிடத்திற்கொருமுறை பேருந்து வசதியுள்ளது. அருகிலுள்ள இரயில் நிலையம் திருவண்ணாமலை.

## தங்கும் வசதி

திருவண்ணாமலை

## திருத்தல சிறப்பு

புராண காலத்தில் அக்னிதேவன் பூசித்தால் அக்னீசுவரர் எனும் திருப்பெயர் கொண்டு இங்கு பெருமான் எழுந்தருளியுள்ளார். கருவறை, அர்த்தமண்டபம், முன்மண்டபம் ஆகிய அமைப்புடன் கிழக்கு நோக்கிய நிலையில் இத்தலம் உள்ளது. பராந்தக சோழன், சம்புவராய மன்னர்களால் திருப்பணி செய்யப்பட்ட சிறப்புடையது.

## கல்வெட்டுகள்

இங்கு காணப்படும் கல்வெட்டொன்று சிறப்பான தகவல் ஒன்றைத் தெரிவிக்கின்றது. பெற்றோரைக் காப்பதும் கோயிலில் விளக்கெரிக்கச் செய்தலும் தலையாயக் கடமைகளாகும் என்பதை அறிவிக்கின்றது. கங்கபுரத்திலிருக்கும் தாழிக்கோனனின் மகன்கள் சங்கரத்தடியான், பெரியான் என்ற இருவர், அவர்களிடையே ஏற்பட்ட சண்டையில் இளையவன் அடித்து மூத்தவன் இறந்துவிட்டான். இந்த வழக்கு ஊரார் சபை முன்பு வந்தது. ஊர் சபையினர் விசாரித்து "தாமரைப்பாக்கத்து கோயிலில் அரை நொந்தா விளக்கு எரிக்க வேண்டும்; தாயையும், தந்தையையும் காப்பாற்ற வேண்டும்" என்று தீர்ப்பளித்தனர் என்ற தகவலை அந்தக் கல்வெட்டால் அறிகிறோம்.

## பூசை மற்றும் திருவிழாக்கள்

தினமும் ஒரு கால பூசை நடைபெறும் இக்கோயிலில் அன்னாபிசேகம், சிவராத்திரி, பிரதோசம் முதலான நாட்களில் எண்ணிறந்த பக்தர்கள் வருகைதந்து விரதமிருந்து பெருமானை வழிபாடு செய்கின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 10.00 மணி வரை

மாலை 6.00 மணி முதல் 7.00 மணி வரை


**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

அருள்மிகு அக்னீசுவரர் திருக்கோயில்,

தாமரைப்பாக்கம், செங்கம் வட்டம்,

திருவண்ணாமலை மாவட்டம்.

அலைபேசி எண் : 9865606828.






**அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி**
**திருக்கோயில்,**
காஞ்சி கிராமம், செங்கம் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

இறைவன் : பாலசுப்பிரமணிய சுவாமி

இறைவி : அருள்மிகு வள்ளி, தெய்வயானை

## அமைவிடம்

காஞ்சி என்று தொல்காப்பியம் இயம்பும் திணை வகையைச் சேர்ந்த பழந்தமிழ்ப் பெயரினைத் தாங்கியுள்ள காஞ்சி என்னும் கிராமம் திருவண்ணாமலையிலிருந்து சுமார் 17 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்குள்ள சிறு குன்றின்மீது இத்திருக் கோயில் அமைந்துள்ளது. திருவண்ணாமலையிலிருந்து பேருந்து வசதி உள்ளது. அருகிலுள்ள இரயில் நிலையம் திருவண்ணாமலை.

## தங்கும் வசதி

திருவண்ணாமலை

## திருத்தல சிறப்பு

குன்றின்மீது அமைந்துள்ள இத்தலம் சித்தர்களின் பூமியாக திகழ்ந்த இடமாகும். காஞ்சி என்பது நிலையில்லாத உலகத்தைப் பொருந்திய தன்மையுடையது எனத் தொல்காப்பியம் தெரிவிக்கின்றது. நிலையில்லாத உலகப்பற்றை விடுத்து பற்றற்ற தூய வாழ்வை மேற்கொண்ட ஞானிகளும், தபோதனர்களும், சித்தர்களும் வாழ்ந்த இடமாதலால் காஞ்சி எனும் பெயர் இக்கிராமத்திற்கு வழங்கப்படுகிறது. குன்றின்மீது அமைந்துள்ள பாலசுப்பிரமணிய பெருமான் சித்தர்களுக்குக் காட்சியருளிய சிறப்புக்குரியவர். இவரை வழிபட்டுக் காரியம் சித்திக்கப்பெற்றோர் எண்ணிறந்தோராவர். குன்றின்மீது ஏறிச் சென்று தகப்பன்சாமியெனும் பாலசுப்பிரமணியரை வழிபாடு செய்வோர் பெறும் பேறுகள் அளவிடற்கரியனவாம்.

## பூசைகள்மற்றும் திருவிழாக்கள்

நாள்தோறும் ஒரு கால பூசை நடைபெறும் இத்தலத்தில் ஆடிக்கிருத்திகை, தைக்கிருத்திகை, கந்தசஷ்டி, சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, வைகாசி விசாகம் முதலான நாட்களில் சிறப்பு வாழிபாடுகள் செய்யப்படுகின்றன..

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 9.00 மணி வரை

மாலை 6.00 மணி முதல் 7.00 மணி வரை

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்,
காஞ்சி கிராமம், செங்கம் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.
அலைபேசி எண் : 9865606828.



### அட்டாட்சரம்

ஓம் நமோ நாராயணாய



**அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில்,**
புதூர் செங்கம், செங்கம் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

இறைவி : அருள்மிகு மாரியம்மன்

## அமைவிடம்

பார்புகழும் பாரத நாட்டில் எந்நாட்டவர்க்கும் இறைவனாம் தென்னாடுடைய சிவபெருமான் திருத்தலங்கள், திருமால் திருத்தலங்கள், அம்பிகை திருத்தலங்கள், குலதெய்வ திருத்தலங்கள், எண்ணிறந்தன உள. அவற்றுள் நினைத்தவருக்கு முக்திதரும் அருணையம்பதியின் வடமேற்பாலும், திரிசூல பருவதத்தின் தென்பாலும், சந்தனம் தழைத்தோங்கும் சவ்வாது மலைச்சாரலுக்குக் கிழக்கேயும், செங்கத்திலிருந்து சுமார் 8 கி.மீ. தொலைவில் போளூர் செல்லும் சாலையில் உள்ள புதூர் செங்கம் எனும் ஊரில் பீம நதிக்கரையில் அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில் அமைந்துள்ளது. இத்தலம் சங்க கால மன்னன் நன்னன் சேய் நன்னனால் வழிபடப்பெற்றது. இத்திருக்கோயிலுக்குச் செல்ல திருவண்ணாமலையிலிருந்தும், செங்கத்திலிருந்தும் பேருந்து வசதி உள்ளது. அருகிலுள்ள இரயில் நிலையம் திருவண்ணாமலை.

## தங்கும் வசதி

செங்கம்

## திருத்தல சிறப்பு

பக்தர்கள் தங்களது குறைகளை மாரியம்மனிடம் மனமுருகி வேண்டி நிவர்த்தியடைவது பல நூற்றாண்டுகளாக நடந்து வரும் நிகழ்வாகும். மருத்துவரால் கைவிடப்பட்ட கொடிய நோய்களனைத்தீற்கும் சிறந்த பரிகார தலமாக இக் கோயில் விளங்குகின்றது. இங்கு அருள்பாலிக்கும் மாரியம்மனைச் சரணடைந்து இங்கேயே தங்கியிருந்து நோய்கள் நீங்கப்பெற்று செல்வது அன்றாட நிகழ்வாக உள்ளது. அம்மனின் திருமேனிக்கு அபிஷேகித்த எண்ணெயைக் கண்கள் குறைபாடு உள்ளவர்கள் தங்களது கண்களிலிட்டு குணமடைவது அம்மனின் மகிமையில் ஒன்று என்கின்றனர் பக்தர்கள்.

## திருவிழாக்கள்

ஆடி, ஆவணி மாதங்களில் வரும் செவ்வாய், வெள்ளி ஆகிய நாட்களில் பெருமளவில் பக்தர்கள் வந்திருந்து தங்கள் நேர்த்திக் கடன்களைச் செலுத்துகின்றனர். ஆடி மாதம் திருவிழா நடைபெறுகின்றது. தமிழ்ப்புத்தாண்டு, விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, கார்த்திகை தீபம் முதலான நாட்களில் உற்சவம் நடைபெறுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 1.00 மணி வரை

மாலை 4.00 ம ணி முதல் 7.00 மணி வரை

செவ்வாய், வெள்ளி, ஞாயிறு ஆகிய நாட்களில் முழு நாட்களும் தரிசனம் உண்டு.


**தொடர்பு முகவரி**

பரம்பரை அறங்காவலர்

அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில்,

புதூர் செங்கம், செங்கம் வட்டம்,

திருவண்ணாமலை மாவட்டம்.

அலைபேசி எண் : 9443452896, 9443471145.






**அருள்மிகு பிரசன்ன வெங்கட்ரமணப் பெருமாள் திருக்கோயில்,**
நீப்பத்துறை, செங்கம் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

**இறைவன் : அருள்மிகு பிரசன்னவெங்கட்ரமணப் பெருமாள்**

## அமைவிடம்

திருவண்ணாமலை மாவட்டத்தில் செங்கம் நகரிலிருந்து அரூர் செல்லும் வழியில் 30 கி.மீ. தொலைவில் தென்பெண்ணை ஆற்றங்கரையில் உள்ள நீப்பத்துறை எனும் அழகிய கிராமத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. திருவண்ணாமலையிலிருந்தும், செங்கத்திலிருந்தும் பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

செங்கம்

## திருத்தல சிறப்பு

சுமார் 400 ஆண்டுகட்கு முன்பு அழகிய வயல்கள் சூழ்ந்த நீப்பத்துறை எனும் கிராமத்தில் வெள்ளையப்ப சித்தர் எனும் மகான் வாழ்ந்துவந்தார். அவர் தினமும் ஸ்ரீ வெங்கட்ரமண சுவாமி, ஸ்ரீதேவி, பூதேவி ஆகிய உற்சவத் திருமேனிகளைப் பூசித்து வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அவ்வாறு பூசித்து வருகையில் ஒரு நாள் அசரீரியாக ஸ்ரீ பெருமாள் திருவருள்

செய்து அவ்விடத்து திருக்கோயில் ஒன்று எழுப்புமாறு கூறியருளினார். அத்திருவருளின்படி மகானும் உற்சவர் திருமேனிகளுக்குக் கோயில் எழுப்பத் துவங்கினார். கோயில் திருப்பணி இடையறாது நடைபெற்று வருகையில் அவர் விண்ணுலகை அடைந்தார். பின்னர் கிராம மக்கள் ஒன்று சேர்ந்து கோயில் திருப்பணியைப் பூர்த்தி செய்து குடமுழுக்குச் செய்தனர். அருகில் தெண்பெண்ணை ஆற்றின் நடுவே சென்னியம்மன் கோயில் அமைந்துள்ளது. சுற்றிலும் உள்ள கிராமங்களுக்கு குலதெய்வக் கோயிலாக இத்தலம் விளங்குகின்றது.

## பூசைகள்

தினமும் இங்கு இரண்டு கால பூசைகள் நடைபெற்று வருகின்றது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 12.00 மணி வரை

மாலை 4.00 மணி முதல் 7.00 மணி வரை

### தொடர்பு முகவரி


பரம்பரை அறங்காவலர்,

அருள்மிகு பிரசன்ன வெங்கட்ரமணப்
பெருமாள் திருக்கோயில்,

நீப்பத்துறை,
செங்கம் வட்டம், திருவண்ணாமலை மாவட்டம்.

அலைபேசி எண் : 9443492588.






**அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன்**
**திருக்கோயில்,**
அ.கோ.படைவீடு, போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

| | | |
|---|---|---|
| இறைவி | : | அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் |
| தீர்த்தம் | : | கமண்டல நாகநதி, பரசுராமதீர்த்தம் |
| தலவிருட்சம் | : | மாமரம் |
| ஆகமம் | : | காமிகம் |

## திருக்கோயில் அமைவிடம்

சீரும் சிறப்பும் பொருந்திய செந்தமிழ்நாட்டில் உள்ள சக்தித் தலங்கள் பலவற்றுள் திருவண்ணாமலை மாவட்டம், போளூர் வட்டம், அம்மன் கோயில் படை வீட்டில் (அ.கோ.படைவீடு) அமைந்துள்ள அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயிலும் ஒன்றாகும். இத்தலம் கிழக்குத் தொடர்ச்சி மலைகளின் அடிவாரத்தில் சுற்றிலும் அடர்ந்த வனங்களும், வாழைத் தோட்டங்களும், தென்னந்தோப்புகளும் அரணாக விளங்க எழில்மிகு ஊரின் நடுவே அமைந்துள்ளது. இவ்வூர் திருவண்ணாமலை-வேலூர் நெடுஞ்சாலைக்கிடையே உள்ள சந்தவாசல் எனும் கிராமத்திலிருந்து மேற்கே 6 கி.மீ தொலைவில் உள்ளது. திருவண்ணாமலையிலிருந்து 55 கி.மீ. தொலைவிலும், ஆரணியிலிருந்து 20 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது.

திருவண்ணாமலை, ஆரணி, போளூர், வேலூர், காஞ்சிபுரம் ஆகிய ஊர்களிலிருந்து பேருந்து வசதி உள்ளது. அருகிலுள்ள இரயில் நிலையங்கள் சந்தவாசலுக்குத் தெற்கே போளூர், சந்தவாசலுக்கு வடக்கே காட்பாடி ஆகும்.

## தங்கும் வசதி

தங்குவதற்கு இத்திருக்கோயிலுக்குச் சொந்தமான விடுதிகள் உள்ளன.

## வரலாற்றுச் சிறப்பு

சம்புவராய மன்னர்களின் தலைமையிடமாக அ.கோ. படைவீடு இருந்தது. அம்மன்னர்கள் தங்களது அரண் மனையினை இங்குள்ள குன்றுகளின் மீது அமைத்துக்கொண்டு அரசு செய்து வந்தனர். சிறிய கோட்டை, பெரிய கோட்டை எனக் கோட்டைகளும், அவற்றைச் சுற்றிலும் பிரம்மாண்டமான அகழிகளும் இருந்தன. தற்போது அக்கோட்டைகளெல்லாம் அழிவுற்று அதன் எச்சங்களாகக் கோட்டை மலைக்குச் செல்லும் வழியில் தோரண வாயில்கள் மட்டும் எஞ்சியுள்ளன. ஒரு காலத்தில் 1008 சிவாலயங்களும் 108 விஷ்ணு ஆலயங்களும் இங்கு இருந்ததாகக் கூறுகின்றனர்.

## கோயில் அமைப்பு

இத்திருக்கோயில் சுற்றிலும் நான்கு மாடவீதிகளுடன் அமையப் பெற்றுள்ளது. கோயிலின் உட்பிரகாரத்தில் விநாயகர், ஆறுமுகர் தனித்தனி சந்நிதிகளில் உள்ளனர். வடக்கு பிரகாரத்தில் சோமநாத ஈசுவரர், உமாமகேஸ்வரி அம்மன் ஆகியோர் தனிக் கோயில்களில் எழுந்தருளியுள்ளனர். வடகிழக்கு மூலையில் திருக்குளம் ஒன்றும் உள்ளது.



## படைவீடு பெயர்க்காரணம்

அன்னை ரேணுகா தேவி இத்தலத்தையே தனது பிரதான இருப்பிடமாகக் கொண்டு அருளாட்சி புரிந்துவருவதால் இவ்வூர் அம்மன் கோயில் படைவீடு என வழங்கப்படுகின்றது. மேலும் சம்புவராய மன்னர்கள் தங்களது படைகளுடன் தங்கி அரசு செய்ததால் படைவீடு எனப் பெயர் பெற்றது என்று வழங்குவர். படைவீடு என்பது மருவி தற்போது படவேடு எனப்படுகிறது.

## புராண வரலாறு

அன்னை ரேணுகாதேவி, ஜமதக்கினி முனிவரை மணம் முடித்து பரசுராமன் உள்ளிட்ட நன்மக்களைப் பெற்றெடுத்தாள்.



நாள்தோறும் அவள் கடமை தவறாது தனது கணவருக்குப் பணிவிடை செய்து வருகையில் ஒருநாள் பூசைக்கான நீர் முகர்ந்திட வேண்டி, கமண்டல நதிக் கரைக்குச் சென்றாள். அவ்வமயம் வானவீதியில் சென்ற கந்தர்வன் ஒருவனின் சாயலை நீரிலே கண்டு மனந்திரிந்தாள். அவற்றை ஞானக்கண்ணால் அறிந்த ஜமதக்கினி முனிவர் தனது மகன் பரசுராமனை அழைத்து அன்னையின் சிரசைத் துண்டிக்கு மாறு ஆணையிட, அவ்வாணையின்படி பரசுராமர் அன்னையைச் சிரச்சேதம் செய்தார். அவ்வமயம் காலகதியால் வேறு இனத்தைச் சேர்ந்த பெண்ணொருத்தியையும் சிரச் சேதம் செய்தார். பின்னர் திரும்பி வந்து கட்டளையையை நிறைவேற்றிவிட்டதாகத் தந்தையிடம் சொல்லி, தனது தாயை உயிர்ப்பித்து தருமாறு வேண்டினார்.



முனிவர் கமண்டல நீரை மந்தரித்துக் கொடுக்க, அதனைப் பரசுராமர் பெற்றுக்கொண்டு தன் தாய் வெட்டுப்பட்ட இடத்திற்குச் சென்று அங்கே கிடந்த தனது தாயின் தலையினைச் சண்டாளச்சி உடலில் தவறுதலாக

சேர்த்து வைத்து நீரைத் தெளித்தவுடன் அன்னை ரேணுகாதேவி சண்டாளப் பெண்ணின் உடம்போடு உயிர்பெற்று எழுந்தாள். பின்னர் தனக்கு நேர்ந்த வேறுபாட்டினை உணர்ந்து ஜமதக்கினி முனிவரிடம் சென்று நடந்தவற்றை விவரித்தாள். இது தெய்வச் செயலால் நிகழ்ந்தது என்றும் இதனை மாற்ற முடியாது என்றும முனிவர் கூறினார்.

அதன் பின்னர் ரேணுகாதேவி தொடர்ந்து முனிவருக்குப் பணிவிடை செய்து வரும் வேளையில் கார்த்தவீரியார்ச்சுனன் என்பவன் ஜமதக்கினி முனிவரைக் கொன்று விடுகின்றான். கணவன் இறந்ததால் ரேணுகையும் உடன்கட்டையேறினாள். அவ்வமயம் தெய்வவசத்தால் மழைப்பெய்ய, அம்மழை நீரால் சுடலை நெருப்பு அணைந்தது. ரேணுகை தீயினால் உண்டாகிய கொப்புளங்களுடன் வேப்பிலை ஆடையை கட்டிக்கொண்டு மகன் பரசுராமனை மனதில் நினைத்தாள். நினைத்தவுடன் பரசுராமன் எதிரில் தோன்றி நடந்ததையெல்லாம் அறிந்து மிகுந்த கோபத்துடன் சென்று கார்த்தவீரியனைக் கொன்று சத்திரியகுலம் முழுவதையும அழிக்கச் சபதம் ஏற்றார்.

அப்போது மும்மூர்த்திகளும் அங்கு காட்சியளித்து பரசுராமனைச் சாந்தப்படுத்தி ஜமதக்கினி முனிவரை உயிர்ப்பித்தனர். ரேணுகாதேவி சிவபெருமானைப் பணிந்து சிரசு மட்டும் பிரதானமாகக் கொண்டு விளங்கும் வண்ணம் தெய்வத்திருவுருவாய் விளங்கவும், உடலின் மற்ற பாகங்கள் முனிவருடன் சொர்க்கத்திற்குச் செல்லவும் அருள் பெற்றாள். அத்திருவருளின்படி ரேணுகாதேவி சிரசை மட்டும் பிரதானமாகக் கொண்டு இங்கு எழுந்தருளி அருள்பாலிக்கின்றாள்.



## கருவறை சிறப்பு

சக்தி தலங்களுள் இத்தலம் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். கருவறையில் அம்மன் சுயம்பு ரூபமாய் எழுந்தருளியுள்ளதுடன் பிரமன், திருமால், சிவன் ஆகிய மும்மூர்த்திகளையும் அருகில் கொண்டு உலகில் சக்தியே பிரதானம் என்பதை எடுத்துக்காட்டி அருள்புரிந்து வருகின்றாள். பின்புறம் அம்மனின் சுதை வடிவிலான திருமேனியுள்ளது. அருகில் ஆதிசங்கரரால் பிரதிட்டை செய்யப்பட்ட பாணலிங்கமும், ஜனாகர்ஷண சக்கரமும் உள்ளது.

ஜமதக்கினி முனிவர் யாகஞ் செய்த இடத்திலிருந்து ஒவ்வொரு வருடமும் ஆனி மாதத்தில் வெட்டியெடுத்து வரப்படும் மண்தான் இங்கு திருநீற்றுப் பிரசாதமாக வழங்கப்படுகிறது. இதனை நெற்றியில் அணிந்துகொள்ளப் பிணிகள் அகலும், தீய சக்திகள் அண்டாது.

## தனிச் சிறப்பு

திருக்கோயில்கள் நிறைந்த இவ்வூரானது சுற்றிலும் மலைகள், தென்னந்தோப்பு, வாழைத்தோப்பு என பசுஞ்சோலைகள் சூழ்ந்து இயற்கை அன்னையின் கோயிலாகவும் திகழ்கின்றது. இங்கு ரேணுகாம்பாள் அம்மனைத் தரிசித்து சுற்றிலும் உள்ள கோயில்களைத் தரிசிக்க ஒருநாள் போதாது. எனவே இத்தலத்தில் தங்கி நிதானமாக அனைத்துக் கோயில்களையும் தரிசித்து மகிழ்ந்து இயற்கை அன்னையின் எழிலான காட்சியையும் அனுபவித்து மகிழலாம்.

## பூசைகள்

இத்திருக்கோயிலில் காமிக ஆகமப்படி தினமும் மூன்று கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசை விவரம் |
|---|---|
| காலை 7.30 மணி | காலசந்தி பூசை |
| முற்பகல் 11.30 மணி | உச்சிகால பூசை |
| மாலை 6.00 மணி | சாயரட்சை பூசை |

## திருவிழாக்கள்

பிரதி வருடம் ஆடிமாதம் துவங்கி ஏழு வெள்ளிக்கிழமைகளில் ஆடிப்பெருவிழா மிகவும் சிறப்புடன் கொண்டாடப்படுகின்றது. நாட்டின் பல பாகங்களிலிருந்தும் பல்லாயிரக்கணக்கில் பக்தர்கள் திரண்டுவந்து ஆடித்திருவிழாவைச் சிறப்பிக்கின்றனர். சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, நவராத்திரி முதலான நாட்களில் சிறப்பு பூசைகளும் மாதந்தோறும் பௌர்ணமியன்று இரவு வேளையில் சிறப்பு வழிபாடுகளும் செய்யப்படுகின்றன.

## பரிகாரச் சிறப்பு

இங்கு வந்து வணங்குவோர் அம்மை, பில்லி, சூனியம், முதலான பிணிகளிலிருந்து நீங்கிப் பூரண உடல்நலம் பெறுகின்றனர். அம்மை நோய்க்குச் சிறந்த பரிகாரத் தலமாக இது விளங்குகின்றது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 1.30 மணி வரை
மாலை 3.00 மணி முதல் 8.30 மணி வரை

வெள்ளி, ஞாயிறு ஆகிய நாட்களில் முழு வேளையும் தரிசனம் உண்டு.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயில்,
அ.கோ.படைவீடு- 606 905. போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.
தொலைபேசி எண் : 04181-248424.
மின்னஞ்சல் : renugambalammanpadaiveedu@gmail.com
இணையதளம் : www.renugambal.com

### அருகில் உள்ள தலம்

ஏரிக்குப்பம்.





**அருள்மிகு இராமச்சந்திர சுவாமி**
**திருக்கோயில்,**
அ.கோ.படைவீடு, போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

இறைவன் : அருள்மிகு இராமச்சந்திர சுவாமி

இறைவி : அருள்மிகு செண்பகவல்லி தாயார்

ஆகமம் : பாஞ்சராத்ரம்

## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் அ.கோ.படைவீடு, அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயிலின் துணைக் கோயில்களுள் ஒன்றாக உள்ளது. இது ரேணுகாம்பாள் கோயிலிலிருந்து 1 கி.மீ. தூரத்திலுள்ளது.

## தங்கும் வசதி

அ.கோ.படைவீடு

## திருத்தலச் சிறப்பு

இத்தலத்தில் இராமபிரான் பத்மாசனக் கோலத்தில் அமர்ந்து சின்முத்திரை தாங்கி யோகநிலையில் எழுந்தருளியுள்ளார்.

அருகில் சீதாதேவி, இலட்சுமணன் ஆகியோர் உள்ளனர். எதிரில் அனுமன் ஓலைச்சுவடிப் படிப்பதுபோல் அமர்ந்துள்ள திருக்கோலம் தனித்தன்மை கொண்டதாகும். சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தலமாக இது உள்ளது. பிரகாரத்தில் செண்பகவல்லி தாயார் தனிக் கோயில் கொண்டு அருள் பாலிக்கிறாள்.



## பூசைகள்

இத்திருக்கோயிலில் தினமும் மூன்று கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசை விவரம் |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி பூசை |
| முற்பகல் 11.00 மணி | உச்சிகால பூசை |
| மாலை 5.30 மணி | சாயரட்சை பூசை |

## விழாக்கள்

சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, இராம நவமி, அனுமன் ஜெயந்தி முதலான உற்சவங்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 1.00 மணி வரை
மாலை 4.00 மணி முதல் 7.30 மணி வரை

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயில்,
அ.கோ.படைவீடு- 606 905. போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்
தொலைபேசி எண் : 04181-248424
மின்னஞ்சல் : padaiveeduyogaramar@Sancharnet.in
இணையதளம் : www.yogaramar.com





**அருள்மிகு அம்மையப்ப ஈசுவரர்**
**திருக்கோயில்,**
அ.கோ.படைவீடு, போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு அம்மையப்ப ஈசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு அபர்ணாம்பிகை |
| தீர்த்தம் | : | சிவகங்கை தீர்த்தம் |
| ஆகமம் | : | காமிகம் |

## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் அ.கோ.படைவீடு, அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயிலின் துணைக் கோயில்களுள் ஒன்றாக உள்ளது. இது ரேணுகாம்பாள் கோயிலிலிருந்து 1 கி.மீ. தூரத்திலுள்ளது.

## தங்கும் வசதி

அ.கோ.படைவீடு

### திருத்தலச் சிறப்பு

சுமார் 1000 ஆண்டுகட்கு முட்பட்ட தலமாக இத்திருக்கோயில் உள்ளது. சுமார் 200 ஆண்டுகட்கு முன்பு முற்றிலும் அழிந்துவிட்ட இத்திருக்கோயில் புனரமைக்கப்பட்டு தற்போது நெடிய மதில்களுடன் கூடிய எழில்மிக்க கருங்கல் கோயிலாக திகழ்கின்றது.

### பூசைகள்

இத்திருக்கோயிலில் தினமும் மூன்று கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசை விவரம் |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி பூசை |
| முற்பகல் 11.00 மணி | உச்சிகால பூசை |
| மாலை 5.30 மணி | சாயரட்சை பூசை |

### விழாக்கள்

சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, பிரதோசம், அன்னாபிசேகம், கார்த்திகை தீபம், திருவாதிரை, சிவராத்திரி முதலான உற்சவங்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 1.00 மணி வரை

மாலை 4.00 மணி முதல் 7.00 மணி வரை

### தொடர்பு அலுவலக முகவரி

**செயல் அலுவலர்**
**அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயில்,**
**அ.கோ.படைவீடு- 606 905. போளூர் வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்**
**தொலைபேசி எண் : 04181-248424**
**மின்னஞ்சல் :** renugambalammanpadaiveedu@gmail.com
**இணையதளம் :** www.renugambal.com





**அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்,**
அ.கோ.படைவீடு, போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

இறைவன் : அருள்மிகு சுப்பிரமணியசுவாமி

இறைவி : அருள்மிகு வள்ளி, தெய்வயானை

## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் அ.கோ.படைவீடு, அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயிலின் துணைக் கோயில்களுள் ஒன்றாக உள்ளது. இது ரேணுகாம்பாள் கோயிலுக்கு எதிரே சிறு குன்றின் மீது அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

அ.கோ.படைவீடு

## திருத்தலச் சிறப்பு

சிறுகுன்றின் மீது அமைந்துள்ள இத்திருக்கோயிலின் அழகிய கருங்கல் கருவறையில் வள்ளி தேவசேனா சமேதராக மயில்மேல் நின்ற கோலத்தில் சுப்பிரமணியப் பெருமான் எழுந்தருளியுள்ளார்.

மயில்மீது நின்ற கோலத்தில் முருகப் பெருமானைத் தரிசிப்பது வேறெந்தத் தலத்திலும் காணவியலாத சிறப்பாகும்.

### பூசைகள் மற்றும் விழாக்கள்

தினமும் ஒருகால பூசை இங்கு செய்யப்படுகின்றது. சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, கார்த்திகை தீபம், மாதந்தோறும் வரும் கிருத்திகை, கந்தசஷ்டி முதலான நாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 8.00 மணி முதல் 10.00 மணி வரை
மாலை 5.00 மணி முதல் 6.00 மணி வரை

**தொடர்பு அலுவலக முகவரி**

**செயல் அலுவலர்**

**அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயில்,**

**அ.கோ.படைவீடு- 606 905. போளூர் வட்டம்,**

**திருவண்ணாமலை மாவட்டம்.**

**தொலைபேசி எண் : 04181-248424.**

**மின்னஞ்சல் :** renugambalammanpadaiveedu@gmail.com
**இணையதளம் :** www.renugambal.com



## மயில் வாகனர்

முருகனின் வாகனம் மயில். அதனால் அவரை மயில் வாகனர் என அழைப்பர். சூரசங்காரத்தின்போது இந்திரன் மயிலாக இருந்து முருகனைத் தாங்கினான். எனவே திருவிழாக் காலங்களில் சூரசங்காரத்திற்கு முன்பு தேவேந்திர மயில் வாகனத்தில் முருகப் பெருமானை எழுந்தருளச் செய்வர். இதில் மயிலின் தலை பெருமானின் இடப்பக்கம் இருக்கும். சூரசங்காரத்திற்குப் பின்பு சூரபத்மன் மயிலாகவும், சேவலாகவும் மாறினான். சூரசங்காரத்திற்குப் பிறகு முருகப் பெருமான் எழுந்தருளும் மயில் வாகனத்தில் பெருமானின் வலப்பக்கம் மயிலின் தலை இருக்கும் இதனை அசுர மயில் என்பர்.



**அருள்மிகு வேல்முருகன் திருக்கோயில்,**
அ.கோ.படைவீடு, போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் அ.கோ.படைவீடு, அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் கோயிலிலிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் சிறுகுன்றின் மீது அமைந்துள்ளது.

## திருத்தலச் சிறப்பு

பண்டைக்காலத்தில் இங்கு பரசுராமர் தவம் செய்ததாகக் கூறப்படுகிறது. சிரஞ்சீவிகள் எழுவரில் ஒருவர் பரசுராமர், குன்றின் மீது குகை உள்ளதாகவும் அதில் பரசுராமர் வாழ்வதாகவும் சொல்கின்றனர். இங்கு போகர் பிரதிட்டை செய்த வேல் ஒன்று உள்ளது. கூரிய அந்த வேலினைப் பிரதான தெய்வமாகக் கொண்டு சிறு கோயிலொன்று எழுப்பப்பட்டு வழிபாடு செய்யப்படுகிறது. அதனால் இத்தலம் வேல்முருகன் தலம் என வழங்கப்படுகிறது.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

தினமும் ஒருகால பூசை நடைபெறும் இத்திருக்கோயிலில் கிருத்திகை, கந்தசஷ்டி முதலான உற்சவங்கள் நடைபெறுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 8.00 மணி முதல் 10.00 மணி வரை

மாலை 5.00 ம ணி முதல் 6.00 மணி வரை

### தொடர்பு முகவரி


**செயல் அலுவலர்**<br>
**அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயில்,**<br>
**அ.கோ.படைவீடு- 606 905. போளூர் வட்டம்,**<br>
**திருவண்ணாமலை மாவட்டம்**<br>
**தொலைபேசி எண் : 04181-248424**<br>
**மின்னஞ்சல் :** renugambalammanpadaiveedu@gmail.com<br>
**இணையதளம் :** www.renugambal.com




## சின்முத்திரை

ஞானத்தைக் காட்டும் அடையாளம் சின்முத்திரையாகும். சுட்டு விரலால் பெருவிரலின் அடியைச் சேர்த்து மற்ற மூன்று விரல்களையும் வேறாக ஒதுக்கிக் காட்டப்படும் முத்திரை இதுவாகும்.

இதில் பெருவிரல் இறைவனையும், கட்டுவிரல் ஆன்மாவையும் குறிக்கின்றன.

மற்ற மூன்று விரல்களில், நடுவில் ஆணவ மலத்தையும், அணிவிரல் கன்ம மலத்தையும், சுண்டு விரல் மாயா மலத்தையும் குறிக்கும். ஆணவாதி மலங்களை விட்டு ஆன்மா இறைவனை அடைந்து இன்புறுவதை சின்முத்திரை காட்டுகிறது.



**அருள்மிகு இலட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயில்,**
அ.கோ.படைவீடு, போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

## திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் ரேணுகாம்பாள் கோயிலிலிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் சிறு குன்றின் மீது அமைந்துள்ளது.

## திருத்தலச் சிறப்பு

கமண்டல நதியின் தென்கரையில் உள்ள குன்றின் மீது இத்தலம் உள்ளது. கருவறையில் நரசிம்மரின் வலப்பக்கம் இலட்சுமிதேவி அமர்ந்துள்ளமை சிறப்பான கோலமாகும். நரசிம்ம ஜெயந்தியன்று இப்பெருமானை வணங்குவோரது பிணிகள் அகலும்.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

தினமும் இரண்டு கால பூசைகள் நடைபெறும் இத்திருக்கோயிலில் மாதந்தோறும் வரும் சுவாதி நாளன்று சிறப்பு வழிபாடு செய்யப்படுகிறது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 8மணி முதல் 11.00 மணி வரை
மாலை 4.30 ம ணி முதல் 6.00 மணி வரை


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**
**அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயில்,**
**அ.கோ.படைவீடு- 606 905. போளூர் வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்**
**தொலைபேசி எண் : 04181-248424**
**மின்னஞ்சல் :** renugambalammanpadaiveedu@gmail.com
**இணையதளம் :** www.renugambal.com




## உயிர்களின் தோற்றம்

உயிர்களின் தோற்றம் நான்கு வகையாகும்.

1. அண்டஜம் - முட்டையில் தோன்றுவன
2. சுவேதஜம் - வேர்வையில் தோன்றுவன
3. உத்பிஜம் - தாவரங்கள்
4. சராயுஜம் - கருப்பையில் தோன்றுவன, மனிதரும், விலங்குகளுமாம்.

## உயிர்களின் ஏழுவகைப் பிறப்புகள்

உயிர்கள் 84 இலட்சம் உருவ வேற்றுமைகளோடு ஏழு வகைப் பிறப்புகள் எடுக்கின்றன.

1. தேவர் - பதினோரு இலட்சம் உருவ வேறுபாடு.
2. மனிதர் - ஒன்பது இலட்சம் உருவ வேறுபாடு.
3. விலங்கு - பத்துலட்சம் உருவ வேறுபாடு.
4. பறவை - பத்து இலட்சம் உருவ வேறுபாடு.
5. ஊர்வன -பதினைந்து இலட்சம் உருவ வேறுபாடு.
6. நீர்வாழ்வன - பத்து இலட்சம் உருவ வேறுபாடு.
7. தாவரம் - பத்தொன்பது இலட்சம் உருவ வேறுபாடு.



**அருள்மிகு வேணுகோபாலசுவாமி**
**திருக்கோயில்,**
கோட்டைமலை, அ.கோ.படைவீடு,
போளூர் வட்டம், திருவண்ணாமலை மாவட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு வேணுகோபால சுவாமி |
| இறைவி | : | அருள்மிகு சுந்தரவல்லி தாயார் |
| ஆகமம் | : | பாஞ்சராத்ரம் |

## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் அ.கோ.படைவீடு, அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் கோயிலுக்குப் பின்புறம் சுமார் 8 கி.மீ. தொலைவிலுள்ள கோட்டை மலைமீது அமைந்துள்ளது. மலை மீது செல்ல டிராக்டர் வசதி உண்டு.

## திருத்தலச் சிறப்பு

கோட்டை மலை என்று வழங்கப்படும் இம்மலைமீது முன்பு சம்புவராய மன்னர்களின் அரண்மனை இருந்தது. தற்போது அரண்மனை அழிந்து அதன் எச்சங்களாகத் தோரணவாயில் மட்டும் உள்ளது. மலைமீது அழகிய கருங்கல் கோயிலாக, அருள்மிகு வேணுகோபாலசுவாமி ஆலயம் அமைந்துள்ளது. கருவறையினுள் சுமார் 5 அடி உயரம்கொண்டு பன்னிரு



கரங்களில் சங்குச் சக்கரம் ஏந்திய வண்ணமும் முன்னிரு கரங்களில் புல்லாங்குழ லிசைத்த வண்ணமும் வேணு கோபால சுவாமி பாமா ருக்மணி சமேதராகக் கிழக்கு நோக்கி காட்சியளிக்கின்றார். பிரகாரத்தில் சுந்தரவல்லித் தாயார் தனிச் சன்னிதியில் அருள்பாலிக்கின்றாள்.

## பூசை தனிச் சிறப்பு

வாரந்தோறும் சனிக்கிழமையில் மட்டும் இத்திருக்கோயிலில் வழிபாடு நடைபெறுகின்றது. முற்காலத்தில் தேவப்பிரசன்னம் பார்த்தபோது, வேணுகோபால சுவாமிக்கு வாரம் ஒருநாள் மட்டும் பூசை அலங்காரங்கள் செய்ய வேண்டும் என்று தேவவாக்கு அருளியதால் சனிக்கிழமைகளில் மட்டும் இத்திருக்கோயில் திறக்கப் பட்டு பூசை மற்றும் வழிபாடுகள் செய்யப்படுகிறது.



## போக்குவரத்து வசதி

கரடுமுரடான பாதையாதலால், மலைமீது செல்ல டிராக்டர் வசதி உள்ளது. ஜீப்பில் பயணிக்கலாம்.

## திருக்கோயில் தரிசன நேரம் (சனிக்கிழமை மட்டும்)

காலை 7 மணி முதல் 4.00 மணி வரை


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**
**அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயில்,**
**அ.கோ.படைவீடு - 606 905. போளூர் வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**
**தொலைபேசி எண் : 04181-248424.**
**மின்னஞ்சல் :** renugambalammanpadaiveedu@gmail.com
**இணையதளம் :** www.renugambal.com






**அருள்மிகு இலட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயில்,**

போளூர், திருவண்ணாமலை மாவட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு இலட்சுமி நரசிம்மசுவாமி |
| இறைவி | : | அருள்மிகு கனகவல்லி தாயார் |
| தீர்த்தம் | : | புலஸ்தியர் தீர்த்தம் |
| ஆகமம் | : | வைகானசம் |
| விமானம் | : | கிரி ராஜ விமானம் |

## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் திருவண்ணாமலை வேலூர் சாலையில் திருவண்ணாமலையிலிருந்து 25 கி.மீ. தொலைவிலுள்ள போளூர் நகரின் மையப்பகுதியில் மலைமீது அமைந்துள்ளது. திருவண்ணாமலை, வேலூர், ஆரணி, வந்தவாசி ஆகிய ஊர்களிலிருந்து பேருந்து வசதியுள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குப் போளூரில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தலச் சிறப்பு

இத்தலம் அமைந்துள்ள மலையானது சம்பத்கிரி என வழங்கப்படுகிறது. சோழர் காலத்தில் தொண்டை மண்டலத்தில் அடங்கிய இருபத்தி நான்கு கோட்டங்களுள் ஒன்றான பல்குன்றக் கோட்டம் என்ற பகுதியில் சம்பத்கிரி எனும் பெயரில் சிறப்புடன் திகழ்ந்தது. விசயநகர மன்னர்களால் மலைமீதுள்ள ஆலயம் புனரமைக்கப்பட்டது. அகத்தியர், புலஸ்தியர் ஆகிய முனிவர்கள் மலைமீது தவம் செய்ததாகப் புராண வரலாறு.

மலைமீதுள்ள ஒரு குகையில் அகத்தியர், புலஸ்தியர் ஆகிய இருவரும் தவம் செய்து வருகையில், ஒருநாள் இறைவன் பூசைக்கான கனியைப் புலஸ்தியர் தவறுதலாக நுகர்ந்ததால், கை முடமாகுமாறு சாபம் பெற்றார். பின்னர் அகத்தியரின் அருளாசிப்படி 48 நாட்கள் விரதமிருந்து அருகில் உள்ள செய்யாற்றில் நீராடி, அங்கிருந்து புனிதநீர் கொண்டுவந்து மலைமீதேறிச் சென்று இலட்சுமி நரசிம்மரைப் பூசை செய்து புலஸ்தியர் சாபம் நீங்கப்பெற்றார். அதனால் போளூருக்குப் புலஸ்தியபுரம் என்றொரு பெயரும் உண்டு.

மலைமீதுள்ள குகையில் தமிழிசைப் பக்திப் பாடல்கள் பாடிய அச்சுததாசரும், ஸ்ரீ ஞானானந்தகிரி சுவாமிகளும் இலட்சுமி நரசிம்மரைப் பலநாள் பாடிப் பரவியதாக வழங்குகின்றனர். குகையருகில் புலஸ்தியர் தீர்த்தம் உள்ளது. மலைமீது செல்ல சுமார் 840 கருங்கற்படிகள் உள்ளன.

## பறவைகள் கிரிவலம்

இம்மலைமீது மதிய வேளையில் இரண்டு பறவைகள் வட்டமிட்டுக் கிரிவலம் செய்யும் காட்சி இன்றும் நாம் காணும் அதிசயமாகும். அகத்தியர், புலஸ்தியர் ஆகிய இருவரே இரண்டு பறவைகளாகத் தினமும் இலட்சுமி நரசிம்மரை வழிபடுவதாக வழங்குகின்றனர்.

## திருத்தல வரலாறு

பண்டைக் காலத்தில் சம்பத்கிரியின் அடிவாரத்தில் கல் தச்சர்கள் வசித்து வந்தனர். ஒரு சமயம் இறைத்திருமேனிக்கான கருங்கல்லைக் கொணர வேண்டி அவர்கள் மலைமீது சென்றனர். அங்கு ஒரு பாறையின் மீது உதிரம் பெருகி வருவதைக் கண்டு பயந்தோடிக் கீழே இறங்கிவந்து ஊராரிடம் விவரத்தைக் கூற, அதனைக் கேட்ட அனைவரும் ஒன்று சேர்ந்து மலைமீது சென்று பார்க்கையில், அங்கு சங்கு சக்கரத்தைத் திருக்கரங்களில் ஏந்திய வண்ணம் இலட்சுமி நரசிம்மரின் உருவில் உதிரப் பெருக்கு தெரிந்தது. அனைவரும் நாராயண நாமஞ்சொல்லி விழுந்து வணங்கினர். ஒரு புண்ணிய காலத்தில் இலட்சுமி நரசிம்மசுவாமியின் திருமேனியை அங்குத் தாபித்துக் கோயில் எழுப்பினர். ஸ்ரீ பெருமாளின் சக்தி எட்டுத் திக்கும் பரவிற்று. பக்தர்களின் வருகையால் நாளும் வழிபாடு அங்கு செழித்தது. இப்பெருமாளை இராமபிரான் வழிபட்டதாகவும் வழங்குகின்றனர். கருவறையில் சுயம்பு உருவமாக இலட்சுமி நரசிம்மர் காட்சியருளுகின்றார். அருகில் சிலாரூபத் திருமேனியும் உள்ளது. கனகவல்லித் தாயார் தனி சன்னதி கொண்டு அருள்புரிகின்றாள்.

மகா மண்டபத்தில் உட்சுவற்றில் பாகவதபுராண வண்ண ஓவியங்கள் உள்ளன. அருகில் உள்ள நீர்ச் சுனை சந்திர புட்கரணி என்று வழங்கப்படுகிறது. முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் கல்வெட்டுக்கள் இங்குள்ளன.



## மலையடிவார கோயில்

மலையடிவாரத்தில் ஊரின் மத்தியில் அருள்மிகு வேணுகோபால சுவாமி ஆலயம் உள்ளது. மலைக்கோயிலின் உற்சவ விக்கிரகங்கள் இங்குள்ளன. ஸ்ரீ கனகவல்லித் தாயார், ஆண்டாள், கருடாழ்வார் ஆகியோருக்குச் சன்னதிகள் உள்ளன.

## பூசைகள்

இத்திருக்கோயிலில் தினமும் இரண்டு கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசை விவரம் |
| --- | --- |
| காலை 8.00 மணி | காலசந்தி பூசை |
| மாலை 5.30 மணி | சாயரட்சை பூசை |

## திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, கருடசேவை, நரசிம்ம ஜெயந்தி முதலான உற்சவங்கள் சிறப்பாக நடைபெறுகின்றன. சித்திரைப் பௌர்ணமியன்று இலட்சுமி நரசிம்ம சுவாமியின் தீர்த்தவாரி அருகில் உள்ள செய்யாற்றில் நடைபெறுகிறது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.30 மணி முதல் 12.00 மணி வரை
மாலை 3.00 மணி முதல் 7.00 மணி வரை

## தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு இலட்சுமி நரசிம்ம சுவாமி திருக்கோயில்,
போளூர்,
திருவண்ணாமலை மாவட்டம்.
ஆய்வாளர் அலைபேசி எண் : 9884650991.






**அருள்மிகு மல்லிகார்ச்சுன சுவாமி**
**திருக்கோயில்,**
பருவதமலை, போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு மல்லிகார்ச்சுன சுவாமி காரியுண்டிக் கடவுள் |
| இறைவி | : | அருள்மிகு பிரமராம்பிகை |
| ஆகமம் | : | காமிகம் |

## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் திருவண்ணாமலை மாவட்டம் போளூரிலிருந்து செங்கம் செல்லும் சாலையில் சுமார் 25 கி.மீ. தொலைவிலுள்ள தென்மாதிமங்கலம் எனும் கிராமத்தினருகே உள்ள பருவத மலை எனும் நெடிய மலைமீது அமைந்துள்ளது. திருவண்ணாமலை யிலிருந்து பருவதமலை சுமார் 25 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கு மலைமீது ஏறிச் செல்லக் கருங்கல்படி, ஏணிப்படி, தண்டவாளப்படி, கடப்பாறைப்படி முதலிய கடினமான பாதைகள் வழியே செல்லவேண்டும். உயர்ந்த மலை என்பதாலும் அடர்ந்த வனப்பகுதி என்பதாலும் பக்தர்கள் துணையுடன் செல்வது நல்லது. திருவண்ணாமலை, போளூர், செங்கம் ஆகிய ஊர்களிலிருந்து பேருந்து வசதியுள்ளது. மலைக்குத் தென்புறமுள்ள

தென்மாதிமங்கலம் எனும் கிராமத்தின் வழியாகவும் மலைக்கு மேற்குத் திக்கிலுள்ள கடலாடி எனும் கிராமத்தின் வழியாகவும் மலைமீது ஏறலாம்.

## தங்கும் வசதி

தங்குவதற்குப் போளூரில் தனியார் விடுதிகள் உள்ளன.

## வரலாற்றுச் சிறப்பு

சங்க காலத்தில் நன்னன் சேய்நன்னன் எனும் அரசன் செங்கண்மா எனும் ஊரினைத் தலைமையிடமாகக் கொண்டு அரசு செய்து வந்தான். அவனது காலத்தில் இம்மலை நவிரமலை என்றும் மலைமீது அமைந்துள்ள சுவாமியின் திருப்பெயர் காரியுண்டிக் கடவுள் என்றும் வழங்கப்பட்டது. இதனை மலைபடுகடாம் எனும் சங்க கால நூல் தெரிவிக்கின்றது. நவிரம் என்பதற்குத் தலை, உச்சி என்பது பொருளாகும். நவிர மலை என்றால் மலைகளுக்கெல்லாம் மலை, மலை உச்சி, தலையாய மலை என்பது பொருளாகும். உழவர்கள், சித்திரைத் தமிழ்ப் புத்தாண்டில் பொன்னேர் பூட்டும் நிகழ்வினை நவிரப்பட்டம் அதாவது ஆண்டில் தலை (முதல்) பட்டம் என்று வழங்குவதை இன்றும் வழக்கத்தில் காணலாம்.



## புராண வரலாறு

அஞ்சனை மைந்தன் அனுமன் சஞ்சீவி மலையைத் தூக்கிச் செல்லும் வழியில் அதன் ஒரு பகுதி இப்பகுதியில் விழுந்ததால் இம்மலை சஞ்சீவி பர்வதம் என வழங்கப்படுகின்றது.

சிவபெருமான் தனது ஒரு திருப்பாதத்தை திருவண்ணாமலை மீதும் மற்றொரு திருப்பாதத்தை பருவத மலை மீதும் வைத்த காரணத்தினால் இது ஒரு கயிலாய பர்வதம் என்று வழங்கப்படுகின்றது.

சூரபதுமனை அழித்ததனால் ஏற்பட்ட தோசத்தைப் போக்கிக் கொள்ள கந்தன் பருவதமலையை அடைந்து காரியுண்டிக் கடவுளை வணங்கியதால் இது கந்தமலை என வழங்கப்படுகிறது.

இலட்சுமி தேவி திருமாலை மணஞ்செய்துகொள்ளப் பல இடங்களில் தவஞ்செய்தாள். இருப்பினும் அவளது எண்ணம் நிறைவேறவில்லை. பிறகு பருவதமலையை அடைந்து தவஞ் செய்து திருமாலைக் கல்யாணஞ்செய்து கொண்டமையால் இம்மலை மங்கலமலை என்று வழங்கப்படுகிறது.

ஒருசமயம் நந்திதேவர் சிவபெருமானிடம், தான் மலையாக இருந்து அம்மலையாகிய சிரசின்மீது இறைவன் வீற்றிருக்க வேண்டும் என்று வேண்டிக்கொண்டதற்கிணங்க, இவ்விடத்தில் நந்திதேவரே மலையாக வீற்றிருப்பதாகவும், அதன்மீது பெருமான் எழுந்தருளியுள்ளமையால் இம்மலை நந்தி மலை எனவும் வழங்கப்படுகிறது.

குறுமுனி அகத்தியர் தென்திசை செல்லும் வழியில் பருவதமலைக்கு எழுந்தருளி திரிசூலத்தைப் பிரதிட்டை செய்து வணங்கியமையால் திரிசூலகிரி எனவும் வழங்கப்படுகிறது.

இவ்வாறு பல புராண வரலாறுகளைத் தன்னுள் கொண்டு சுமார் 4600 அடி உயரமுள்ள நெடிய மலைமீது அமைந்துள்ள திருக்கோயிலில் அருவுருவ இலிங்கத் திருமேனி கொண்டு மல்லிகார்ச்சுனர் எனும் திருப்பெயருடன் பெருமான் எழுந்தருளியுள்ளார். இங்கு பகலவனின் கதிர்கள் சுவாமி மீது பட்டு பாஸ்கர அபிசேகம் நடைபெறுவதை மாசித் திங்களில் கண்டு வணங்கலாம்.



இங்குள்ள அம்பிகையின் திருப்பெயர் பிரமராம்பிகை என்பதாகும். இரவில் அம்மன் கன்னத்தில் சோதியொளி ஒன்று தெரிவதாகப் பக்தர்கள் தெரிவிக் கின்றனர்.

### பௌர்ணமி பூசை

மாதந்தோறும் பௌர்ணமி நாட்களில் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் மலைமீது ஏறிச் சென்று சுவாமியை வழிபட்டுவருவது பெருஞ் சிறப்பாகும். பக்தர்கள் தங்கள் கரங்களினாலேயே இலிங்கத்திற்கு அபிசேக ஆராதனைகள் செய்கின்றனர். சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, அன்னா பிசேகம், கார்த்திகை தீபம், சிவராத்திரி முதலான நாட்களில் சிறப்பு வழிபாடு நடைபெறுகின்றது.



### பருவத மலை மூலிகைகள்

மாதந்தோறும் பௌர்ணமி அன்று இரவில் பக்தர்கள் மலைமீது ஏறிச் சென்று சுவாமியை வழிபடுவதால் அவர்கள் மூலிகைக் காற்றின் நுகர்ச்சியைப் பெற்று சிறந்த மனவளமும், உடல் நலமும் பெறுகின்றனர். இம் மலைமீது ஆள்விரட்டி, பேய்விரட்டி, கருநொச்சிலி, கருஊமத்தை, கருநெல்லி, வெள்ளெருக்கு,ஓரிதழ்த் தாமரை, கருந்துளசி, சிவனார்வேம்பு, சொட்டுநீலி முதலான அரிய மூலிகைகள் உள்ளதாகச் சொல்கின்றனர். மலைமீது செல்லும் வழியில் வெள்ளந்தாங்கீசுவரர் ஆலயம், பச்சையம்மன் ஆலயம், அதிவீர ஆஞ்சநேயர் ஆலயம், வீரபத்திரர் ஆலயம், சப்தகன்னியர் ஆலயம், விசுவாமித்ரர் குன்று முதலான இடங்களைத் தரிசித்துச் செல்லலாம். மலைமீது செல்வோர் சிற்றுணவு, தண்ணீர், போர்வை, டார்ச் லைட், பூசைப் பொருட்கள் முதலானவற்றை அவசியம் உடன் எடுத்துச் செல்லுதல் வேண்டும். இம்மலையின் சிறப்பை மலைபடுகடாம் தெரிவிக்கின்றது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 9.00 மணி முதல் 11.00 மணி வரை

## தொடர்பு முகவரி

செயல் அலுவலர்,

அருள்மிகு சிவசுப்பிரமணியசுவாமி திருக்கோயில்,

எலத்தூர் மோட்டூர், போளூர் வட்டம், திருவண்ணாமலை மாவட்டம்.

ஆய்வாளர் அலைபேசி எண் : 9884650991.

## அருகில் உள்ள தலங்கள்

தென்மகாதேவ மங்கலம், எலத்தூர் மோட்டூர்.



## பஞ்சமுக ஆஞ்சநேயர்

சிவபெருமானின் அம்சமான ஆஞ்சநேயருக்கு ஐந்து முகங்கள் உண்டு. கிழக்குப் பக்கம் அனுமன் முகமும், மேற்கில் கருடனும், வடக்கில் வராக அவதாரமும், தெற்கில் நரசிம்மரும், மேல்நோக்கி குதிரைத் தலை ஹயக்ரீவர் முகமும், பஞ்சமுக ஆஞ்சநேயருக்கு அமைந்து விளங்குகின்றன.



**அருள்மிகு கரைகண்டேசுவரர் திருக்கோயில்,**
தென்மாதிமங்கலம், போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு கரைகண்டேசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு பிருகந்நாயகி |
| தீர்த்தம் | : | சேயாறு |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## திருக்கோயில் அமைவிடம்

போளூரிலிருந்து செங்கம் செல்லும் சாலையில் சுமார் 20 கி.மீ. தொலைவில் தென்மகாதேவமங்கலம் எனும் தென்மாதிமங்கலம் அமைந்துள்ளது. போளூரிலிருந்தும், செங்கத்திலிருந்தும் பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குப் போளூரில் தனியார் விடுதிகள் உள்ளன.

## புராண வரலாறு

அன்னை காமாட்சிதேவி சிவபெருமானின் இடப்பாகத்தைப் பெறுவதற்காக திருவண்ணாமலைக்குச் செல்லும் வழியில் ஓரிடத்தில் வாழைப்பந்தலமைத்து பூசைக்குண்டான நீரினைக் கொண்டுவருமாறு முருகப் பெருமானிடம் கூறினள். முருகன் தனது கூரிய வேலினை மேற்குத் திசை நோக்கி எறிந்து ஒரு ஆற்றை உண்டாக்கினார்.

சேயாறு எனும் அந்த ஆற்றில் நீர் சிவந்த நிறத்தில் வருவதைக் கண்ட முருகப் பெருமான் அதுபற்றி அன்னையிடம் கேட்டபோது, தீவினைகள் பல புரிந்து பின்னாளில் மனந்திருந்தி தவஞ்செய்து கொண்டிருந்த ஏழு அந்தண முனிவர்களை நீ எறிந்த வேலானது தாக்கியதால் அவர்களதுஉதிரம் ஆற்றில் கலந்து செந்நிறமாயிற்று. அந்தணர்களைக் கொன்றதற்குக் கழுவாயாக இந்த ஆற்றின் கரையில் சிவலிங்கங்களைப் பிரதிட்டைச் செய்து வணங்கினால் உனது தோசம் விலகும் என்று தேவி கூறியருளினள்.

அத்திருவருளின்படி முருகப் பெருமான் சேயாற்றின் தென்கரையில் காஞ்சி, கடலாடி, மாம்பாக்கம், தென்மகா தேவமங்கலம், பூண்டி, எலத்தூர், குருவிமலை ஆகிய தலங்களில் கரைகண்டேசுவரர் எனும் பெயரால் சிவலிங்கங்கள் தாபித்து பூசித்து வணங்கி தோசம் நீங்கப்பெற்றார். இவை சப்த கரை கண்டேசுவரர் தலங்கள் என வழங்கப்படுகின்றன.

இவற்றுள் நடுநாயகமாக அமையப்பெற்ற தென்மகாதேவ மங்கலம கிராமத்தின் மையப்பகுதியில் இத்தலம் அமையப் பெற்றுள்ளது. ஏழு தலங்களுள் பெரிய கோயிலாக இது விளங்கு கின்றது. இங்கு அன்னை பிருகந்நாயகி என்றும் பெரியநாயகி என்றும் வழங்கப்படுகின்றாள்.

## பூசைகள்

நாள்தோறும் இரண்டு கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசைவிவரம் |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி பூசை |
| மாலை 6.00 மணி | சாயரட்சை பூசை |

## விழாக்கள்

இந்த ஆலயத்தில் பிரதோசம், நவராத்திரி, அன்னாபிசேகம், திருவாதிரை, சிவராத்திரி, பங்குனி உத்திரம் முதலான நாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.30 மணி முதல் 12.00 மணி வரை

மாலை 3.00 மணிமுதல் 7.30 மணிவரை

### தொடர்பு முகவரி


செயல் அலுவலர்,<br>
அருள்மிகு கரைகண்டேசுவரர் திருக்கோயில்,<br>
தென்மாதிமங்கலம், போளூர் வட்டம்,<br>
திருவண்ணாமலை மாவட்டம்<br>
ஆய்வாளர் அலைபேசி எண் : 9884650991.


### அருகில் உள்ள தலங்கள்

பருவதமலை, எலத்தூர் மோட்டூர்.



# அயனம்

அயனம் என்பதற்குப் பாதை என்பது பொருளாகும். பகலவன் பயணிக்கும் பாதை உத்தராயனம் என்றும் தட்சனாயனம் என்றும் வழங்கப்படுகின்றன. பகலவன் வடக்கு நோக்கிப் பயணிக்கும் உத்தராயனம் தை மாதம் முதல் ஆனி மாதம் வரையாகும். பகலவன் தெற்குத் திசை நோக்கிப் பயணிக்கும் தட்சனாயன காலம் ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் வரையாகும்.

கால மாற்றங்களை அறிந்து கொள்வதற்காகக் கணிய அறிஞர்கள் பகலவன் வடக்கு நோக்கியும், தெற்கு நோக்கியும் பயணிப்பதாக வகுத்துள்ளனர்.



**அருள்மிகு சிவசுப்பிரமணிய சுவாமி**
**திருக்கோயில்,**
எலத்தூர் மோட்டூர், போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு சிவசுப்பிரமணிய சுவாமி |
| இறைவி | : | அருள்மிகு வள்ளி, தெய்வயானை |
| தீர்த்தம் | : | குமாரத் தீர்த்தம் (சுனை) |
| ஆகமம் | : | காமிகம் |

## திருக்கோயில் அமைவிடம்

போளூரிலிருந்து செங்கம் செல்லும் சாலையில் சுமார் 15 கி.மீ. தொலைவில் எலத்தூர் மோட்டூர் எனும் கிராமத்தில் குன்றின் மீது இத்தலம் அமைந்துள்ளது. போளூரிலிருந்தும், செங்கத்திலிருந்தும் பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குப் போளூரில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல வரலாறு

முன்பொரு சமயம் முருகப்பெருமானைப் பிரம்மகத்தி தோசம் பீடித்தது. அதனைப் போக்கிக் கொள்ள முருகன், பார்வதிதேவியின் அறிவுரைப்படி செய்யாற்றின் தென்கரையில் ஏழு சிவலிங்கங்களையும் வடகரையில் ஏழு சிவலிங்கங்களையும் தாபித்து தோசம் நீங்கினார். தென்கரையில் உள்ள தலங்கள் சப்த கரைகண்டேசுவரர் தலங்கள் எனவும், வடகரையில் உள்ள தலங்கள் சப்த கயிலாயங்கள் எனவும் வழங்கப்படுகின்றன. இறுதியாக முருகன் அங்குள்ள குன்றுகளின்மீது சிவலிங்க பூசை செய்து தேவசேனாபதி எனும் வரத்தினையும் பெற்றார்.

பிற்காலத்தில் அப்பகுதியில் வசித்துவந்த அந்தணரொருவர் முருகன் பூசித்த சிவாலயங்களை எல்லாம் மிகுந்த பக்தி சிரத்தையுடன் பூசித்து வந்தார். அவர் திங்கள்தோறும் கிருத்திகை அன்று திருத்தணி சென்று வழிபாடு செய்வதையும் வழக்கமாகக் கொண்டிருந்தார். ஒரு சமயம் அடர்மழையின் காரணமாகத் திருத்தணி செல்ல இயலாமல் வருந்தினார். அன்றிரவு அவரது கனவில் அறுமுகப்பரமன் தோன்றி, அருகில் உள்ள குன்றின்மீது தான் சுயம்பு ரூபமாய் உறைவதாகவும், நாள்தோறும் அக்குன்றினை இருபத்தியேழு நட்சத்திரங்களும் பூசிப்பதாகவும் அக்குன்றே தனக்கு மிகவும் உகந்தது என்றும் சொல்லியருளினார்.



திடுக்கிட்டு விழித்த அவ்வந்தணர் மனமகிழ்ந்து மறுநாள் குன்றின்மீது ஏறிப் பார்க்கையில் அங்கு முருகப் பெருமான் சுயம்பு மூர்த்தியாக உறைவதைக் கண்டு பேருவுவகை கொண்டு நறுமணமிக்க மலர்களை அப்பெருமானுக்குச் சூட்டி ஆகம விதிப்படி பூசித்து வந்தார். பின்னர் மன்னர்களால் ஆலயமொன்று அங்கு எழுப்பப்பட்டது. இத்தலத்தில் வள்ளி தேவசேனா சமேதராக முருகப்பெருமான் கோயில் கொண்டுள்ளார். முருகப் பெருமானுக்கு முன்பாக அவர் பூசித்த சிவலிங்கமுள்ளது.

நட்சத்திரங்கள் வந்து இரவில் பூசிப்பதால் நட்சத்திரகிரி என்றும், முருகப்பெருமான் வில்வார்ச்சனை செய்து சிவபூசை செய்தபடியால் வில்வாரணி என்றும் இத்தலம் வழங்கப்படு கின்றது. செவ்வாய்தோசம் உள்ளவர்களுக்கும் நட்சத்திர தோசம் உள்ளவர்களுக்கும் பரிகார தலமாக இது விளங்குகின்றது.

## பூசை மற்றும் விழாக்கள்

நாள்தோறும் நான்குகால பூசைகள் நடைபெறுகின்றன. ஆண்டுதோறும் ஆடிக்கிருத்திகையன்று இலட்சக்கணக்கில் பக்தர்கள் வந்திருந்து காவடி எடுத்தும், அலகு குத்தியும், முடி காணிக்கை செலுத்தியும் வழிபடுகின்றனர். கிருத்திகை, தமிழ்ப்புத்தாண்டு, வைகாசி விசாகம், கந்தசஷ்டி, பங்குனி உத்திரம் முதலான உற்சவங்களும் நடைபெறுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 12.00 மணி வரை

மாலை 4.00 மணி முதல் 7.30 மணிவரை


**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

அருள்மிகு சிவசுப்பிரமணியசுவாமி திருக்கோயில்,

எலத்தூர் மோட்டூர், போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

ஆய்வாளர் அலைபேசி எண் : 9884650991.


## அருகில் உள்ள தலங்கள்

தென்மகாதேவமங்கலம், பருவதமலை





**அருள்மிகு தர்மலிங்கேசுவரர் திருக்கோயில்,**
ஆத்துவாம்பாடி, போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு தர்மலிங்கேசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு பாலாம்பிகை |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## திருக்கோயில் அமைவிடம்

சீரும் சிறப்பும் பொருந்திய செந்தமிழ்நாட்டில் தென்னாடுடைய சிவபெருமான் உறையும் எண்ணிறந்த தலங்களுக்குள் திருவண்ணாமலை வேலூர் நெடுஞ்சாலைக்கிடையே திருவண்ணாமலையிலிருந்து சுமார் 40 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள கேளூர் எனும் ஊருக்கு மேற்கே சுமார் 5 கி.மீ. தொலைவில் உள்ள ஆத்துவாம்பாடி எனும் கிராமமும் ஒன்றாகும். இது ஆரணியிலிருந்து 27 கி.மீ. தொலைவில் உள்ளது. இந்த ஊரின் மத்தியில் அருள்மிகு தர்மலிங்கேசுவரர் ஆலயம் அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குப் போளூரில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

மகாபாரத காலத்தில் தர்மன் தாபித்த பெருமானாக தர்மலிங்கேசுவரர் விளங்குகின்றார். அருகில் பாலாம்பிகை சன்னதி உள்ளது. விநாயகர் சன்னதி, வள்ளி தேவசேனா சமேத முருகன் சன்னதி, நால்வர் சன்னதி ஆகியன உள்ளன. இப்பகுதியை ஆட்சி செய்த உதங்கன், புஜங்கன் ஆகிய சிற்றரசர்களின் காலத்தில் சிறப்புற்று திகழ்ந்த இத்தலம் வழக்கில் நீதி வேண்டுவோருக்குப் பரிகாரத்தலமாகவும் உள்ளது.

## பூசை மற்றும் விழாக்கள்

நாள்தோறும் இரண்டுகால பூசைகள் நடைபெறுகின்றன. பிரதோசம், சோமவாரம், பங்குனி உத்திரம் முதலான நாட்களில் பெருமளவில் பக்தர்கள் வந்து வழிபடுகின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 7.30 மணிவரை

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்

அருள்மிகு தர்மலிங்கேசுவரர் திருக்கோயில்,

ஆத்துவாம்பாடி, போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

முதன்மை கோயில் அலுவலக எண் : 04181-248424.





**அருள்மிகு சொர்க்க நாராயணப் பெருமாள் திருக்கோயில்,**
கலசப்பாக்கம், போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு சொர்க்கநாராயணப்பெருமாள் |
| இறைவி | : | அருள்மிகு சுகந்தவல்லி தாயார் |
| தீர்த்தம் | : | சேயாறு |

## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் அமைந்துள்ள கலசப்பாக்கம் எனும் ஊர் திருவண்ணாமலையிலிருந்து 25 கி.மீ. தொலைவில் வேலூர் செல்லும் வழியில் அமைந்துள்ளது. திருவண்ணாமலை யிலிருந்தும், போளூரிலிருந்தும் பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குப் போளூரில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

அழகிய மூன்று நிலைகள் கொண்ட இராசகோபுரத்துடன் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் என்ற அமைப்பு கொண்டு இத்தலம் உள்ளது.

புராண காலத்தில் கேசி என்ற அசுரனுக்கு முக்தியளித்து சொர்க்க நாராயணப் பெருமாள் என்ற திருப்பெயருடன் ஸ்ரீ பெருமாள் எழுந்தருளியுள்ளார். இக்கோயிலில் பணிபுரிந்து வந்த அர்ச்சகர் ஒருவர் குழந்தைப்பேறு இல்லாமல் வருந்தினார். அவரது கனவில் பெருமாள் தோன்றி, தனக்கு இக்கோயிலில் இரண்டு கால பூசைகள் தடையின்றி செய்து வந்தால் சந்தானப்பேற்றை அளிப்பதாகத் திருவருள் செய்தார். அவ்வாறே அர்ச்சகர் காலந்தவறாமல் இரண்டு கால பூசையினைத் தொடர்ந்து செய்து வந்து பிள்ளைப்பேறு பெற்றார். எனவே இங்கு எழுந்தருளியுள்ள பெருமாள் சந்தானப்பேற்றை அளிக்கும் தெய்வமாக உள்ளார். ஆண்டாள், கருடன், ஆழ்வார், மூர்த்தங்கள், ஆஞ்சநேயர் ஆகியோருக்குச் சந்நிதிகள் இங்கு உள்ளன.

## பூசை மற்றும் விழாக்கள்

நாள்தோறும் இரண்டுகால பூசைகள் நடைபெறுகின்றன. சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, இராமநவமி, வைகாசி கருட சேவை, ஆவணியில் உறியடி உற்சவம், புரட்டாசியில் நவராத்திரி, இரதசப்தமி அன்று தீர்த்தவாரி, பங்குனி உத்திரத்தில் திருக்கல்யாணம் ஆகிய உற்சவங்கள் நடைபெறுகின்றன. வைகுண்ட ஏகாதசி அன்று பெருந்திரளான மக்கள் வருகை தந்து வழிபடுகின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.00 மணிவரை


**தொடர்பு முகவரி**

**தக்கார் / ஆய்வர்,**

**அருள்மிகு சொர்க்க நாராயணப் பெருமாள் திருக்கோயில்,**

**கலசப்பாக்கம், போளூர் வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**

**ஆய்வாளர் அலைபேசி எண் : 9884650991.**






**அருள்மிகு திருமாமுடீசுவரர் திருக்கோயில்,**
கலசப்பாக்கம், போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு திருமாமுடீசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு திரிபுரசுந்தரி |
| தீர்த்தம் | : | சேயாறு |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## திருக்கோயில் அமைவிடம்

திருவண்ணாமலையிலிருந்து 25 கி.மீ. தொலைவில் வேலூர் செல்லும் வழியில் கலசப்பாக்கம் எனும் ஊரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. திருவண்ணாமலையிலிருந்தும், போளூரி லிருந்தும் பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குப் போளூரில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

கலசப்பாக்கத்தில் செய்யாற்றின் வடகரையில் அருள்மிகு திருமாமுடீசுவரர் ஆலயம் அமைந்துள்ளது. திருமால் வந்து

வணங்கியதால் இறைவன் பெயர் திருமாமுடீசுவரர் என்று வழங்கப்படுகிறது. பிரதோஷ விழா சிறப்புடன் நடைபெறுகின்றது. திருவாதிரை, மகாசிவராத்திரி முதலான உற்சவங்கள் நடைபெறுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.00 மணிவரை


**தொடர்பு முகவரி**

**தக்கார் / ஆய்வர்**

**அருள்மிகு திருமாமுடீசுவரர் திருக்கோயில்,**

**கலசப்பாக்கம், போளூர் வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**

**ஆய்வாளர் அலைபேசி எண் : 9884650991.**




## முக்தி மார்க்கங்கள்

முத்தி (வீடுபேறு) அடைவதற்குரிய மார்க்கங்கள் நான்கு வகைப்படும். அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப்படும். இவற்றை முறையே தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனவும் வழங்குவர். இந்நெறிகளை மேற்கொண்ட ஆன்மாக்கள் முறையே சாலோக, சாமீப, சாரூப, சாயுஜ்ஜிய முத்திகளை அடைவர். தாசமார்க்கம் கொண்டு ஒழுகியவர் திருநாவுக்கரசர், சற்புத்திரமார்க்கம் கொண்டு ஒழுகியவர் திருஞானசம்பந்தர், சகமார்க்கம் கொண்டு ஒழுகியவர் சுந்தரமூர்த்தி நாயனார். சன்மார்க்கத்தை மேற்கொண்டவர் மாணிக்கவாசகர் ஆவர்.



**அருள்மிகு சிகாமணி நாதர் என்னும்**
**நேமநாதசுவாமி திருக்கோயில்,**
திருமலை கிராமம், போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

## திருக்கோயில் அமைவிடம்

திருவண்ணாமலையிலிருந்து 48 கி.மீ. தொலைவிலும் போளூர் நகரிலிருந்து 16 கி.மீ. (வடக்கு திசையில்) தொலைவிலும் ஆரணி நகரிலிருந்து சுமார் 20 கி.மீ. தொலைவிலும் உள்ள திருமலை எனும் கிராமத்தில் இத்தலம் அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குப் போளூரில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

இராஷ்டிரகூட மன்னர் இரண்டாம் கிருஷ்ணன் காலத்தைச் சேர்ந்த மூன்று அடுக்குகள் கொண்ட குகைக் கோவில்கள் இங்குள்ளன. கி.பி.10, 11ஆம் நூற்றாண்டுகளில் பிற்கால சோழர்கள் காலத்தில் இராஜராஜ சோழனால் அவரது தமக்கை குந்தவை நாச்சியார் பெயரில் திருக்கோவில்கள் திருக்குளங்கள் கட்டப்பட்ட விபரங்களை இராஜராஜனின் மெய்க்கீர்த்தி

கல்வெட்டுகள் அறிவிக்கின்றன. இங்குள்ள மலைமீது 22வது தீர்த்தங்கரரான சமண மத மகான் நேமிநாத சுவாமி வழிபாட்டுக்குரிய தெய்வமாக இருந்து அருள்மழை பொழிந்து வருகிறார்.

இந்தியத் தொல்லியல் துறையினர் இவ்வூர் மலைக்கு வந்தபோது ஆங்காங்கே கி.மு.2-ம் நூற்றாண்டை சேர்ந்த கல்திட்டுக்கள் உள்ளதை கண்டு இதை எகிப்து, மெசடோமியா காலச் சின்னங்கள் என்றும் இச்சின்னங்கள் தற்போது இந்தியாவின் மத்தியப் பிரதேசத்திலும் பீகார் மாநிலத்திலும் மட்டும் காணப்படுகின்றன என்றும் தெரிவித்ததாகச் சொல்கின்றனர்.

வரலாற்றுச் சிறப்பு பெற்று விளங்கும் அரிய சிற்பங்கள், ஓவியங்கள், குகைக்கோவில்கள் அடங்கிய திருமலைக்கு பக்தர்கள் பெருமளவில் வருகின்றனர்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.00 மணிவரை

### தொடர்பு முகவரி

**ஆய்வர்**

**இந்து சமய அறநிலையத்துறை,**

**போளூர்**

**திருவண்ணாமலை மாவட்டம்.**

**அலைபேசி எண் : 9884650991.**



## கொடி மரம்

சூட்சும லிங்கம் என்று வழங்கப்படும் கொடிமரம் மும்மூர்த்திகளை உணர்த்துவதாகும். அசுரர்களை அகற்றுவதன் பொருட்டும், தேவர்களை அழைத்தல் பொருட்டும், பக்தர்களைப் பாதுகாத்தல் பொருட்டும் கொடிமரமானது திருக்கோயில்களில் நிறுவப்படுகின்றது. இது சந்தனம், தேக்கு, தேவதாரு ஆகிய மரங்களைக் கொண்டு நிறுவப்படுகின்றது.



**அருள்மிகு தண்டபாணி சுவாமி**
**திருக்கோயில்,**
ஆர். குன்னத்தூர், போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

இறைவன் : அருள்மிகு தண்டபாணி சுவாமி

ஆகமம் : காமிகம்

## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் போளூர் நகருக்கு வடக்கே 2 கி.மீ. தொலைவில் உள்ள இராஜகம்பீர நல்லூர் என்று வழங்கப்படும் ஆர்.குன்னத்தூர் கிராமத்தில் குன்றின் மீது அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குப் போளூரில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

இத்திருக்கோயில் அமைந்துள்ள மலையைச் சுற்றிலும் முன்பொரு காலத்தில் மூன்று நதிகள் ஓடியதாகவும் அதனால் இக்கிராமத்திற்கு திருநதிக்குன்றம் எனும் பெயர் வழங்கப்

பட்டதாகவும் சொல்கின்றனர். செவ்வாய்தோசம் உள்ள வர்களுக்குப் பரிகாரத் தலமாக இத்திருக்கோயில் விளங்குகின்றது. இங்கு கருவறையில் எழில்கொஞ்சும் திருமுகத்துடன் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

### பூசைகள் மற்றும் விழாக்கள்

நாள்தோறும் இரண்டுகால பூசை நடைபெறும் இத்திருக் கோயிலில் ஆடிக்கிருத்திகை, கந்தசஷ்டி, பங்குனி உத்திரம் முதலானவை முக்கிய விழாக்களாகும்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 7.00 மணிவரை

**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

**அருள்மிகு தண்டபாணி சுவாமி திருக்கோயில்,**

**ஆர். குன்னத்தூர், போளூர் வட்டம்**

**திருவண்ணாமலை மாவட்டம்.**

**அலைபேசி எண் : 9884650991.**



## புராணங்கள்

புராணம் என்பதற்கு பழைய வரலாறு என்பது பொருள். புராணங்கள் மொத்தம் 18. இவற்றை எழுதியவர் வேத வியாசர் ஆவர். அவை, சைவம், பவிஷ்யம், மார்கண்டேயம், இலிங்கம், ஸ்காந்தம், வராகம், வாமனம், மச்சம், கூர்மம், பிர்மாண்டம் என்பன சிவபுராணங்களாகும். காருடம், நாரதீயம், வைஷ்ணவம், பாகவதம் என்பன விஷ்ணு புராணங்களாம். பிர்மம், பதுமம் என்பவை பிரம புராணங்களாம். ஆக்னேய புராணம் அக்கினியையும், பிரமகைவர்த்தம் சூரியனையும் சார்ந்தவை.



**அருள்மிகு சனீசுவர பகவான் திருக்கோயில்,**
ஏரிக்குப்பம், போளூர் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்

**இறைவன் : அருள்மிகு சனீசுவர பகவான்**

## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் போளூர் வேலூர் நெடுஞ்சாலைக்கிடையில் உள்ள சந்தவாசல் எனும் கிராமத்திற்குக் கிழக்கே 4 கி.மீ. தொலைவில் சந்தவாசல் - ஆரணிக்கிடையே அமைந்துள்ளது. போளூரிலிருந்து சந்தவாசலுக்கு பேருந்து வசதியுள்ளது. அங்கிருந்து குறிப்பிட்ட கால இடைவெளியில் ஏரிக்குப்பம் செல்ல நகரப் பேருந்து வசதியுள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குப் அருகேயுள்ள ஆரணியில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

கி.பி. 15ஆம் நூற்றாண்டில் படைவீட்டை தலைநகராகக் கொண்டு சம்புவராய மன்னர்கள் அரசு புரிந்து வந்தனர். அவர்களின் படை தளபதிகளுள் ஒருவராக விளங்கிய வையாபுரி என்பவர் ஒருசமயம் குதிரையில் செல்லும்போது தவறி விழுந்து காலில் எழும்பு முறிவு ஏற்பட்டது. அதற்குப் பரிகாரமாக அவர்,



தான் கீழே விழுந்த இடத்தில் யந்திர வடிவில் சனீசுவர பகவானைத் தாபித்து வணங்கி பூரண குணமடைந்தார். கால மாற்றத்தால் புதைந்து கிடந்த அவ்விக்கிரகத்தைச் சுமார் 20 ஆண்டுகட்கு முன்பு வெளிக் கொணர்ந்து பிரதிட்டை செய்து கோயில் எழுப்பினர் என்பது வரலாறு.

## ஸ்ரீ சனீசுவர பகவான் அமைப்பு

இங்குள்ள திறந்த வெளிக் கருவறையில் சுமார் 5 அடி உயரமும் 2 அடி அகலமுமுடைய ஸ்ரீ சனீசுவர பகவானின் யந்திரநடுவில் அறுகோண வடிவமும், அதன் ஆறுமுனைகளில் திரிசூலமும் அடிப்பாகத்தில் மகாலட்சுமி, அனுமன் ஆகியோரது வடிவங்களும் இடம்பெற்றுள்ளன. நெற்றி போன்ற மேற்பகுதியில் சூரியன், சந்திரன் வடிவங்களும், அவற்றின் இடையே ஒரு காகத்தின் உருவமும் உள்ளது.

## பூசைகள்

நாள்தோறும் இரண்டு கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசை விவரம் |
|---|---|
| காலை 7.00 மணி | காலசந்தி பூசை |
| மாலை 5.00 மணி | சாயரட்சை பூசை |

## விழாக்கள்

இத்திருக்கோயிலுக்கு வாரந்தோறும் சனிக்கிழமைகளில் பல்லாயிரக்கணக்கானோர் வந்திருந்து எள் தீபமேற்றி வழிபடுகின்றனர். சனி திசை நடப்பவர்களுக்குப் பரிகார தலமாக இத்தலம் விளங்குகின்றது. திருமணப்பேறு, குழந்தைப் பேறு, இலட்சுமி கடாட்சம் ஆகியன இங்கு வந்து வழிபடுவோருக்குக் கிடைப்பதாகப் பக்தர்கள் சொல்கின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 1.00 மணி வரை

மாலை 4.00 மணி முதல் 7.00 மணிவரை

சனிக்கிழமைகளில் முழுநாளும் தரிசனம் உண்டு.

## தொடர்பு அலுவலக முகவரி

**செயல் அலுவலர்**

**அருள்மிகு சனீசுவர பகவான் திருக்கோயில்,**

ஏரிக்குப்பம், போளூர் வட்டம்
திருவண்ணாமலை மாவட்டம்

**தொலைபேசி எண் : 04181-248424**

**மின்னஞ்சல் :** renugambalammanpadaiveedu@gmail.com

**இணையதளம் :** www.renugambal.com

## அருகில் உள்ள தலம்

**அ.கோ.படைவீடு**



## கருடசேவை

ஒவ்வொரு வைணவத் தலங்களிலும் ஆண்டிற்கு மூன்று தடவை கருடசேவை நடப்பதுண்டு. அவை வைகாசிக் கருடன், ஆனிக் கருடன், ஆடிக் கருடன் என்று வழங்கப்படுகின்றன. வைகாசிப் பிரம்மோற்சவத்தில் கருடன்மீது பெருமாள் பவனி வருவதை வைகாசிக் கருடன் என்று வழங்குவர். பெரியாழ்வார் பாண்டிய மன்னனின் சபையில், வேதமுடிவாகிய பரம்பொருள் திருமாலே ஆவர் என்றுணர்த்தினார். அதனால் பெரியாழ்வாரின் அவதார நாளான ஆனி சுவாதி தினத்தன்று திருமாலைக் கருட வாகனத்தில் எழுந்தருளச் செய்வர். ஆனிக் கருடன் என்று வழங்கப்படும் இது பர தத்துவ நிலையை உணர்த்துவதாகும். அடுத்து ஆடி மாதத்தில் முதலையின் பிடியிலிருந்து கஜேந்திரன் எனும் யானையை மீட்டு திருமால் அதற்கு முத்தியருளினார். இந்நிகழ்வை குறிக்கும்வண்ணம் ஆடித் திருவோண நாளில் ஆடிக் கருடன் உற்சவம் நடைபெறுகின்றது.




**அருள்மிகு கில்லா கைலாசநாதர்**
**திருக்கோயில்,**
ஆரணி நகரம் மற்றும் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

இறைவன் : அருள்மிகு கைலாசநாதர்
இறைவி : அருள்மிகு அறம்வளர்நாயகி
தீர்த்தம் : சிவகங்கை தீர்த்தம்
தலவிருட்சம் : வன்னி
ஆகமம் : காமிகம்

## திருக்கோயில் அமைவிடம்

திருவண்ணாமலையிலிருந்து சுமார் 60 கி.மீ. தொலைவிலும், போளூரிலிருந்து 25 கி.மீ. தொலைவிலும், செய்யாற்றிலிருந்து 36 கி.மீ. தொலைவிலும் ஆரணி எனும் நகரம் உள்ளது. நகரின் பேருந்து நிலையத்திற்கு மேற்கு திசையில் அருள்மிகு கில்லா கைலாசநாதர் திருக்கோயில் அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்கு தனியார் விடுதிகள் ஆரணியில் உள்ளன.

### திருத்தல சிறப்பு

முற்காலத்தில் இப்பகுதி செடி, கொடி, மரங்கள் நிறைந்த ஆரண்யமாக விளங்கியதால் ஆரணி எனும் பெயர் இவ்வூருக்கு வழங்கப்படுகிறது. புராணகாலத்தில் வசிட்ட மகரிஷி சுயம்பு ரூபமாய் எழுந்தருளியுள்ள அருள்மிகு கைலாசநாதப் பெருமானை பூசித்து வரங்கள் பெற்றார். பின்பு விநாயகப் பெருமான் வல்லபையுடன் வந்து பூசித்து சிவகணங்களின் தலைமைப் பதவியினை அடைந்தார். பக்தன் ஒருவனுக்கு இங்கு அறுமுகப்பரமன் பழனி ஆண்டவராகத் திருக்காட்சியருளித் திருவருள் செய்தனர். இவ்வாறு பல புராண வரலாறுகள் இத்தலத்திற்கு உள்ளன. இக்கோயிலுக்கு அருகாமையிலிருந்த கோட்டையை மையமாக வைத்து ஆரணி நகரினை ஆண்டு வந்த ஜாகீர் மன்னர்கள் தங்களுடைய ஆளுகையின் கீழ் பராமரித்து வந்த திருக்கோயில்களுள் ஒன்றாக இத்தலம் திகழ்கின்றது. இங்கு கிழக்கு நோக்கிய கருவறையில் இலிங்கத்திருமேனி கொண்டு கைலாசநாதர் எழுந்தருளியுள்ளார். பிரகாரத்தில் வல்லபை விநாயகர், திருமால், வள்ளி தெய்வானை சமேத சண்முகர், பழனி ஆண்டவர், சகஸ்ரலிங்கம் ஆகிய சந்நிதிகள் உள்ளன. பஞ்சபூதலிங்கங்கள், சரசுவதி, கஜலட்சுமி, நவகிரகங்கள் பைரவர், சூரியன், சந்திரன், 63 நாயன்மார்கள் ஆகிய மூர்த்தங்களும் பிரகாரத்தில் உள்ளன.

### பூசை மற்றும் திருவிழாக்கள்

இங்கு நாள்தோறும் இரண்டு கால பூசைகள் செய்யப் படுகின்றன. சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, சித்திரையில் பிரம்மோற்சவம், நவராத்திரி, கார்த்திகை தீபம், திருவாதிரை, சிவராத்திரி, 63 நாயன்மார்கள் குருபூசை ஆகிய திருவிழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 4.00 மணி முதல் 8.00 மணிவரை


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**
**அருள்மிகு கில்லா கைலாசநாதர் திருக்கோயில்,**
**ஆரணி நகரம் மற்றும் வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**
**ஆய்வாளர் அலைபேசி எண் : 9655777628.**






## அருள்மிகு புத்திர காமேஸ்வரர் திருக்கோயில்,

புதுக்காமூர், ஆரணி, திருவண்ணாமலை மாவட்டம்

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு புத்திர காமேஸ்வரர் |
| இறைவி | : | அருள்மிகு பிருகன்நாயகி |
| தீர்த்தம் | : | கமண்டலநாக நதி |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

### அமைவிடம்

ஆரணி பேருந்து நிலையத்திலிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் புதுக்காமூர் எனும் பகுதியில் அருள்மிகு புத்திர காமேஷ்டீசுவரர் திருக்கோயில் அமைந்துள்ளது.

### தங்கும் வசதி

தங்குவதற்கு ஆரணியில் தனியார் விடுதிகள் உள்ளன.

## புராண வரலாறு

அயோத்தி மன்னன் தசரதன் நெடுங்காலம் புத்திரப் பேறு இல்லாமல் வருந்தினான் பின்னர் குலகுரு வசிட்டரின் அறிவுரைப்படி புண்ணிய தலங்கள் பலவற்றிற்குத் தீர்த்தயாத்திரைச் சென்றான். பாரதத்தின் தென்திசையில் எந்நாட்டவர்க்கும் இறைவனாய் விளங்கும் பிறவாயாக்கைப் பெரியோனின் தலங்கள் பல வற்றைத் தரிசித்தான். அவ்வாறு தரிசித்து வகையில் ஒருசமயம் ஆரணி நகரினையொட்டியுள்ள புதுக்காமூர் எனும் தலத்தில் கமண்டல நாகநதியின் கரையில் முன்பு ஜமதக்கினி முனிவரால் பூசிக்கப்பட்ட திருக்கோயிலை அடைந்து அங்கு புத்திர காமேஷ்டி எனும் யாகத்தினைச் செய்தான். யாகமுடிவில், யாகத்திலிருந்து பெறப்பட்ட பிரசாதத்தினைத் தனது மனைவிமார்களுக்கு அளித்தான். அதன் பயனாக இராமன், இலட்சுமணன், பரதன், சத்ருக்னன் எனும் புதல்வர்களைப் பெற்று மகிழ்ந்தான் என்று இத்தலத்தின் வரலாறு கூறுகின்றது. இராமயண காலம் முதற்கொண்டு புத்திர பாக்கியம் அருளும் தலமாக இத்தலம் விளங்குகின்றது.



இங்கு கருவறை, அம்பாள் சந்நிதி ஆகியவற்றின் வெளிப் புறச் சுவர்களில் பழங்காலக் கல்வெட்டுக்கள் உள்ளன. அவை சோழர், சம்புவராயர், விசயநகர மன்னர்கள் ஆகியோர் அளித்த தானங்களைப் பற்றித் தெரிவிக்கின்றன.

## தனிச்சிறப்பு

ஆண்டு தோறும் இத்திருக்கோயிலில் நடைபெறும் புத்திர காமேஷ்டி யாகத்தில் ஆயிரக்கணக்கானோர் கலந்து கொண்டு குழந்தை வரம் பெறுகின்றனர்.

## பூசை மற்றும் திருவிழாக்கள்

நாள்தோறும் இங்கு ஒரு கால பூசை செய்யப்படுகிறது. ஆடி

சுவாதி, காணும் பொங்கல், மகாசிவராத்திரி, பங்குனி உத்திரம் முதலிய விழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 11.00 மணி வரை.

மாலை 4.00 மணி முதல் 7.00 மணிவரை.

**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**
**அருள்மிகு புத்திர காமேஷ்டீசுவரர் திருக்கோயில்,**
**புதுக்காமூர், ஆரணி,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**
**ஆய்வாளர் அலைபேசி எண் : 96557 77628.**



## திவ்ய பஞ்சாட்சரம்

1. தூல பஞ்சாட்சரம் - நமசிவாய
2. சூக்கும பஞ்சாட்சரம் - சிவாயநம
3. காரண பஞ்சாட்சரம் - சிவாயசிவ
4. மகா காரண பஞ்சாட்சரம்- சிவ
5. மகாமநு பஞ்சாட்சரம் - சி



**அருள்மிகு பெரியநாயகியம்மன் சமேத**
**கனககிரீசுவரர் திருக்கோயில்,**
தேவிகாபுரம், ஆரணி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு கனககிரீசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு பெரியநாயகியம்மன் |
| தீர்த்தம் | : | சிவகங்கை |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

தேவிகாபுரம் எனும் இவ்வூர் திருவண்ணாமலையிலிருந்து 48 கி.மீ. தொலைவிலும், போளூரிலிருந்து 15 கி.மீ. தொலைவிலும், சேத்துப்பட்டிலிருந்து 11 கி.மீ. தொலைவிலும், சேத்துப்பட்டு போளூர் நெடுஞ்சாலையில் உள்ளது. பேருந்து நிலையத்திற்கு அருகில் திருக்கோயில் உள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குப் போளூரில் தனியார் விடுதிகள் உள்ளன.

## மலைக்கோயில் (கனககிரீசுவரர்)



ஒருசமயம் வேடுவன் ஒருவன் கனககிரியின் உச்சியில் கிழங்கு அகழ்ந்து எடுக்கும் போது அவன் கையிலிருந்த கடப்பாறை யொன்று பட்டு ஓரிடத்திலிருந்து உதிரம் பீறிட்டு வந்தது. அதனைக் கண்ட அவன் அஞ்சி நடுங்கியோடிக் கீழிறங்கி வந்து ஊராரிடம் விவரத்தைக் கூறினான். ஊரார் அனைவரும் ஒன்றுகூடி மலையின் மீது சென்று பார்க்கையில் உதிரம் பெருகிய இடத்தில் சுயம்பு லிங்கத்திருமேனி யொன்று உள்ளதைக் கண்டு, பெரு மகிழ்ச்சியடைந்து கீழே விழுந்து வணங்கினர். அத்திருமேனியில் கடப்பாறை பட்ட காயத்தழும்பு உள்ளதால் அப்பெருமானுக்கு நாள்தோறும் வெந்நீர் கொண்டு அபிசேகம் செய்து வந்தனர்.

பின்பொரு சமயம் அப்பகுதியை ஆட்சி செய்து வந்த மன்னனொருவன் அவ்வூரின் வழியே குதிரை மீதேறிச் செல்லும்போது ஓரிடத்தில் மேலே செல்லாமல் குதிரை முடங்கிக் கீழே விழுந்தது. அவன் மேற்கொண்டு பயணிக்காமல் அன்றிரவு அங்கேயே தங்கி உறங்கலானான். அவனது கனவில் இறைவன் தோன்றி, அருகிலுள்ள மலைமீது தான் சுயம்புரூபமாய் உறைவதாகவும், திருக்கோயில் ஒன்றினை அங்கு எழுப்புமாறும் சொல்லியருளினார். கண்விழித்த மன்னன் மறுநாள் மலைமீது ஏறிச்சென்று பார்க்கையில் சுயம்பு இலிங்கமொன்று இருந்தது. பெருமானின் திருவாணைப்படி மன்னன் அழகிய கோயிலொன்றை அங்கு எழுப்பத் தொடங்கினான். கோயில் திருப்பணி நடைபெறும் போது ஒருநாள் சுயம்பு லிங்கமூர்த்தி மறைந்தருளினார். இதனையறிந்த மன்னன் மனம் வருந்தினான். பெருமான்மீது கொண்ட பேரன்பு மிகுதியால் கண்களில் நீர்பெருக அழுதான். பின்னர் காசி விசுவநாதர் எனும் பெயரில் இலிங்கம் ஒன்றினைப் பிரதிட்டை செய்து குடமுழுக்கு செய்ய நாள் குறித்தான். அவ்வமயம் சுயம்பு லிங்கமூர்த்தம் ஓராயிரம் சூரியர்களின் பிரகாசத்துடன் மீண்டும் அங்கு தோன்றியது. மலையும் பொன்னிறத்தில் காட்சியளித்தது. அதனைக் கண்ட அரசன்

அளவிலாத மகிழ்ச்சியடைந்தான் குறித்த நாளில் குடமுழுக்கும் நடந்தேறியது. பொன் வண்ணமாகத் தோன்றிய அம்மலைக்குப் பொன்மலை என்றும் பெருமானுக்குப் பொன்மலைநாதர் என்றும் கனககிரீசுவரர் என்றும் திருப்பெயர்கள் வழங்கப்படுகின்றன. இங்கு கருவறையினுள் இரண்டு சிவலிங்க மூர்த்தங்கள் உள்ளன. கருவறையின் மேற்குசுவரில் உருத்திரராட்சத்தால் செய்யப்பட்ட சிவலிங்கமொன்றும் உள்ளது. இக்கோயில் கிழக்கு மேற்காக 185 அடி நீளமும், வடக்கு தெற்காக 75 அடி அகலமும் கொண்ட மதில்களுடன் உள்ளது. மூன்று நிலைகள் கொண்ட இராசகோபுரத்தினைக் கடந்து உள்ளே செல்கையில் பலிபீடம், கொடிமரம், நந்திதேவர் ஆகியன உள்ளன. உட்பிராகாரத்தில் சப்த கன்னியர், விநாயகர், ஆறுமுகர், விசாலாட்சி, சண்டேசுவரர் ஆகிய சந்நிதிகள் உள்ளன.

### அருள்மிகு பெரியநாயகியம்மன் திருக்கோயில்

பொன்மலைநாதர் மலைக்குக் கீழே ஊரின் நடுவே பரந்து விரிந்து பெரிய திருக்கோயிலாக அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோயில் விளங்குகின்றது. கிழக்கு மேற்காக 475 அடி நீளமும் வடக்கு தெற்காக 250 அடி அகலமும் 30 அடி உயரமும் கொண்ட உயர்ந்த மதில்சுவர்களுடன் ஏழு நிலைகளைக் கொண்ட இராசகோபுரமும் கொண்டு இத்தலம் பிரம்மாண்டமாய் காட்சியளிக்கிறது. திருவண்ணாமலை திருக்கோயிலுக்கு அடுத்தபடியாக சுமார் 150 அடி உயரம் கொண்டு மாவட்டத்தில் இரண்டாவது பெரிய கோபுரமாக இது உள்ளது. கோபுரத்தின் நுழைவாயிலில் திருமால், வேணுகோபாலர், யோக நரசிம்மர்,



லிங்கோத்பவர் யோக தட்சிணாமூர்த்தி, துர்க்கை, காலபைரவர், அதிகார நந்தி, துவார பாலகர் முதலிய புடைப்புச் சிற்பங்கள் உள்ளமை காணவேண்டிய ஒன்றாகும். இராசகோபுரத்திற்கு அடுத்தாற்போல் வலதுபுறம் திருக்கல்யாண மண்டபம் உள்ளது. இருபுறமும் குதிரைகள் அமைந்து கற்சக்கரங்களுடன் கூடிய தேராகிய அம்மண்டபத்தினை இழுத்துச் செல்வது போன்ற அமைப்புடன் இது திகழ்கின்றது.

மூன்று பிரகாரங்களை கொண்டுள்ள இத்திருக்கோயிலின் முதல் சுற்றில் விநாயகர் சந்நிதி உள்ளது. வலதுபுறம் ஆறுமுகப் பெருமான் பன்னிருக்கரங்களுடன் எழிலுடன் காட்சிய ருளுகின்றார். இங்குள்ள மகாமண்டபத்தின் தூண்களில் உள்ள புராணச் சிற்பங்கள் கண்களைக் கவரும் வண்ணம் உள்ளன. மகாமண்டபத்தைக் கடந்து உட்புறம் சென்றால் இரண்டாவது பிராகாரத்தினை அடையலாம். அங்கு விசுவநாதர், விநாயகர், துர்க்கை, பைரவர் ஆகிய சந்நிதிகள் உள்ளன. அதற்கு அடுத்த பிரகாரத்தில் விநாயகர், திருமால், முருகன் ஆகிய சந்நிதிகள் உள்ளன.

கருவறையினுள் மேலிரு கரங்களில் பாசம் அங்குசமும் கீழிருகரங்கள் அபய வரதம் கொண்டு நின்ற கோலத்தில் பெரியநாயகியம்மன் கருணைக் கண்களுடன் காட்சியரு ளுகின்றாள். அன்னையின் திருப்பெயர் கல்வெட்டுக்களில் பிரகந்நாயகி என்று குறிக்கப்பட்டுள்ளது. இங்குள்ள அர்த்தமண்டபத்தில் திருஞானசம்பந்தர் பூம்பாவையை எழுப்பியது. ஆண்பனையைப் பெண்பனையாக மாற்றியது, சுந்தரர் முதலையுண்ட பாலகனை மீட்டது போன்ற நிகழ்வுகள் அற்புதமான சிற்பங்களாக மிளிர்கின்றன.



## கல்வெட்டுச் செய்திகள்

பெரியநாயகியம்மன் ஆலயத் - தில் 55 கல்வெட்டுக்களும், மலைக் கோயிலில் ஒரு கல்வெட்டும் என 56 கல்வெட்டுக்கள் தொல்லியல் துறையால் அடையாளமிடப்பட் டுள்ளன. கல்வெட்டுக்களில் இவ்வூர் அமைந்துள்ள பகுதி ஜெயங் கொண்ட சோழ மண்டலத்துப் பல்குன்றக் கோட்டத்து மேல்குன்ற

நாட்டு ராஜகம்பீரன் மலையை அடுத்த முருகமங்கலம் பற்றைச் சார்ந்த தேவிகாபுரம் என்று குறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டுக்களில் விசயநகர மன்னர்கள், சம்புவராய மன்னர்கள் அளித்த நிலதானம் பற்றிய விவரங்கள் உள்ளன. அம்மன்னர்கள் இருமக்கேணி, செம்பியன் மங்கலம், சோரப்பூண்டி, ஊவத்தூர், சிங்கை ராவுத்தன் தாங்கல், பிரமணப்பாக்கம் , கைலாசம், காமாட்சி ராவுத்தன் தாங்கல், தரைப்பாடி, சோமாசிபுரம் முதலான கிராமங்களைத் தேவதானமாக வழங்கியுள்ளனர். மேலும் திருவிழாக்கள் நடத்தப் பணமும், நெய்யும், நிவந்தங்களும் அளித்தது பற்றிய செய்திகளும், பங்குனி உத்திர விழா, திருமஞ்சன விழா, கார்த்திகை தீபவிழா போன்றவை நடைபெற்ற விவரங்களும் காணப்படுகின்றன.

## பூசைகள்

மலைக்கோயிலில் ஒரு கால பூசையும், பெரியநாயகியம்மன் திருக்கோயிலில் நான்கு கால பூசைகளும் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசைவிவரம் |
|---|---|
| காலை 6.00 மணி | உஷக்கால பூசை |
| காலை 8.00 மணி | காலசந்தி பூசை |
| முற்பகல் 11.30 மணி | உச்சிக்கால பூசை |
| மாலை 5.30 மணி | சாயரட்சை பூசை |

## திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு சித்திரைத் திருவோணத்தில் நடராசர் அபிசேகம், வைகாசி விசாகம், ஆனி உத்திரத்தன்று நடராசர் அபிசேகம், ஆடிப்பூரம், ஆவணி சதுர்த்தசியில் நடராசர் அபிசேகம், புரட்டாசி சதுர்த்தசியில் நடராசர் அபிசேகம், நவராத்திரி, ஐப்பசியில் மலைக்கோயில் அன்னாபிசேகம், கந்தசஷ்டி, கார்த்திகை தீபம், மார்கழி திருவாதிரையில் நடராசர் அபிசேகம், காணும் பொங்கலன்று திருவூடல் உற்சவம், மாசி சதுர்த்தசியில் நடராசர் அபிசேகம், மகாசிவராத்திரி, மாசி மகம், பங்குனி உத்திரப் பெருவிழா என

ஆண்டு முழுவதும் திருவிழாக்கள் சிறப்புடன் கொண்டாடப்படு கின்றன. குறிப்பாகக் கார்த்திகை தீபத்தன்றும், மகாசிவராத்திரி அன்றும் திரளான பக்தர்கள் வந்திருந்து பெருமானை வழிபடுகின்றனர்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரை.

மாலை 4.00 மணி முதல் 8.00 மணிவரை.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

**அருள்மிகு பெரியநாயகியம்மன் திருக்கோயில்,**
**தேவிகாபுரம், ஆரணி வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**

**ஆய்வாளர் அலைபேசி எண் : 96557 77628.**




## பலிபீடம்

திருக்கோயிலில் உள்ள பலிபீடம் பாசத்தை உணர்த்துகிறது. அதனை ஸ்ரீபலி நாதர் எனவும் கூறுவர். கோவிலில் எட்டு மூலைகளிலும், எட்டு பலிபீடங்கள் உண்டு. அவை இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் எனும் எட்டு திக்பாலகர்களை உணர்த்துகிறது. பிராம்மி, மாகேசுவரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராகி, இந்திராணி, சாமுண்டி எனும் சப்தமாதாக்களை உணர்த்தும் பீடங்களும் உள்ளன. இவைகளுக்கு எல்லாம் தலைமைப் பீடமே நந்திதேவருக்குப் பின்னுள்ள பலிபீடமாகும்.



**அருள்மிகு ஊமைக்கு வாய்கொடுத்த**
**உத்தமராயப் பெருமாள் திருக்கோயில்,**
பெரிய அய்யம்பாளையம், ஆரணி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

**இறைவன் : அருள்மிகு உத்தமராயப் பெருமாள்**

## அமைவிடம்

இத்திருக்கோயில் திருவண்ணாமலையிலிருந்து வேலூர் செல்லும் வழியில் உள்ள கண்ணமங்கலம் எனும் கிராமத்திலிருந்து 6.கி.மீ. தொலைவில் உள்ள பெரிய அய்யம்பாளையம் எனும் கிராமத்தில் அமைந்துள்ளது. இவ்வூர் ஆரணியிலிருந்து சுமார் 20 கி.மீ. தொலைவிலும், வேலூரிலிருந்து 24 கி.மீ தொலைவிலும் உள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்கு ஆரணி, போளூரில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல வரலாறு

பச்சைப்பசேல் என காணும் இடமெல்லாம் இயற்கை வளம் பொங்கி மங்களமாகக் காட்சி தரும் வயல்வெளிகள், குன்றுகள், அரண் போல் காட்சி தரும் மலைத்தொடர்கள். இவைகள் நடுவே அமைந்த அந்த சிறிய கிராமத்தில் ஆடு மேய்த்து வரும் சிறுவன்

வாய் பேச முடியாத ஊமை! வழக்கம் போல் காலைக் கதிரவன் தன் பணியினைத் துவக்கிட, சிறுவனும் ஆடுகளை மேய்க்கக் குன்றின்மீது ஏறித் தன் கடமையை செய்ய ஆரம்பித்தான். அவன் தினமும் பக்தியுடன் பெருமாளை நினைத்து உருகினான். தன்னால் பேச முடியவில்லையே எனும் ஏக்கத்தை வெளிப்படுத்தினான். பெருமாளை நினைத்து கண்கலங்கி மனமுறுகி, நான் நல்லபடி பேச அருள் புரிய மாட்டாயா? தெய்வமே! என வேண்டினான். அப்போதுதான் அந்த அதிசயம் நடைபெற்றது!

எங்கும் ஒளி பரவியது. சிறுவன் முன் பெருமாள் தோன்றினார்! நீ கீழே சென்று ஊர் மக்களையும் உன் சுற்றத்தாரையும் அழைத்து வா என்று கட்டளை இட்டார். சிறுவனோ விழித்தான். செய்வதறியாது திகைத்தான். பெருமாளின் தாள்பணிந்தான். பின்னர் குன்றின்மீது இருந்து மடமடவெனக் கீழே இறங்கி, ஊரினை அடைந்தான் அனைவரும் அவனை வியப்புடன் நோக்க பெருமாள் காட்சி தந்தார், மலைமீது உள்ளார், உடனே வாருங்கள் என வாய்திறந்து பேசினான்! அனைவருக்கும் வியப்பு! வாய் பேச முடியாத ஊமை தெள்ளத்தெளிவாகப் பேசியது எப்படி? உடனே ஆச்சரியமும் வியப்பும் மேலிட விரைந்தனர் குன்றின் மீது. எங்கும் பிரகாசமான ஒளி பரவ அனைவருக்கும் ஆனந்த பரவசமூட்டி பெருமாள் காட்சி தந்து சுயம்புவாக மாறினார்! வாய் பேச முடியாத ஊமையைப் பேச வைத்து அனைவரையும் மகிழ வைத்த பெருமாளை வணங்கி வழிபட்டனர் ஊர் மக்கள். அன்று முதல் அந்த இடம் திருத்தலமாக உருவாகி, ஊமைக்கு வாய் கொடுத்த உத்தமராயப் பெருமாள் கோயில் எனும் திருநாமத்துடன் சரித்திரத்தில் இடம் பெற்றது.

## திருக்கோயில் அமைப்பு

மலைமீது அமைந்துள்ள இத்திருக்கோயில் விசயநகர மன்னர்களால் பராமரிக்கப்பட்டது என்பதை இங்குள்ள கல்வெட்டு மூலம் அறியலாம். கருவறை, அர்த்தமண்டபம், திருச்சுற்று என்ற அமைப்புடன் இத்தலம். உள்ளது.

கோவில் கருவறையைச் சுற்றியுள்ள புறச் சுவர்களில் சிற்ப வேலைபாடுகள் இல்லாமல் தேவகோட்டங்களில் மகர தோரணங்களால் சாத்தப்பட்டு அழகுபடுத்தப்பட்டுள்ளது. இதன் மேல் பகுதியில் விசயநகர கலைப்பாணியில் புடைப்புச் சிற்பங்கள் உள்ளன. கோவில் விமானமானது ஆறு பகுதிகளாக உள்ளது. கூரைப் பகுதியில் அனைத்து மூலைகளிலும் கருடாழ்வார் சுதை வடிவில் காட்சி அளிக்கின்றார். கருவறையின் முதல் தளத்தில் நான்கு பக்கங்களிலும் சன்ன கூடங்கள் அமைந்துள்ளன.

இரண்டாவது தளத்தில் தெய்வ உருவங்கள் அழகுறக் காட்சி அளிக்கின்றன. கருவறைக்கு எதிரில் கருடாழ்வார் உள்ளார். நுழைவுவாயிலில் துவார பாலகர்கள் கம்பீரமான தோற்றத்துடன் உள்ளனர்.

## தனிச்சிறப்பு

இத்திருக்கோயிலில் பெருமாளுக்கு அபிசேகித்த தேன் பிரசாதத்தினை ஊமைக் குழந்தைகள் சனிக்கிழமை தோறும் ஆறு வாரத்திற்கு உட்கொண்டால் பேசும் சக்தி கிடைக்கும் என்பது அனுபவபூர்வமாக உணர்ந்தவர்கள் கூறுவதாகும்.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

நாள்தோறும் இரண்டு கால பூசைகள் நடைபெறுகின்றன. சனிக்கிழமையன்று சிறப்பு தேனாபிசேகம் செய்யப்படுகின்றது. புரட்டாசி நவராத்திரியும், கருடசேவையும் சிறப்பான திருவிழாக்கள். கார்த்திகை தீபத்தன்று பெருமாள் திருவீதி உலா வாணவேடிக்கைகளுடன் விமரிசையாக நடைபெறுகின்றது.

## திருக்கோயில் தரிசன நேரம்

ஞாயிறு முதல் வெள்ளி வரை

காலை 8.00 மணி முதல் 11.00 மணி வரை.

சனிக்கிழமைகளில்

காலை 5.00 மணி முதல் 6.00 மணிவரை.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு ஊமைக்கு வாய்கொடுத்த உத்தமராயப்
பெருமாள் திருக்கோயில்,
பெரிய அய்யம்பாளையம், ஆரணி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.
தொலைபேசி எண் : 04181 248424.





தட்சண அகோபிலம் எனும்

**அருள்மிகு இலட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயில்,**

ஆவணியாபுரம், வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு இலட்சுமி நரசிம்மசுவாமி |
| இறைவி | : | அருள்மிகு பூமி நீளாதேவி |
| தீர்த்தம் | : | பாகூநதி |
| தலவிருட்சம் | : | வெட்பாலை |
| ஆகமம் | : | பாஞ்சராத்ரம் |

## அமைவிடம்

தட்சண அகோபிலம் எனும் ஆவணியாபுரம் திருத்தலம் திருவண்ணாமலை மாவட்டத்தில், செய்யாற்றிலிருந்து 23 கி.மீ. தொலைவிலும், வந்தவாசியிலிருந்து 25 கி.மீ. தொலைவிலும், ஆரணியிலிருந்து 15 கி.மீ. தொலைவிலும், வந்தவாசி-ஆரணி நெடுஞ்சாலைக்கு இடையில் மலைமீது அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

இத்தலத்திற்கு அருகாமையில் உள்ள ஆரணி, செய்யாறு ஆகிய ஊர்களில் தங்குவதற்குத் தனியார் விடுதிகள் அமைந்துள்ளன.

## ஆவணியாபுரம் பெயர்க்காரணம்



ஆவணி என்பதற்கு சிங்கம் என்று பொருளாம். இத்தலத்தில் திருமால், இலட்சுமி நரசிம்மராகக் காட்சியளித் தமையாலும், திருமகளும், கருடனும் மற்றும் அப்பெருமாள் எழுந்தருளியுள்ள மலையுங்கூட சிங்கமுகக் கோலத்தில் காட்சியளிப்பதாலும் இத்தலத்திற்கு ஆவணி நாராயணபுரம் என்று திருப்பெயர் வழங்கப்பட்டு, தற்போது ஆவணியாபுரம் என்று அழைக்கப் படுகின்றது. கல்வெட்டுக்கள் இத்தலத்தினை அவனிநாராயணபுரம் என்று குறிப்பிடுகின்றன.

## திருத்தல விருட்சம்

இத்திருக்கோயிலின் தலவிருட்சம் வெட்பாலை மரமாகும். இலட்சுமி நரசிம்மரின் திருவருள் வேண்டி இம்மலையின் மீது தேவர்கள் வெட்பாலை மரங்களாகத் தோன்றினர். வடமொழியில் குடஜ விருட்சம் என்று கூறப்படும் இம்மரம் மூலிகைச் சக்தி கொண்டதாக உள்ளது. மிகவும் குளிர்ச்சி பொருந்திய மரமாக உள்ளதால் பௌர்ணமி நாளில் இம்மலையைச் சுற்றிக் கிரிவலம் வருவது உடலுக்கு நன்மை பயப்பதாகும்.

## புராண வரலாறு

ஸ்ரீ நரசிம்மபெருமான் இரணியனை வதஞ்செய்த பிறகு மிகுந்த கோபத்துடன் இருந்தார். அவரது திருவுருவத்தையும், கோபத்தையும் கண்டு தேவர்கள், முனிவர்கள் முதலான அனைவரும் நடுங்கினர். அவ்வமயம் பிரகலாதன் இருகரங் கூப்பி வணங்கிச் சாந்தமடையுமாறு வேண்டினன். அவனது பக்திக்கு மெச்சிய நரசிம்மர், திருமகளைத் தனது இடப்பாகத்தில் அமர்த்திக்கொண்டு சாந்தரூபமாய் திருக்காட்சி நல்கினார்.

அப்போது தேவர்களும், பிருகு முனிவர் முதலானோரும் ஸ்ரீதரனே தேவரீரின் இத்திருக்கோலத்தை, ஈரேழு உலகத்து உயிர்களுக்கும் காட்டியருளி உலகங்களைக் காத்தருள வேண்டும் என்று வேண்டினர். அவர்களின் மீது கருணை கொண்டு நரசிம்மர், தேவர்களே! நீங்கள் உத்தமமான ஒரு இடத்தில் வெட்பாலை மரங்களாய் நின்று தவம் செய்து வாருங்கள் என்று திருவாய் மலர்ந்தருளி, முனிவ, தேவர்கள் வெட்பாலை மரங்களாய் நிற்கும் இடத்தில் உமக்குப் பஞ்சத் திருத்தல மூர்த்தியாகத் திருக்காட்சி அருளுவோம் என்று பிருகு முனிவருக்குத் திருவருள் செய்தனர்.



அத்திருவருளினால் மகிழ்ந்த தேவர்கள் பெருமாளைப் போற்றி வணங்கி, பூவுலகில் சோலைகள் சூழ்ந்த ஒரு குன்றின்மீது வெட்பாலை மரங்களாய்த் தோன்றினர். பிருகு முனிவர் அம்மரத்தின் நிழலில் அமர்ந்து நரசிம்ம சுவாமியை மனத்திலிருத்தித் தவஞ்செய்யலாயினர்.

அவ்வாறு தவஞ்செய்து வருகையில், ஒரு சுவாதி நாளன்று, பிருகு முனிவரின் முன்பாக ஸ்ரீ இலட்சுமி நரசிம்மசுவாமி திருக்காட்சியருளினார். பின்னர் அக்குன்றின் உச்சியில் வெங்கடேசராகவும் (திருப்பதி), வரதராசராகவும் (காஞ்சிபுரம்), அரங்நாதராகவும் (திருவரங்கம்), முத்தியை யளிக்கும் யோக நரசிம்மராகவும் (சோளிங்கர்) திருக்காட்சி நல்கி அவ்விடத்து அந்தந்த மூர்த்தங்களாக எழுந்தருளினார். பிருகு முனிவர் விதிப்படி அம்மூர்த்திகளைப் பூசித்திருந்து பின்னர் பெருமாளை அடைந்தனர். சிங்கமுகப் பெருமாள் எழுந்தருளிய அத்தலம் அவரது திருப்பெயரால் ஆவணி நாராயணபுரம் என்று அழைக்கப்படலாயிற்று.

வெட்பாலை மரங்களாய் நின்ற தேவர்கள் பௌர்ணமி தோறும் சுயவுருப் பெற்று இலட்சுமி நரசிம்மரைப் பூசித்து வந்தனர். ஸ்ரீ பெருமாள் எங்கும் தனது தோற்றம் விளங்குமாறு காட்சியருளினார். நரசிம்மரின் இடப்பாகத்தில் அமர்ந்துள்ள திருமகளின் திருமுகமும், கருடனின் திருமுகமும், அவர்கள் எழுந்தருளியுள்ள திருமலையும்கூட சிங்கமுகத் தோற்றத்துடன் காட்சியளித்தது. அதனைக் கண்ட தேவர்கள் உணர்ச்சிப் பெருக்கால் பலமுறை கீழே விழுந்து வணங்கினர். நரசிம்ம மந்திரத்தை ஆயிரத்தெட்டு முறை சொல்லி கிரிவலஞ் செய்தனர். அங்கு பலகாலம் பூசித்திருந்த அவர்கள் விரும்பிய பலன்களைப் பெற்றுப் பின்னர் தம்தம் உலகங்களை அடைந்தனர்.

பின்பொரு சமயம் திருத்தல யாத்திரை செய்த ஏரண்ட முனிவர் இத்தலத்திற்கு வந்திருந்து நரசிம்மரை வணங்கி அஷ்டமா சித்திகளைப் பெற்றனர். நாரதரும், தும்புருவும் வணங்கி விரும்பிய உலகங்களுக்குச் செல்லும் பேற்றினை அடைந்தனர். சிறப்பான புராண வரலாற்றைக் கொண்டுள்ள பழமையான ஆலயமாக இத்தலம் உள்ளது.

## பூசைகள்

நாள்தோறும் ஐந்து கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசைவிவரம் |
|---|---|
| காலை 6.00மணி | விஸ்வரூப பூசை |
| காலை 7.00 மணி | காலசந்தி பூசை |
| முற்பகல் 11.00 மணி | உச்சிக்கால பூசை |
| மாலை 5.30 மணி | சாயரட்சை பூசை |
| இரவு 7.00 மணி | ஏகாந்த சேவை |

## உற்சவங்கள்

இக்கோயிலில் சித்திரைத் தமிழாண்டுப் பிறப்பைத் தொடக்கமாகக் கொண்டு உற்சவங்கள் நடைபெறுகின்றன. கதிரவன் தோன்றும் காலை நேரமே நாளின் தொடக்கமாகும்; கதிரவனின் பெயர் கொண்ட தினமே வாரத்தின் தொடக்கமாகும்; கதிரவனின் இயக்கம் தமிழகத்திற்கு நேராக உள்ள காலமான

சித்திரையே தமிழாண்டின் தொடக்க மாதமாகும். அவ்வகையில் மரபுப்படி சித்திரைத் திங்கள் முதல் நாளன்று இலட்சுமி நரசிம்மருக்கும், வெங்கடேசப் பெருமாளுக்கும் சிறப்பாகத் திருமஞ்சனம் செய்யப்படுகின்றது. மாதந்தோறும் திருவிழாக்கள் கோலாகலமாக நடைபெறுகின்றன.

| | | |
|---|---|---|
| சித்திரை | - | பிரம்மோற்சவம் 10 நாட்கள், நரசிம்ம ஜெயந்தி |
| ஆவணி | - | கிருஷ்ண ஜெயந்தி |
| புரட்டாசி | - | வெங்கடேச பெருமாள் கருடசேவை |
| ஐப்பசி | - | தீபாவளி திருமஞ்சனம் |
| கார்த்திகை | - | விஷ்ணு தீபம் |
| மார்கழி | - | வைகுண்ட ஏகாதசி |
| தை | - | காணும் பொங்கல் |
| மாசி | - | மாசிமகத்தன்று ஸ்ரீ நரசிம்ம பெருமாள் பில்லாந்தி கிராமத்திற்கு எழுந்தருளல் |
| பங்குனி | - | பங்குனி உத்திரத்தன்று ஸ்ரீ நரசிம்ம பெருமாள் சோழவரம் கிராமத்திற்கு எழுந்தருளல் |

## கோயில் அமைப்பு

சுற்றிலும், பசுமையான வயல்கள் சூழ்ந்து எழிலுடன் விளங்கும் மலையின் இடையில் அருள்மிகு இலட்சுமி நரசிம்மர் தனிக்கோயில் கொண்டு பிரதான தெய்வமாக கீழ்த்திசை நோக்கி எழுந்தருளியுள்ளார். அவருக்கு இடப்புறம் கோடியில் அருள்மிகு அலர்மேல் மங்கைத் தாயார் சந்நிதி உள்ளது. அருகில் பஞ்சநரசிம்மரின் மூர்த்தங்களும், அதற்கருகில் உற்சவர் சந்நிதியும் உள்ளன. மலையின் உச்சியில் அருள்மிகு வெங்கடேசப் பெருமாள் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். அப்பெருமாளை



வணங்கி வலம் வருகையில் பிரகாரத்தின் தென்திசையில் வரதராஜப் பெருமாள், அரங்கநாதப் பெருமாள், யோக நரசிம்மர், அமிர்தபலவல்லித் தாயார் சந்நிதிகள் உள்ளன. மலைமீது வடகிழக்கு மூலையில் உள்ள பாறையொன்று சிங்கமுகத்துடன் உள்ளமை அவசியம் காணவேண்டிய ஒன்றாகும்.

## பிரார்த்தனைத் தலம்

பக்தர்கள் தங்களின் நிலத்தில் பயிரிட்ட தானியங்களின் முதல் அறுவடையினை, இலட்சுமி நரசிம்ம சுவாமிக்கு நேர்த்திக் கடனாகச் சமர்ப்பிக்கின்றனர். இப்பெருமாளின் சந்நிதியில் நெய்தீபமேற்றி வழிபடுவோர் தோஷங்கள் நீங்கப்பெற்றும் பகைவர் பயம் இன்றியும் வாழ்வில் ஏற்றம் பெற்றும் திகழ்வர். சனிவாரத்தில் இரவு தங்கியிருந்து வணங்குவோருக்குச் சந்தானப்பேறு வாய்க்கும். அவ்வாறு குழந்தைப் பேறு வாய்க்கப் பெற்றோர் துலாபாரம் செலுத்தி பிரார்த்தனையை நிறைவேற்றுகின்றனர். திருமலை உச்சியில் எழுந்தருளியுள்ள வெங்கடேசப் பெருமாளை வணங்குவோரது கடன் தொல்லைகள் விலகும். பாவங்கள் அழியும்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணிமுதல் 01.00 மணிவரை.

மாலை 3.00 மணிமுதல் 7.00 மணிவரை.

## தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு இலட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயில்
ஆவணியாபுரம், வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.
அலைபேசி எண் : 86089 99572.

## அருகில் உள்ள தலம்

முனுகப்பட்டு.





**அருள்மிகு வல்லபுரீசுவரர் திருக்கோயில்,**
வல்லம், வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு வல்லபுரீசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு கடினகுஜாம்பிகை |
| தீர்த்தம் | : | பிரமதீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வில்வம் |

## அமைவிடம்

வந்தவாசி ஆரணி நெடுஞ்சாலைக்கிடையிலுள்ள கிருஷ்ணாபுரம் எனும் கிராமத்திலிருந்து தெற்கே 4.கி.மீ. தொலைவில் வல்லம் எனும் தலம் அமைந்துள்ளது. வந்தவாசி சேத்துபட்டு நெடுஞ்சாலைக்களுக்கிடையே உள்ள வல்லம் கூட்டுச் சாலையிலிருந்து 2 கி.மீ. மேற்கில் சென்றாலும் வல்லம் கிராமத்தினை அடையலாம். செய்யாறிலிருந்து 20 கி.மீ. தொலைவிலும், வந்தவாசியிலிருந்து 18 கி.மீ. தொலைவிலும் உள்ள இத்திருக்கோயிலுக்குச் செய்யாறிலிருந்தும் வந்தவாசியிலிருந்தும் நகரப் பேருந்து வசதியுள்ளது.

## தங்கும் வசதி

அருகில் உள்ள வந்தவாசியில் தங்குவதற்குத் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தலச் சிறப்பு

புராண காலத்தில் அகத்தியர் வணங்கி அருள்பெற்ற தலமாக இத்தலம் விளங்குகின்றது. இறைவன் திருப்பெயரை ஸ்ரீ அகத்தீஸ்வரமுடைய நாயனார் என்று கல் வெட்டுக்கள் தெரிவிக் கின்றன. வலன் எனும் அசுரன் பூசித்ததால் இத்தலத்திற்கு வல்லபுரி என்றும், இறைவன் பெயர் வல்லபுரீசுவரர் என்றும் வழங்கப்படு கின்றன. விநாயகப் பெருமான் வழிபட்டு வல்லபை எனும் சக்தியைத் தேவியாகப் பெற்றதால் வல்லபபுரீசுவரர் எனும் பெயரும் பெருமானுக்கு வழங்கப்படுகின்றது. இங்கு எழுந்தருளியுள்ள இறைவி அருள்மிகு கடினகுசாம்பிகை, நெற்றிக் கண்ணுடன் உள்ளமை வேறெங்கும் இல்லாத சிறப்பாகும். மூன்று கண்களுடன் அம்பிகை உலகை விளங்கச் செய்து உயிர்களுக்கெல்லாம் தாயாக விளங்குகின்றாள்.



## கோயில் அமைப்பு

தூர்கானை மாட வடிவிலான கருவறையில் உயர்ந்த இலிங்கத் திருமேனி கொண்டு பச்சைவண்ணத்தில் ஸ்ரீ வல்லபபுரீசுவரர் அருள் பாலிக்கின்றார். வடக்குப் பிரகாரத்தில் கடின குசாம்பிகை சன்னதி உள்ளது. ஆறுமுகப் பெருமான் விநாயகர் சன்னதிகளும் உள்ளன. கருவறையைச் சுற்றிலும் கல்வெட்டுக்கள் உள்ளன. இங்குள்ள சூரியனின் கற்றிருமேனி காண்போரை வியக்கச் செய்வதாகும். மூலவர், அம்பாள், சூரியன், நந்திதேவர் ஆகிய அனைத்து கற்றிருமேனிகளும் பச்சைவண்ணக் கற்களால் எழுந்தருளச் செய்யப் பெற்றதாகும்.



## கல்வெட்டுச் செய்திகள்

இந்த ஆலயத்தில் 5 நந்தாவிளக்குகள் எரிக்க நிலதானம் அளிக்கப்பட்ட விவரத்தினைக் கருவறைக்குத் தெற்குப் புறமுள்ள சுந்தரபாண்டியனின் 12 வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு தெரிவிக்கின்றது. வடக்குச் சுவரில் விசயநகர் மன்னன் நரசிங்க யாதேவன் நிலமளித்த குறிப்பு உள்ளது.

## பூசை மற்றும் விழாக்கள்

நாள்தோறும் ஒரு கால பூசை நடைபெறும் இத்தலம் 212 அடி நீளமும், 185 அடி அகலமும் உள்ள பரப்பளவுடன் கிழக்கு நோக்கிய திருக்கோயிலாக விளங்குகின்றது. பிரதோசம், தமிழ்ப்புத்தாண்டு, திருவாதிரை, சிவராத்திரி ஆகிய உற்சவங்கள் நடைபெறுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 10.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை.

**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

**அருள்மிகு வல்லபபுரீசுவரர் திருக்கோயில்**
**வல்லம், வந்தவாசி மாவட்டம்**
**திருவண்ணாமலை மாவட்டம்**

**அலைபேசி எண் : 99522 00792.**







## அருள்மிகு கோட்டை ஆஞ்சநேயர் திருக்கோயில்

வந்தவாசி நகரம் மற்றும் வட்டம்
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு ஆஞ்சநேய சுவாமி |
| தீர்த்தம் | : | அனுமன் தீர்த்தம் (சுனை) |
| தலவிருட்சம் | : | அரசமரம் |

### அமைவிடம்

வந்தவாசி நகரின் மத்தியில் பேருந்து நிலையத்திற்கு அருகாமையில் இத்தலம் உள்ளது.

### தங்கும் வசதி

தங்குவதற்குத் தனியார் விடுதிகள் வந்தவாசியில் உள்ளன.

### வரலாற்றுச் சிறப்பு

சுமார் 800 ஆண்டுகட்கு முற்பட்ட தலமாக அருள்மிகு கோட்டை ஆஞ்சநேயர் திருக்கோயில் உள்ளது. சுற்றிலும் அகழிகள் சூழ்ந்து பெரிய கருங்கல் மதிற்சுவரைக் கொண்டுள்ள கோட்டையினுள் இத்தலம் உள்ளதால் கோட்டை ஆஞ்சநேயர்

கோயில் என வழங்கப்படுகிறது. கருவறையினுள் கூப்பிய கரங்களுடன் நின்ற கோலத்தில் ஆஞ்சநேயர் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். அருகில் தெற்கு திசை நோக்கிய சன்னதியில் இலட்சுமணன், சீதாதேவி சமேதராக இராமபிரான் காட்சியருளுகின்றார். அனைத்து மதத்தினரும் வந்து வழிபடும் தலமாக இது உள்ளது.

இப்பகுதியில் முன்பு ஆங்கிலேயருக்கும், பிரெஞ்சுக்காரர்களுக்கும் போர் நடைபெற்று அதில் ஆங்கிலேயர் வென்றனர். இப்போர் வந்தவாசிப் போர் என்றும், மூன்றாம் கர்நாடகப் போர் என்று வழங்கப்படுகின்றன. இத்துடன் பிரெஞ்சு ஆதிக்கம் தமிழகத்தில் முடிவுக்கு வந்தது. இப்போரைப் பற்றித் தெரிவிக்கும் கல்வெட்டொன்று கோட்டையினுள் உள்ளது.

### பூசை மற்றும் விழாக்கள்

இங்கு நாள்தோறும் இரண்டு கால பூசைகள் நடைபெறுகின்றன. அனுமன் ஜெயந்தி, இராமநவமி ஆகிய உற்சவங்கள் கொண்டாடப்படுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 10.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்
அருள்மிகு கோட்டை ஆஞ்சநேயர் திருக்கோயில்
வந்தவாசி நகரம் மற்றும் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.
அலைபேசி எண் : 99522 00792.

### அருகில் உள்ள தலங்கள்

வெண்குன்றம், மும்முனி, தென்னாங்கூர்





**அருள்மிகு தவளகிரீசுவரர் திருக்கோயில்**
வெண்குன்றம், வந்தவாசி வட்டம்
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு தவளகிரீசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு பர்வதவர்த்தினி |
| தீர்த்தம் | : | வியாச தீர்த்தம் (சுனை) |
| தலவிருட்சம் | : | வில்வம் |

## அமைவிடம்

இத்தலம் திருவண்ணாமலை மாவட்டத்தில், வந்தவாசியிலிருந்து 3 கி.மீ. தொலைவில் உள்ள வெண்குன்றம் எனும் கிராமத்தில் சுமார் 1500 அடி உயர மலைமீது அமைந்துள்ளது. ஆரணி , திருவண்ணாமலை, காஞ்சிபுரம், மேல்மருவத்தூர், சென்னை முதலிய ஊர்களிலிருந்து வருபவர்கள் வந்தவாசி வழியாக வந்து வெண்குன்றத்தினை அடையலாம்

## தங்கும் வசதி

இத்தலத்திற்கு அருகாமையில் உள்ள வந்தவாசியில் தங்குவதற்குத் தனியார் விடுதிகள் அமைந்துள்ளன.

## வரலாற்றுச் சிறப்பு

இப்பகுதி சங்ககாலத்தில் வெண்குன்றக் கோட்டம் என்று வழங்கப்பட்டது. கல்வெட்டுக்களும் வெண்குன்றக் கோட்டம் என்றே குறிப்பிட்டுள்ளன. சிலப்பதிகாரத்தில் முருகப் பெருமானின் தலங்களாகத் திருச்செந்தூர், திருச்செங்கோடு, திருவேரகம், வெண்குன்றம் ஆகிய தலங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்நூல் குறிப்பிட்டுள்ள வெண்குன்றம் இத்தலமாகவே சொல்லப்படுகிறது. முருகப்பெருமானின் சிறப்பான தலங்களில் இதுவும் ஒன்று என்பதற்கு உதாரணமாக கார்த்திகைத் தீபநாளன்று அதிகாலையில் மலையடிவாரத்தில் முருகப்பெருமானை எழுந்தருளச் செய்து, அன்று மாலையில் மலைமீது தீபம் ஏற்றப்படுகிறது. இவ்விழா தொன்றுதொட்டு நடைபெற்று வருகிறது. மேலும் பண்டைக்காலத்தில் மன்னர்கள் இம்மலையின்மீது தங்களது அரண்மனைகளை அமைத்து அரசு செய்து வந்துள்ளனர். அதன் இடிபாடுகளை இன்றும் காணலாம். எட்டாம் நூற்றாண்டில் பல்லவர்கள் காலத்தில் இத்தலம் சிறப்புற்றுத் திகழ்ந்தது.

## கிரிவலச் சிறப்பு

இம்மலையினைச் சுற்றிக் கிரிவலம் வருவது சிறப்பாகும். இயற்கையாகவே கிரிவலப் பாதை அமைந்த இடங்கள் மூன்று உள்ளன. அவை புவனகிரி (திருவண்ணாமலை), தவளகிரி (வெண்குன்றம்), வேதகிரி (திருக்கழுக்குன்றம்) என்பனவாகும். புவனகிரி ஞான செல்வத்தையும், தவளகிரி குழந்தைச் செல்வந்தையும், வேதகிரி பொருட்செல்வத்தையும் அளிப்பனவாக உள்ளன எனப் பழமையான புராணம் ஒன்று தெரிவிக்கின்றது.

இப்பெருமானை வியாசமுனிவர், அறுமுகப்பரமன் மண்டுக முனிவர், இந்திரன், கங்காதேவி, தேவர்கள், சித்தர்கள் முதலானோர் வணங்கி ஈடிலாப் பேற்றினைப் பெற்றுள்ளனர்.



## புராண வரலாறு

ஆதியில் சிவபெருமான் உலகங்களைத் தோற்றுவித்தனர். செடி, கொடி முதலான தாவரங்களையும், உயிர்களையும் படைத்தனர். உயிர்களின் பொருட்டு வேதங்களை அருளினர். அவ்வாறு தோன்றிய வேதங்கள் பலவகையாக இருந்தன.

ஒருசமயம் கயிலையில் பெருமான், வியாசமுனிவரை அழைத்து வியாச! எம்மால் அருளப்பட்ட வேத சாத்திரம் எல்லையற்றனவாக இருப்பதால், அவற்றின் சாரங்களை உலகிற்கு எடுத்துக்கூறி வருக! உலக மக்கள் உய்த்துணரும் வண்ணம் வேதக் கருத்துக்களைக் கூறும் புராணங்களையும் இயற்றுக! என்று திருவருள் செய்தனர். பெருமானின் திருவாணையைக் கேட்ட வியாசர் அவரது திருவடி விழுந்து போற்றி வணங்கி தென்திசை நோக்கிச் சென்றார். அரிய பல தீர்த்தங்களில் நீராடிப் புண்ணியத் தலங்களைத் தரிசித்துச் சென்றார்.

அவ்வாறு செல்லும் வழியில் தொண்டை நாட்டில் ஓரிடத்தில் உத்தமமான வெண்ணிற மலையினைக் கண்டார். அதன் உச்சியை அடைந்து பெருமானை நோக்கித் தியானித்திருந்தனர். அவ்விடத்து இலிங்கம் ஒன்றினைப் பிரதிட்டைச் செய்து அருகே தீர்த்தம் ஒன்றினை உண்டாக்கி அந்த இலிங்கத்தை நாள் தோறும் பூசித்திருந்தனர்.



பின்னர் அம்மலையினின்று நீங்கி வடதிசை சென்று வேதங் களை நான்காக வகைப் படுத்தி அவற்றை முறையே பைலர், வைசம் பாயனர், சைமினி, சுமந்து ஆகிய முனிவர்களிடம் அளித்தார்.

தொண்டை மண்டலத்தில் வெண்ணிற மலையில் வியாச முனிவரால் பூசிக்கப்பட்ட பெருமானுக்குத் தவளகிரீசர் (தவளம்-வெண்மை) என்றும், வெண்குன்றநாதர் என்றும், அவரால் உண்டாக்கப்பட்ட தீர்த்தத்திற்கு வியாச தீர்த்தம் என்றும் திருப்பெயர்கள் வழங்கப்படுகின்றன.

## சோதி ரூபமாய்ப் பெருமான் காட்சியருளல்

ஆறுமுகப் பரமன், தாருகாசுரனை வதஞ்செய்த பிறகு, உலக நன்மையின் பொருட்டு, சிவபெருமானால் தோற்று விக்கப்பட்ட திருத்தலங்கள் தோறும் சென்று வழிபாடாற்றி அருணகிரியை அடைந்தார். அங்கு பெருமானின் சோதி தரிசனம் வேண்டித் தியானித்திருந்தனர். அவரது திருமுன்பாக பெருமான் தோன்றி "குமர! முன்பொரு சமயம் பிரம, திருமாலுக்கு இடையே பெருஞ்சோதியாக எழுந்தருளினம்; பின்பு கார்த்திகை நாளில் அர்த்தநாரி ஆயினம். நீர் விரும்பும் எமது சோதி தரிசனத்தைத் தவளகிரியை அடைந்து பெறுக"! என்று திருவாய் மலர்ந்தனர்.

அதன்படி முருகப்பெருமான் தவளகிரியை அடைந்து அங்கு அருள்பாலித்துவரும் வெண் குன்றப் பெருமானை வணங் கினர். தனது கூரிய வேலால் தீர்த்தம் ஒன்றினை உண்டாக்கிப் பெரு மானைப் பூசித் திருந் தனர். அவ் வேளையில் ஓராயிரம் சூரியர்களின் பிரகா சத்துடன் சோதி ரூபமாய்ப் பெருமான் தோன்றி னார். சோதி தரிசனம் கண்ட ஆறுமுகப் பரமன் பரவசராகி பெரு மானைப் போற்றி ரூபம்இலிங்க ரூபமாய் உருமாறிற்று. அவ்வி லிங்கத்தைப் பலகாலம் பூசித் திருந்த ஆறுமுகன் அக்குன்றி னையே தனது முக்கிய இருப்பிட மாக்கிக் கொண்டார்.



ஆறுமுகனுக்குச் சோதிரூபத் திருக்காட்சி நல்கிய பெருமான், அருணாசலேசர் எனும் திருப்பெயருடன் தனிச் சன்னிதி கொண்டு

தவளகிரியில் விளங்குகின்றார். அறுமுகனால் உண்டாக்கப்பட்ட தீர்த்தம் குமார தீர்த்தம் என்று வழங்கப்படுகின்றது.

## கங்காதேவி வழிபடுதல்

வடதிசையில் செல்லும் புண்ணிய நதியான கங்காதேவி ஒருசமயம் தவளகிரியை அடைந்து, தவளகிரீசரை விதிப்படி பூசித்திருந்து தூய நிலையை அடைந்தாள். பின்னர் அவ்விடத்து ஆகாச கங்கைத் தீர்த்தமாக எவர் கண்களுக்கும் புலப்படாமல் உற்பத்தியாகிப் பெருமானை நாள்தோறும் அபிசேகித்துப் பாய்ந்தோடியது. மகிமைகள் நிறைந்த அத்தீர்த்தத்தில் தேவர்களும், முனிவர்களும் நீராடி எண்ணிறந்த பேறுகளைப் பெற்றுள்ளனர். மலையடிவாரத்தில் சிங்கமுக வாயின் வழியே வெளியேறும் அத்தீர்த்தத்தில் நீராடுவோரது பெருநோய்கள் அனைத்தும் விலகும்.



## திருக்கோயில் அமைப்பு

மலைக்கோயிலுக்குச் செல்லும் வழியில், அடிவாரத்தில் சங்கோதியம்மன் சன்னிதி உள்ளது. அதற்கு முன்புறம் வட மொழி மற்றும் தெலுங்கு மொழியிலான ஒரு கல்வெட்டுக் குறிப்பு உள்ளது. சிறிது தூரம் மலையேறிச் சென்றால் தவளகிரியின் காவல் தெய்வங்களாக விளங்கும் பச்சையம்மன் கோயிலையும், வாழ்முனி கோயிலையும் அடையலாம்.

மலைக்கோயிலின் கருவறையில் தவளகிரீசர் கிழக்கு முகமாக எழுந்தருளி அருள் பாலிக்கின்றார். கருவறைக்கு வெளியே கீழ்ப்புறம் வியாச தீர்த்தச் சுனை உள்ளது. பின்புறம் தென்மேற்குத் திசையில் விநாயகப் பெருமான் தனிச் சன்னிதியில் வீற்றிருக்கின்றார். வடதிசையில் பன்னிரு கரங்களுடன் தேவேந்திர மயில்மீது ஆறுமுகப்பரமன் எழுந்தருளியுள்ளார். அவருக்கு வடபுறம் குமார தீர்த்தச் சுனை உள்ளது. அருணாசலேசர்,





உண்ணாமுலையமமன் சன்னிதி அருகே உள்ளது. கோமுகிக்கு அருகே சண்டேசர் சன்னதியும், ஈசான திசையில் பர்வதவர்த்தினி சன்னதியும் உள்ளன.

கருவறைச் சுவற்றின் தென்புறம் தீபமாடமொன்றுள்ளது முற்காலத்தில் மாலை வேளையில் அதில் தீபம் ஏற்றுவர். தீப தரிசனம் கண்ட பின்னரே மலைக்குக் கீழே கிராமத்தில் வாழும் மக்கள் தங்களுடைய வீடுகளில் தீபமேற்றுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். அதனருகே ஒரு பாறையின் மீது பல்லவர் காலக் கல்வெட்டுக் குறிப்பொன்றும் உள்ளது.

இக்கோயிலின் தல விருட்சம் கன்னி வில்வமாகும். செங்குத்துப் பாறை மீதுள்ள இவ்விருட்சம் பலநூறு ஆண்டுகளாக வளராமல் ஒரே அளவிலேயுள்ளது. ஆன்மீக வியப்பாகும். அதனருகே பாறையின் சரிவில் காண்பதற்குரிய கல்லால மரமொன்றுள்ளது. இம்மலையிலுள்ள அரிய பச்சையிலையினைத் திரியாக்கி தீபமேற்றி வழிபடுவது இங்கு சிறப்பாகும்.

## மலையடிவார கோயில்

தவளகிரியின் அடிவாரத்திலுள்ள கிராமத்தில் எழில்சூழ் சோலைகளுக்கு மத்தியில் கைலாசநாதர் திருக்கோயில் உள்ளது. இங்கு எழுந்தருளியுள்ள கைலாசநாதரும், அகிலாண்டேசுவரியும் கருணையே வடிவானவர்கள். விநாயகர், முருகர், சண்டேசர் சன்னிதிகளும் இங்குள்ளன. கருவறையைச் சுற்றிலும் பழங்காலக் கல்வெட்டுக் குறிப்புகள் உள்ளன. இக்கோயிலின் தலவிருட்சம் வன்னியாகும்.

## திருவிழாக்கள்

ஆண்டுதோறும் கார்த்திகை தீபத்தன்று மலைமீது தீபமேற்றப்படுகிறது. இதனைக் காண இலட்சக்கணக்கில் பக்தர்கள் வருகின்றனர். பிரதோசம், திருவாதிரை, சிவராத்திரி முதலான விழாக்களும் நடைபெறுகின்றன.

**மலைக்கோயில் தரிசன நேரம்**

வாரந்தோறும் திங்கட்கிழமை

காலை 9.00 மணிமுதல் மாலை 4.00 மணிவரை.

**மலையடிவார கோயில் தரிசன நேரம்**

காலை 7.00 மணிமுதல் 10.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

அருள்மிகு தவளகிரீசுவரர் திருக்கோயில்
வெண்குன்றம், வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

அலைபேசி எண் : 99522 00792.

## அருகில் உள்ள தலங்கள்

வந்தவாசி, மும்முனி, தென்னாங்கூர்



## இலிங்கம்

இலிங்கம் என்பதற்கு எல்லாம் ஒடுங்கி மீண்டும் வெளிப்படுவதற்குரிய இடம் என்பது பொருளாகும். இலிங்கம் உருவான காரணத்தைக் கொண்டு ஆறு வகைப்படும்.

1. தேவிகம் - இறைவியால் தாபிக்கப்பட்டது
2. திவ்யம் - தேவர்களால் தாபிக்கப்பட்டது
3. ஆர்ஷம் - முனிவர்களால் தாபிக்கப்பட்டது
4. மானுஷம் - மனிதர்களால் தாபிக்கப்பட்டது
5. இராட்சசம் - அசுரர்களால் தாபிக்கப்பட்டது
6. பாணம் - தானே தோன்றியது.




**அருள்மிகு ஜலகண்டேசுவரர் திருக்கோயில்**
வந்தவாசி நகரம் மற்றும் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| **இறைவன்** | : | அருள்மிகு ஜலகண்டேசுவரர் |
| **இறைவி** | : | அருள்மிகு சற்புத்திரி நாயகி |
| **தலவிருட்சம்** | : | வில்வம் |
| **ஆகமம்** | : | காமிகம் |

## அமைவிடம்

வந்தவாசி நகரின் மத்தியில் பேருந்து நிலையத்திற்கு அருகாமையில் இத்தலம் உள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குத் தனியார் விடுதிகள் உள்ளன.

## தலச் சிறப்பு

இத்தலம் கங்காதேவி பூசித்த சிறப்புடையது. கங்காதேவி வழிபட்டதால் கருவறையினுள் எப்போதும் நீர் ஊறிக் கொண்டே இருக்கும். அதனால் மூலவர் ஜலகண்டேசுவரர் எனும் திருப்பெயருடன் அழைக்கப்படுகின்றார். பிரகாரத்தில் விநாயகர், முருகன் சன்னதிகளும், 63 நாயன்மார்கள் திருமேனிகளும் உள்ளன. இத்தலம் சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்டது. பல்லவர் காலத்தைச் சேர்ந்ததாகும்.

## பூசை மற்றும் விழாக்கள்

கிழக்கு நோக்கிய கம்பீரமான இராசகோபுரத்துடன் திகழும் இத்திருக்கோயிலில் நாள்தோறும் இரண்டு கால பூசைகள் செய்யப்படுகின்றன. பிரதோசம், மாசிமக பிரம்மோற்சவம், மகாசிவராத்திரி முதலான நாட்களில் ஆயிரக் கணக்கான பக்தர்கள் வந்திருந்து வழிபடுகின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 12.00 மணிவரை.

மாலை 4.30 மணிமுதல் 8.30 மணிவரை.

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்**

**அருள்மிகு ஜலகண்டேசுவரர் திருக்கோயில்**
**வந்தவாசி நகரம் மற்றும் வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**

**ஆய்வாளர் அலைபேசி எண் : 96557 77628.**



## நந்திதேவர்

நந்தி என்பதற்கு எப்போதும் ஆனந்த நிலையில் உள்ளவர் என்பது பொருளாம். இவரை இடப தேவர் என்றும் வழங்குவர். இவர் தருமத்தின் வடிவாய் திகழ்பவர். பெரிய கோயில்களில் ஐந்து இடங்களில் நந்தியைப் பிரதிட்டை செய்வர். கோயிலுக்கு வெளியே உள்ளது இந்திர நந்தி. தனி மண்டபத்தில் பெரிதாகச் சுதையால் அமைக்கப்படுவது பிரம நந்தி. பலிபீடம், கொடிமரம் ஆகியவற்றிற்கு முன்புள்ளது ஆன்ம நந்தி. பிரகாரத்திலுள்ளது திருமால் நந்தி. மகாமண்டபத்திலுள்ளது தரும நந்தி ஆகும்.



**அருள்மிகு அரங்கநாதபெருமாள் திருக்கோயில்**

வந்தவாசி நகரம் மற்றும் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு அரங்கநாத பெருமாள் |
| இறைவி | : | அருள்மிகு அரங்கநாயகி தாயார் |

## அமைவிடம்

வந்தவாசி நகரின் மத்தியில் பேருந்து நிலையத்திற்கு அருகாமையில் ஜலகண்டேசுவரர் ஆலயத்தையொட்டி இத்தலம் உள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்குத் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

இங்கு சுகபிரம்மரிஷிக்குத் திருமால் அரங்கநாத பெருமாளாகக் காட்சியருளினார். கருவறையினுள் தெற்கே தலைவைத்து வடக்கே திருவடி கொண்டு கிழக்குத் திசைநோக்கி திருமுகங்கொண்டு ஸ்ரீ பெருமாள் பாம்பணைமீது பள்ளி கொண்டுள்ளார். நாபிக்கமலத்தில் பிரம்மனும், திருவடியருகே ஸ்ரீ தேவி பூதேவியும் உள்ளனர். தாயார் அரங்கநாயகி எனும்

பெயருடன் தனிச் சன்னதி கொண்டு விளங்குகின்றாள். ஆண்டாள் சன்னதியும் பிரகாரத்தில் அனுமன் சன்னதியும் உள்ளன.

## பூசை மற்றும் விழாக்கள்

அழகிய இராசகோபுரத்துடன் விளங்கும் இத்திருக்கோயிலில் நாள்தோறும் இரண்டு கால பூசைகள் செய்யப்படுகின்றன. சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, ஆடிப்பூரம், கிருஷ்ண ஜெயந்தி, நவராத்திரி, வைகுண்ட ஏகாதசி, பங்குனி உத்திர பிரம்மோற்சவம் முதலான உற்சவங்கள் கொண்டாடப்படுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 12.00 மணிவரை.

மாலை 4.30 மணிமுதல் 8.00 மணிவரை.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

**அருள்மிகு அரங்கநாத பெருமாள் திருக்கோயில்,**
**வந்தவாசி நகரம் மற்றும் வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**

**ஆய்வாளர் அலைபேசி எண் : 96557 77628.**




# இதிகாசம்

இதிகாசம் என்பதற்கு ஐதீகத்தை நிரூபணம் செய்யும் வரலாறு என்பது பொருளாம். இராமாயணம், மகாபாரதம் என்பவை இரண்டும் இதிகாசங்களாம். இராமாயணத்தை இயற்றியவர் வால்மீகி. பாரதத்தைச் செய்தவர் வியாச முனிவர் ஆவார்.



**அருள்மிகு பச்சையம்மன் சமேத**
**மன்னார்சாமி திருக்கோயில்,**
மும்முனி, வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு மன்னார்சாமி |
| இறைவி | : | அருள்மிகு பச்சையம்மன் |

## அமைவிடம்

வந்தவாசிக்கு மேற்கே 3 கி.மீ. தொலைவிலுள்ள மும்முனி எனும் கிராமத்தில் வந்தவாசி புறவழி நெடுஞ்சாலையில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

வந்தவாசியில் தங்குவதற்குத் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

இத்தலம், சுற்றிலும் உள்ள மக்களுக்குக் குலதெய்வக் கோயிலாக உள்ளது. இங்கு மொட்டையடித்தல், காதுகுத்தல், கூழ்வார்த்தல், பொங்கலிடுதல் முதலான நேர்த்திக் கடன்கள்

செலுத்தப்படுகின்றன. தீராத நோய்களெல்லாம் தீர்த்துவைக்கும் பரிகாரத் தலமாக இது உள்ளது. மூன்று முனீசுவரர்கள் பச்சையம்மனுக்குக் காவல் தெய்வங்களாக விளங்கிவருவதால் இக்கிராமத்திற்கு மும்முனி என்று பெயர் வழங்கப்படுகிறது. இப்பகுதியில் மூன்று பச்சையம்மன் தலங்கள் சிறப்புற்று விளங்குகின்றன. அவை முனுகப்பட்டு பச்சையம்மன், மும்முனி பச்சையம்மன், வெடால் பச்சையம்மன் என்பவையாகும். இவற்றை முறையே காலை, நண்பகல், மாலை ஆகிய வேளைகளில் பௌர்ணமி அன்று வழிபடுதல் சிறப்பு என்கின்றனர் பக்தர்கள்.

## பூசை மற்றும் விழாக்கள்

இத்திருக்கோயிலில் நாள்தோறும் ஒரு கால பூசை செய்யப்படுகின்றது. ஆடிமாதம் முதல் 7 திங்கட்கிழமைகளில் உற்சவங்கள் கொண்டாடப்படுகின்றன. ஞாயிற்றுக்கிழமைகளில் திரளான பக்தர்கள் வருகின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணிமுதல் 1.00 மணிவரை.

மாலை 3.00 மணிமுதல் 7.00 மணிவரை.

### தொடர்பு முகவரி

**தக்கார்/ஆய்வர்,**

**அருள்மிகு பச்சையம்மன் சமேத மன்னார்சாமி திருக்கோயில்,
மும்முனி, வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.**

**ஆய்வாளர் அலைபேசி எண் : 96264 29414.**





**அருள்மிகு பராசரேசுவரர் திருக்கோயில்,**
பொன்னூர், வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு பராசரேசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு சாந்தநாயகி |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

இத்தலம் வந்தவாசியிலிருந்து சுமார் 8.கி.மீ. தொலைவில் உள்ள பொன்னூர் என்னும் கிராமத்தில் அமைந்துள்ளது. வந்தவாசியிலிருந்து திண்டிவனம் செல்லும் சாலையில் 4 கி.மீ. தொலைவில் உள்ள இளங்காடு சென்று அங்கிருந்து தெற்காக 4 கி.மீ. சென்றால் பொன்னூரை அடையலாம்.

## தங்கும் வசதி

வந்தவாசியில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

இத்தலம், சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடப்பெற்ற தேவார வைப்புத்தலமாகும். பிரமன் வழிபட்ட சிறப்புடையது. எனவே பிரமபுரி, சுவர்ணபுரி என்னும் பெயர்களும் உண்டு. சம்புவ

ராயர்கள் காலத்தில் வருவாய் மையமாக, பெரியவூராக இது இருந்தது. இத்திருக்கோயில் பல்லவர் காலத்தில் கட்டப்பட்டு, சம்புவராயர் காலத்திய செப்பனிடப்பட்டுள்ளது. பொன்னூர் நாட்டுப் பொன்னூர் என்று சுந்தரமூர்த்தி நாயனார் பாடியுள்ளார். தற்பொழுது திருப்பணி நடைபெற்று வருகிறது. கோயிலுக்கு அருகில் அருள்மிகு சௌந்தர்ய வரதராஜப் பெருமாள் திருக்கோயிலும் உள்ளது.

இங்கு குலோத்துங்க சோழன், சுந்தரபாண்டியன், விசயநகர மன்னர்கள் காலத்திய கல்வெட்டுக்கள் உள்ளன அவை பரமீசுவரம் உடைய நாயனார், பராசர ஈஸ்வரமுடைய நாயனார் என்று இறைவனின் திருப்பெயர்களைக் குறிக்கின்றன.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

நாள்தோறும் ஒரு கால பூசை நடைபெறுகிறது. பிரதோசம், சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, கார்த்திகை தீபம், திருவாதிரை, மகாசிவராத்திரி ஆகிய நாட்களில் உற்சவங்கள் கொண்டாடப் படுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 11.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 6.30 மணிவரை.

### தொடர்பு முகவரி

**தக்கார்/ஆய்வர்,**
**அருள்மிகு பராசரேசுவரர் திருக்கோயில்,**
**பொன்னூர், வந்தவாசி வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**
**ஆய்வாளர் அலைபேசி எண் : 96264 29414.**





**அருள்மிகு திருமூலட்டானேசுவரர் திருக்கோயில்,**
தெள்ளாறு, வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு திருமூலட்டானேசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு அகிலாண்டேஸ்வரி |
| தீர்த்தம் | : | பிரம தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

தெள்ளாறு எனும் இத்தலம் வந்தவாசியிலிருந்து திண்டிவனம் செல்லும் வழியில் சுமார் 14 கி.மீ. தொலைவில் உள்ளது. வந்தவாசியிலிருந்தும், திண்டிவனத்திலிருந்தும் அடிக்கடி பேருந்து வசதியுள்ளது.

## தங்கும் வசதி

வந்தவாசியில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

சுமார் 1500 ஆண்டுகட்கு முற்பட்ட இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் திருப்பெயர் திருமூலட்டானேசுவரர், இறைவியின் திருப்பெயர் அகிலாண்டேஸ்வரி ஆகும். கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், பிரகாரம் என்ற அமைப்புடன் இக்கோயில் உள்ளது. சுற்றிலும் கல்வெட்டுக்கள் உள்ளன. இத்திருக்கோயில் திருநாவுக்கரசு சுவாமிகளாலும், சுந்தரமூர்த்தி நாயனாராலும் பாடப்பெற்ற தேவார வைப்புத் தலமாகும்.

நள்ளாறு தெள்ளாறு அரத்துறைவாய் எங்கள் நம்பனே
வெள்ளாடை வேண்டாய் வேங்கையின் தோலை விரும்பினாய்
புள்ளேறு சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
உள்ளாடப் புக்க மாணியென் னைக்கிறி செய்ததே.

(சுந்தரர்)

## வரலாற்றுச் சிறப்பு

மூன்றாம் நந்திவர்ம பல்லவன் காலத்தில் இத்தலம் மிகவும் சிறப்புற்று இருந்தது. அம்மன்னன் தெள்ளாற்றில் நடைபெற்ற போரில் மூவேந்தர்களையும் வென்றதால், தெள்ளாற்றெறிந்த நந்திவர்மன் எனச் சிறப்பிக்கப்பட்டான். அவ்வெற்றியைக் குறித்து நந்திக்கலம்பகம் எனும் நூல் செய்யப்பெற்றுள்ளது. இங்குள்ள ஒரு கல்வெட்டு நீதியை நிலைநாட்டும் வகையில் ஓர் அற்புதமான செய்தியினைத் தெரிவிக்கின்றது. பெண்ணொருத்தியின் உருவச்சிலையின் கீழ் குடிக்குறை துடைத்த நாச்சி என்ற தலைப்புடன் ஒரு கல்வெட்டு உள்ளது. சம்புவராயர் காலத்தில் தன் கணவர் குடிமயக்கத்தில் ஊர் பெண்டுகளை வைதமைக்குத் திருவிளக்கேற்ற ஊர் வாரியத்தார் குற்ற தண்டமெனப் பணிக்க உடனிருந்த ஆண்ட நாச்சியார் தான் அதனைச் செய்து குடிக்குறை துடைத்த செயலுக்காக நிறுவியது என்ற வாசகத்துடன் அக்கல்வெட்டு இருந்ததாக சான்றுள்ளது.



அதாவது தெள்ளாற்றில் ஒரு சமயம் மாலை வேளையில் பெண்கள் சிலர் குடிநீர் முகந்து கொண்டு வீடு திரும்புகையில் அவ்வழியே சென்ற குடிமகன் ஒருவன் குடிமயக்கத்தில்

அப்பெண்களைப் பற்றி அவதூறு வார்த்தைகளைச் சொல்லி கேலி செய்துள்ளான். மனம் வருந்திய அப்பெண்கள் ஊராண்மைக் கழக மன்றத்தில் முறையிட அம்மன்றத்தின் தலைவியாக இருந்த குடிமகனின் மனைவி நேர்மை தவறாமல் அவனுக்குத் தண்டனை வழங்கினாள். திருமூலட்டானேசுவரர் திருக்கோயிலைச் சுத்தம் செய்து 48 நாட்கள் திருவிளக்கேற்ற வேண்டும் என்று பணித்தாள். ஒருநாள் அவனுக்குப் பதிலாக அவனது மனைவி அவ்வேலைகளைச் செய்து கொண்டிருப்பதைக் கண்ட ஒரு பெண்மணி விவரம் கேட்டபோது, அதற்கு அவள், 'ஊராண்மை கழகத் தலைவி என்ற முறையில் குற்றம் செய்தவருக்குத் தண்டனையை வழங்கினேன். இப்போது மனைவி என்ற முறையில் அவர் செய்ய வேண்டிய வேலையை நான் செய்கின்றேன். கணவனுக்குத் துணைபுரிவது மனைவியின் கடமைகளுள் ஒன்றாகும்' என்று சொல்லி அனைவரையும் வியப்பில் ஆழ்த்தினாள். இதனால் அக்காலத்திலேயே உள்ளாட்சி மன்றங்களில் பெண்களுக்குப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டுள்ளமையும், அவர்கள் நீதிநெறி தவறாமல் இருந்துள்ளனர் என்பதும் அறியவேண்டி ஒன்றாகும்.

## கோயில் அமைப்பு

முகப்பு வாயிலின் மேலே விநாயகர், வள்ளி, தெய்வானை சமேத மயில்வாகனர், ரிஷபாரூடர், அம்பாள் உருவங்கள் சுதையில் வரிசையாக வைக்கப்பட்டுள்ளன. உள்ளே சென்றால் நேரே அம்பாள் சந்நிதி தெற்கு நோக்கியுள்ளது. மூலவர் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். உள்ளே வலம் வரும்போது நால்வர்,



வலம்புரி விநாயகர், சண்முகர், நவகிரகங்கள், பைரவர் சந்நிதிகள் உள்ளன. மூலவருக்கு நேர் எதிரே சாளரம் உள்ளது. கோஷ்டமூர்த்தங்களாக விநாயகர், தட்சிணாமூர்த்தி, திருமால், பிரமன், துர்க்கை ஆகியோர் உள்ளனர்.

## கல்வெட்டு செய்திகள்

இங்கு பல கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றில் இவ்வூரின் பெயர் ஜயங்கொண்ட சோழமண்டலத்து வெண்குன்றக் கோட்டத்து விக்ரம பாண்டிய வளநாட்டுத் தெள்ளாறு நாட்டுத் தெள்ளாறு என்றும். இறைவன் திருப்பெயர் மூலேஸ்வரர், தெள்ளாறுடையார் என்றும், கோயிலின் பெயர் திருமூலட்டானம் உடையார் கோயில் என்றும் குறிக்கப் பட்டுள்ளன. மேலும் காளிங்கராயன் செய்த திருப்பணிகள், சிற்றாமூர் தில்லைவன முடையான் சந்திக் கட்டளை அமைத்தது, விக்ரம பாண்டியன் காலத்தில் அளிக்கப்பட்ட மானியம் முதலான செய்திகளைப் பற்றியும் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

நாள்தோறும் இரண்டு கால பூசைகள் நடைபெறுகிறது. பிரதோசம், சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, விநாயகர் சதுர்த்தி, அன்னாபிசேகம், கார்த்திகை தீபம், திருவாதிரை, மகா சிவராத்திரி ஆகிய நாட்களில் உற்சவங்கள் கொண்டாடப்படுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 12.00 மணிவரை.

மாலை 4.00 மணிமுதல் 7.30 மணிவரை.

### தொடர்பு முகவரி

**தக்கார்/ஆய்வர்,**
**அருள்மிகு திருமூலட்டானேசுவரர் திருக்கோயில்**
**தெள்ளாறு, வந்தவாசி வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**
**ஆய்வாளர் அலைபேசி எண் : 96264 29414.**





**அருள்மிகு தடாகபுரீசுவரர் திருக்கோயில்,**
மடம் கிராமம், வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு தடாகபுரீசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு பிருகந்நாயகி,பெரியநாயகி |
| தீர்த்தம் | : | சிவகங்கை தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

வந்தவாசியிலிருந்தும், சேத்துபட்டு செல்லும் சாலையில் உள்ள எந்தல் எனும் கிராமத்திற்குக் கிழக்கே சுமார் 5 கி.மீ. தொலைவில் மடம் எனும் கிராமம் அமைந்துள்ளது. வந்தவாசியிலிருந்து மடம் கிராமத்திற்குச் செல்ல நகரப் பேருந்து வசதியுள்ளது.

## தங்கும் வசதி

வந்தவாசியில் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

பரந்து விரிந்து மூன்று பிரகாரங்களுடனும், மண்டபங் களுடனும் அழகிய கோபுரங்களுடனும் திகழும் அருள்மிகு தடாகபுரீசுவரர் திருக்கோயில் சுமார் 1500 ஆண்டுகட்கு

முற்பட்டதாகும். இத்திருக்கோயிலுக்கு முன்புறமுள்ள தடாகத்தில் மலர்ந்த ஒரு தாமரையின்மீது ஆதியந்தமிலாத அருட்பெருஞ்சோதியான கயிலைநாதன் திருமாலுக்குக் காட்சியருளியதால் இறைவனின் திருப்பெயர் தடாகபுரீசுவரர் என்று வழங்கப்படுகிறது. இறைவியின் திருப்பெயர் பெரியநாயகி என்றும் பிருகந்நாயகி என்றும் வழங்கப்படுகின்றன. கல்வெட்டுக்கள் இறைவனின் திருப்பெயரைத் தடாகபுரீசுவரர் என்றும் குளந்தை ஆண்டார் என்றும் அக்னீசுவரர் என்றும் தெரிவிக்கின்றன.

## கல்வெட்டுச் செய்திகள்

இத்திருக்கோயிலைச் சுற்றிலும் சுமார் 50க்கும் மேற்பட்ட கல்வெட்டுக்கள் உள்ளன. அவை தொல்லியல் துறையால் அடையாளமிடப்பட்டு அத்துறையின் பராமரிப்பின் கீழும் இந்து சமய அறநிலையத் துறையின் ஆளுகையின் கீழும் இந்த ஆலயம் உள்ளது. பிற்காலச் சோழர், பாண்டியர், சம்புவராயர் மற்றும் விசயநகர மன்னர்களின் கல்வெட்டுகள் உள்ளன. அவை பூசை மற்றும் திருவிழாக்களுக்கு நிலதானம் வழங்கப்பட்ட செய்திகளைத் தெரிவிக்கின்றன.

## கோயில் அமைப்பு

உயர்ந்தோங்கிய இராசகோபுரம், பெரிய மதிற்சுவர்கள், நீண்ட திருச்சுற்று, திருச்சுற்றில் நூற்றுக்கால் மண்டபம், கல்யாண மண்டபம், கோயிலினுள் நுழைந்தால் உட்பிரகாரத்தில் சோழர் காலத்திய தூண்களுடன் கூடிய மகா மண்டபம் என பெரிய திருக்கோயிலுக்கு உண்டான அமைப்புக்களுடன் இத்தலம் உள்ளது. பிரகாரத்தில் சகஸ்ரலிங்கம், விநாயகர், ஆறுமுகப் பெருமான் சன்னதிகள் உள்ளன. வெளிப்பிரகாரத்தில் பெரியநாயகி அம்மன் தனிக்கோயில் கொண்டு விளங்குகின்றாள்.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

நாள்தோறும் ஒரு கால பூசை நடைபெறுகிறது. பிரதோசம், சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, அன்னாபிசேகம், கார்த்திகை தீபம், திருவாதிரை, மகா சிவராத்திரி, பங்குனி உத்திரம் ஆகிய திருவிழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 11.00 மணிவரை.
மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை.

**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்,**
**அருள்மிகு தடாகபுரீசுவரர் திருக்கோயில்**
**மடம் கிராமம், வந்தவாசி வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**
**அலைபேசி எண் : 99522 00792.**

## அருகில் உள்ள தலங்கள்

திருமால்பாடி, சீயமங்கலம்



### பிரதோசம்

தோசம் என்பதற்குக் குற்றமுடையது என்பது பொருள். பிர என்பதற்குச் சிறப்பான, மேலான என்று பல பொருள்கள் உள்ளன. மாலை 4.30 மணிமுதல் 6.00 மணிவரை உள்ள காலம் பிரதோசம் என்று வழங்கப்படுகின்றது. இந்தக் காலத்தில் பெருமான், உயிர்களின் தோசங்களை (குற்றங்களை) நீக்கி நந்திதேவரின் கொம்புகளுக்கிடையில் திருநடனம் புரிந்தார். அதனால் இக்காலம் சிறப்பான, மேலான காலமாயிற்று. பிரதோசம் ஐந்து வகை என்பர்.

| | | |
|---|---|---|
| நித்திய பிதோசம் | : | தினந்தோறும் மாலையில் வருவது |
| பட்ச பிரதோசம் | : | வளர்பிறை சதுர்த்தியின் மாலைக்காலம் |
| மாத பிரதோசம் | : | தேய்பிறை திரியோதசி மாலை வேளை |
| மகா பிரதோசம் | : | சிவராத்திரிக்கு முன்புவரும் மாசி மாத தேய்பிறை திரியோதசியின் மாலை வேளை. |
| பிரளய பிரதோசம் | : | பிரளய காலத்தில் வருவது. |



**அருள்மிகு தீர்க்கசாலேசுவரர் திருக்கோயில்,**
நெடுங்குணம், வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு தீர்க்கசாலேசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு பாலாம்பிகை |
| தீர்த்தம் | : | பிரம தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

இத்தலம் வந்தவாசியிலிருந்தும் சேத்துப்பட்டு செல்லும் சாலையில் வந்தவாசியிலிருந்து 24 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இங்கிருந்து சேத்துப்பட்டு 4 கி.மீ. தொலைவில் உள்ளது. பேருந்து வசதி அடிக்கடி உள்ளது.

## தங்கும் வசதி

சேத்துப்பட்டு.

## புராண வரலாறு

வியாச முனிவருக்கும் தேவருலகிலுள்ள அப்சரஸ் என்று வழங்கப்படும் பன்னிரு பெண்களுள் ஒருவரான கிருதாசி என்பவளுக்கும் கிளியின் உருவம் தாங்கிய சுகப்பிரம்மரிஷி

எனும் முனிவர் மகனாகத் தோன்றினார். வியாசரைக் காட்டிலும் சிறந்த ஞானியாகத் திகழ்ந்த அவர், தொண்டைநாட்டில் சிவபெருமான் உயர்ந்தோங்கிய மலையாக விளங்கும் நெடுங்குன்றம் எனும் பதியினை அடைந்து தவஞ்செய்தார்.

அவ்வமயம் முனிவரின் முன்பாகப் பெருமான் தோன்றினார். சுகமுனிவர் பெருமானின் திருவடிக் கமலங்களில் பணிந்து எழுந்து முத்திப்பேற்றையருளுமாறு வேண்டி நிற்கையில், முனிவ! நீவிர் இம்மலைச்சாரலில் சிறிதுகாலம் தங்கியிருந்து இராமனிடம் இவ்வேதச்சுவடியினை அளித்து பின்பு என்னைச் சேர்வாய்; இம்மலையானது உனது பெயரால் சுகப்பிரம்ம பர்வதம் என்று வழங்கப்படும் என்று பெருமான் திருவருள் செய்து ஒரு சுவடியினை அவரிடம் அளித்தார். அதனைப் பெற்றுக்கொண்ட முனவர், பெருமானே நெடுங்குன்றாய் விளங்கும் தாங்கள் அத்திருப்பெயரைத் தாங்கி இவ்விடத்து எழுந்தருளுதல் வேண்டும்! என்று வேண்ட, அதன்படி மலையின்கீழ் தீர்க்காசலேசுவரர் எனும் திருப்பெயரோடு இலிங்கத் திருமேனி கொண்டு பெருமான் கோயில் கொண்டருளினார். பின்னர் பெருமானளித்த வேதச்சுவடியை அத்தலம் வழியாக அயோத்திக்குச் சென்ற இராமனிடம் அளித்து சுகமுனிவர் முத்திப்பேற்றையடைந்தார்.

சிவபெருமான் நெடிய குன்றாக இத்தலத்தில் உள்ளதால் இவ்வூருக்கு நெடுங்குன்றம் என்று பெயர் வழங்கப்பட்டு தற்போது நெடுங்குணம் எனப்படுகிறது. தீர்க்க – நெடு : அசலம் – மலை :தீர்க்காசலம் – நெடுங்குன்றம் எனப்படுகிறது.



## கல்வெட்டுச் செய்திகள்

சுமார் 155 அடி நீளமும், 89 அடி அகலமும் கொண்டு விளங்கும் இத்திருக்கோயில் 1000 ஆண்டுகட்கு முற்பட்டதாகும். கருவறையைச் சுற்றிலும் வெளிப்புறம் கல்வெட்டுக்கள் உள்ளன. கோயில் பூசைகளுக்கு நிலதானம் வழங்கப்பட்ட விவரங்களையும் இறைவனின் திருப்பெயரை நெடுங்குன்றநாயனார் என்றும் அவை தெரிவிக்கின்றன.

## கோயில் அமைப்பு

கருவறையில் வட்ட வடிவ ஆவுடையாரைக்கொண்டு அருவுருவ இலிங்கத்திருமேனியில் தீர்க்காசலேசுவரர் எழுந்தருளியுள்ளார். பிரகால அக்னி மூலையில் பாதாளலிங்கம் சந்நிதி உள்ளது. தெற்கு பிரகாரத்தில் ஜேஷ்டாதேவி, சப்த மாதர் ஆகியோரும், மேற்கு பிரகாரத்தில் விநாயகர், சீனிவாசர், ஆறுமுகன், பாலாம்பிகை சந்நிதிகளும், வடக்கு திசையில் பைரவர், நவகிரக சந்நிதிகளும் உள்ளன.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

நாள்தோறும் இரண்டு கால பூசைகள் நடைபெறுகின்றன. பிரதோசம், சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, ஆடிக்கிருத்திகை, அன்னாபிசேகம், கார்த்திகை தீபம், திருவாதிரை, மாசிமகம், மகாசிவராத்திரி ஆகிய திருவிழாக்கள் கொண்டாடப்படுகின்றன. இங்கு வந்து வழிபடுவோர் வாழ்வில் உயர்ந்த பதவிகளை அடைகின்றனர் என்பது பக்தர்களின் அனுபவவாக்காகும்

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 11.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை.

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்,**
**அருள்மிகு தீர்க்காசலேசுவரர் திருக்கோயில்**
**நெடுங்குணம், வந்தவாசி வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**
**ஆய்வாளர் அலைபேசி எண் : 96557 77628.**





**அருள்மிகு இராமச்சந்திர பெருமாள் திருக்கோயில்,**
நெடுங்குணம், வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு இராமச்சந்திர பெருமாள் |
| இறைவி | : | செங்கமலவல்லி தாயார் |
| தீர்த்தம் | : | சுக பிரம்ம தீர்த்தம் |
| ஆகமம் | : | வைகாநசம் |

## அமைவிடம்

நெடுங்குன்றம் எனும் இத்தலம் வந்தவாசியிலிருந்து சேத்தப்பட்டு செல்லும் சாலையில் வந்தவாசியிலிருந்து 24 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இங்கிருந்து சேத்துப்பட்டு 4. கி.மீ. தொலைவில் உள்ளது. பேருந்து வசதி அடிக்கடி உள்ளது.

## தங்கும் வசதி

சேத்துப்பட்டு.

## திருத்தல சிறப்பு

இத்திருக்கோயில் சுமார் 416 அடி நீளமும், 209 அடி அகலமும் கொண்டு மிகப்பெரிய இராமபிரான் திருக்கோயிலாகவும், கருவறை, அர்த்தமண்டபம், திருச்சுற்று மண்டபம், நூற்றுக்கால் மண்டபம் போன்ற அமைப்புகளைக் கொண்டும் உள்ளது. நெடிய ஆறு நிலைகள் கொண்ட இராசகோபுரத்தின் நுழைவாயிலில்

கொடிநங்கையர் சிற்பமும் திருமாலின் பத்து அவதாரங்களை நினைவூட்டும் வகையில் உள்ள சிறபங்களும் காண்போரைக் கவர்கின்றன. இராசகோபுரத்தைக் கடந்து கிளி கோபுரம், பலிபீடம், கொடிக்கம்பம், ஊஞ்சல் மண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றையும் கடந்து சென்றால் கருவறைக்கு முன்பாக சுமார் 9 அடி உயரமுள்ள சுவார பாலகர்கள் கம்பீரத் தோற்றத்துடன் உள்ளனர்.

கருவறையில் அமர்ந்த கோலத்தில் கையில் சின்முத்திரை தாங்கி இராமபிரான் எழுந்தருளியுள்ளார். இராமனது இத்திருக்கோலம் வேறேங்கும் தரிசிக்கவியலாத சிறப்பாகும். அருகில் சீதாபிராட்டி. இலட்சுமணன் ஆகியோர் உள்ளனர். அவர்களுக்கு எதிரில் அனுமன் வேதச்சுவடியைக் கையிலேந்தி படித்துக்கொண்டிருக்கும் கோலத்துடன் உள்ளார். கருவறையின் உட்புறத்திலும் ஒரு பிரகாரம் உள்ளது. திருச்சுற்றில் ஆழ்வார்களின் கற்றிருமேனிகள் உள்ளன.

## புராண வரலாறு

நெடுங்குன்றம் மலையில் தவஞ்செய்து கொண்டிருந்த சுகப்பிரம்ம முனிவரிடம் சிவபெருமான் வேதச்சுவடியை அளித்து அதனை இராமனிடம் கொடுக்குமாறு அருளிச் செய்தார். சுகமுனிவர் அத்திருவாணையை நிறைவேற்றும் வண்ணம் இராமபிரானின் வருகையை எதிர்நோக்கி தவத்தில் ஆழ்ந்தார்.

வெகுநாட்களுக்குப் பிறகு இராமன், சீதையைச் சிறைமீட்டு அயோத்திக்குத் திரும்பும் வழியில் நெடுங்குன்றத்தைக்



கடக்குஞ்சமயம் அங்கு சுகமுனிவரைக் கண்டு வணங்கினார். முனிவர் இராமனுக்கு ஆசிகளைக் கூறி, பெருமானளித்த வேதச்சுவடியை அவரிடம் கொடுத்து, தாங்களும் இங்கு கோயில் கொண்டருள வேண்டும் என்று வேண்டினர். அந்தச் சுவடியினை இராமபிரான் பெற்று அனுமனிடம் அளித்து சுகமுனிவருக்கு அருள் செய்தார். பின்னர் தனது இடக்கரமானது இடப்பக்க முழுங்கால்மேல் வைத்தநிலையில் வலக்கரத்தில் சின்முத்திரை தாங்கி மார்பின் மீது வைத்துக் கொண்டு யோக இராமச்சந்திர பெருமாளாக அவ்விடத்து அர்ச்சாரூபமாய் கோயில் கொண்டார். அவருக்கருகில் இடப்புறமாகத் தாமரை மலரினை வலக்கரத்தில் ஏந்தி இடக்கரத்தை கடிகாஸ்தமாக வைத்துக்கொண்டு சீதா தேவியும் பத்மாசனக் கோலத்தில் அமர்ந்துள்ளார். இவர்களுக்கு வலப்புறம் கைகளைக் கூப்பியவண்ணம் நின்ற கோலத்தில் இலட்சுமணன் உள்ளார். இம்மூவருக்கும் எதிரில் வேதச்சுவடியைப் படித்தவண்ணம் அனுமன் எழுந்தருளியுள்ளார். யோக இராமபிரானின் இத்திருக்கோலம் இங்கு மட்டுமின்றி திருவண்ணாமலை மாவட்டத்தில் அ.கோ.படைவீடு எனும் தலத்தலும், இரகுநாத சமுத்திரம் எனும் தலத்திலும் உள்ளன.

### கல்வெட்டுச் செய்திகள்

பல கல்வெட்டுக்கள் இங்குள்ளன. ஆனித்திருநாள் கொண்டாடவும், விழாக்கள் செய்யவும் விசயநகர மன்னர்களால் கொடைகள் வழுங்கப்பட்டுள்ளன. பூசை கைங்கர்யங்களுக்கு நிலதானம் வழுங்கப்பட்டமை, வைகாசி மாதம் திருவிழாவில் நாட்டியமாட நிலதானம் வழுங்கப்பட்டமை முதலிய விவரங்களையும் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

### பூசைகள்

நாள்தோறும் மூன்று கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசைவிவரம் |
|---|---|
| காலை 7.30 மணி | விஸ்வரூபம் |
| காலை 8.00 மணி | பிராதகால பூசை |
| இரவு 8.00 மணி | ஏகாந்தசேவை |

## விழாக்கள்

இத்திருக்கோயிலில் சித்திரை தமிழ்ப்புத்தாண்டு, வைகாசி கருடசேவை, ஆடிப்பூரம், ஆவணியில் உறியடி உற்சவம், புரட்டாசி சனி உற்சவம், கார்த்திகை தீபம், வைகுண்ட ஏகாதசி, அனுமன் ஜெயந்தி, காணும் பொங்கல், பங்குனியில் இராம நவமி பிரம்மோற்சவம் ஆகிய திருவிழாக்கள் கொண்டாடப் படுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 12.00 மணிவரை.

மாலை 4.00 மணிமுதல் 8.00 மணிவரை.

## தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்,**

**அருள்மிகு இராமச்சந்திர பெருமாள் திருக்கோயில்**
**நெடுங்குணம், வந்தவாசி வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**
**ஆய்வாளர் அலைபேசி எண் : 96557 77628.**





**அருள்மிகு பாண்டுரங்கசுவாமி திருக்கோயில்,**
தென்னாங்கூர், வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

இறைவன் : அருள்மிகு பாண்டுரங்கசுவாமி

இறைவி : அருள்மிகு ருக்குமாயி தேவி

## அமைவிடம்

இத்தலம் வந்தவாசியிலிருந்து காஞ்சிபுரம் செல்லும் சாலையில் சுமார் 6 கி.மீ. தொலைவிலுள்ள தென்னாங்கூர் என்னும் கிராமத்தில் அமைந்துள்ளது. வந்தவாசியிலிருந்து பேருந்து வசதியுள்ளது.

## தங்கும் வசதி

தங்குவதற்கு இத்திருக்கோயிலுக்கு சொந்தமான விடுதிகள் தென்னாங்கூரில் உள்ளன.



### திருத்தல சிறப்பு

வடக்கே அமைந்துள்ள பூரி ஜெகன்னாதர் ஆலய அமைப்பில் விளங்கும் இத்திருக் கோயிலின் கருவறையில் அருள் மிகு பாண்டு ரங்கசுவாமி ருக்குமாயி தேவியுடன் எழுந்தருளியுள்ளார். தினமும் ஒரு அலங் காரத்தில் அவர் காட்சி யருளுகின்றார். இராசகோபுரம் தென்னாட்டு பணியில் அமைக்கப்பட்டுள்ளது.

### பூசை கள்

இங்கு தினந்தோறும் நான்கு கால பூசைகள் நடைபெறு கின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணிமுதல் 12.00 மணிவரை.

மாலை 4.00 மணிமுதல் 7.30 மணிவரை.


**தொடர்பு முகவரி**

**ஆய்வர்,**

இந்து சமய அறநிலையத்துறை,
வந்தவாசி,
திருவண்ணாமலை மாவட்டம்.

**அலைபேசி எண் : 96264 29414.**


## அருகில் உள்ள தலங்கள்

வெண்குன்றம், வந்தவாசி.



### தீபாவளி

தீபம் +அவளி=தீபாவளி. தீபங்களின் வரிசை என்று பொருள். கண்ணபிரான், நரகாசுரனை வதஞ்செய்த ஐப்பசி தேய்பிறை சதுர்த்தசி நாள் தீபாவளியாகக் கொண்டாடப்படுகின்றது.



**அருள்மிகு தம்பேசுவரர் திருக்கோயில்,**

சீயமங்கலம், வந்தவாசி வட்டம்

திருவண்ணாமலை மாவட்டம்

.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு தம்பேசுவரர் |
| தல விருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

வந்தவாசியிலிருந்து சுமார் 20 கி.மீ. தொவைில் உள்ள தேசூர் எனும் கிராமத்தின் வழியாகச் சென்று அங்கிருந்து தெற்காக சுமார் 4 கி.மீ. தொலைவில் உள்ள சீயமங்கலம் கிராமத்தினை அடையலாம். வந்தவாசியிலிருந்து குறிப்பிட்ட நேரத்தில் நகரப்பேருந்து வசதியுள்ளது.

## தங்கும் வசதி

வந்தவாசி

## திருத்தல சிறப்பு

பெரிய குகைக்கோயிலாகக் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் என்ற அமைப்புடன் விளங்கும் இத்தலம். தொல்லியல் துறையால் பராமரிக்கப்படுகிறது. மேற்கு நோக்கிய கருவறையில் சதுர வடிவ ஆவுடையாரில் இலிங்கத் திருமேனி கொண்டு சுயம்பு ரூபமாய் தம்பேசுவரர் எழுந்தருளியுள்ளார். இவர் பிருகு முனிவர், அகத்தியர் முதலானோருக்குக் காட்சியளித்த சிறப்புக்குரியவர்.

கருவறைக்கு வெளியே துவார பாலகர்களாக இயமனும், சித்திரகுப்தனும் உள்ளமை இத்திருக்கோயிலுக்கே உரிய சிறப்பாகும். அருகே ஒரு தூணிலுள்ள ஆடல் வல்லானின் திருவுருவம் சிறப்பான கோலமாகும். மிகப்பெரிய பாறையைக் குடைந்து கீழே கருவறையும், மேலே பாறையின் மீது விமானமும் அமைக்கப்பட்டுள்ளன. பழங்கால கல்வெட்டுக்கள் இங்கு உள்ளன. அவனிபாஜனப் பல்லவேஸ்வரம் என்னும் இக்கோவில் லளிதாங்குரன் என்னும் காவலனால் குடையப்பட்டது என்னும் கல்வெட்டு ஒரு தூணில் காணப்படுகிறது. அவனிபாஜனன், லளிதாங்குரன் என்ற பெயர்கள் முதலாம் மகேந்திரவர்ம பல்லவ மன்னனின் விருது பெயர்களாகும். எனவே இக்குடைவரைக் கோயிலைக் கட்டியவன் முதலாம் மகேந்திரவர்மன் என்பது அறியப்படுகிறது. இத்தலத்தைத் தூணாண்டார் கோவில் என்று குலோத்துங்கசோழன் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

இங்கு தினந்தோறும் ஒரு கால பூசைகள் நடைபெறுகிறது. பிரதோசத்தன்று பெருமளவில் பக்தர்கள் வந்திருந்து அபிசேகம் செய்து வழிபடுகின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 10.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை.

### தொடர்பு முகவரி

தக்கார் / ஆய்வர்,
அருள்மிகு தம்பேசுவரர் திருக்கோயில்
சீயமங்கலம், வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்
ஆய்வாளர் அலைபேசி எண் : 96264 29414.





**அருள்மிகு அரங்கநாத பெருமாள்**
**திருக்கோயில்,**
திருமால்பாடி, வந்தவாசி வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு அரங்கநாத பெருமாள் |
| இறைவி | : | அருள்மிகு அரங்கநாயகி தாயார் |
| தீர்த்தம் | : | சுக பிரம்ம தீர்த்தம் |
| ஆகமம் | : | வைகானசம் |

## அமைவிடம்

வந்தவாசியிலிருந்து சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ள தேசூர் எனும் கிராமத்தின் வழியாகச் சென்று அங்கிருந்து தெற்காகச் சுமார் 6 கி.மீ. தொலைவில் உள்ள திருமால்பாடி எனும் கிராமத்தினை அடையலாம். அங்குள்ள குன்றின்மீது அரங்கநாத பெருமாள் ஆலயம் அமைந்துள்ளது. வந்தவாசியிலிருந்து குறிப்பிட்ட நேரத்தில் நகரப்பேருந்து வசதியுள்ளது.

## தங்கும் வசதி

வந்தவாசி

## திருத்தல சிறப்பு

மலைமீது அமைந்துள்ள திருக்கோயிலின் கருவறையினுள் அருள்மிகு அரங்கநாத பெருமாள் பாம்பணையில் பள்ளி கொண்டு

காட்சியருளுகின்றார். அவரது திருமுகமருகே ஸ்ரீ தேவியும், திருவடியருகே பூதேவியும் உள்ளனர். அருகில் சுகப்பிரம்மரிஷி, பிரகலாதன் ஆகியோர் உள்ளனர். இப்பெருமாள் சுகப்பிரம்ம ரிஷிக்குக் காட்சியருளிய சிறப்புக்குரியவர் இங்குள்ள தாயார் அரங்கநாயகி எனும் திருப்பெயருடன் தனிக்கோயில் கொண்டு விளங்குகின்றாள். ஆண்டாள் சன்னதி, அனுமன் சன்னதி ஆகியன உள்ளன. கருவறை சுவற்றில் கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன.

### தனிச் சிறப்பு

அரசுப் பணியில் உள்ளோருக்குப் பணியிடமாற்றம் அளிக்கும் தலமாக இத்திருக்கோயில் விளங்குகின்றது. இங்கு வந்து அரங்கநாத பெருமாளை வழிபட்டுப் பணியிட மாற்றம் பெற்றோர் பலராவர்.

### பூசைகள் மற்றும் விழாக்கள்

இங்கு தினந்தோறும் இரண்டு கால பூசைகள் நடைபெறு கின்றன. தமிழ்ப்புத்தாண்டு, சித்திரைப் பௌர்ணமி, வைகாசி கருடசேவை, ஆடிப்பூரம், கார்த்திகை தீபம், வைகுண்ட ஏகாதசி ஆகிய திருவிழாக்கள் நடைபெறுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 11.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்,**

**அருள்மிகு அரங்கநாத பெருமாள் திருக்கோயில்**
**திருமால்பாடி, வந்தவாசி வட்டம்,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**

**அலைபேசி எண் : 99522 00792.**




## அருகில் உள்ள தலங்கள்

சீயமங்கலம், மடம்.



திருவோத்தூர்,

**அருள்மிகு வேதபுரீசுவரர் திருக்கோயில்,**

செய்யாறு,

திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு வேதபுரீசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு பாலகுஜாம்பாள்,இளமுலைநாயகி |
| தீர்த்தம் | : | மானச சரச தீர்த்தம் |
| தல விருட்சம் | : | பனைமரம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

திருவோத்தூர், திருவத்தூர், திருவத்திபுரம், மறைசைப்பதி, செய்யாறு என்றெல்லாம் வழங்கப்படும் இத்தலம் செய்யாற்றின் வடகரையில் அமைந்துள்ள திருஞானசம்பந்தப் பெருமானால் பாடப்பெற்ற தொண்டைநாட்டுத் திருத்தலமாகும். இத்தலத்திற்கு வந்தவாசி, ஆரணி, போளூர், திருவண்ணாமலை, காஞ்சிபுரம், வேலூர், சென்னை ஆகிய ஊர்களிலிருந்து பேருந்து வசதியுள்ளது. வந்தவாசியிலிருந்து 20 கி.மீ. தொலைவிலும், ஆரணியிலிருந்து 36 கி.மீ. தொலைவிலும், காஞ்சிபுரத்திலிருந்து 30 கி.மீ. தொலைவிலும் செய்யாறு நகரம் உள்ளது.

## தங்கும் வசதி

செய்யாறில் தங்குவதற்குத் தனியார் விடுதிகள் உள்ளன.

## திருத்தல சிறப்பு

ஆண்பனை குலை ஈனுமாறு திருஞானசம்பந்தர் அற்புதம் புரிந்த தலம் இதுவாகும். இங்கு தலவிருட்சமாகப் பனைமரம் உள்ளது. ஆண்பனையாகிய இம்மரத்தில் ஆண்டுதோறும் காய்க்கும் பழத்தினை உண்டால் குழந்தைப்பேறு உண்டாகும் என்பது பக்தர்களின் அனுபவ பூர்வ உண்மையாகும். சுமார் ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட இத்தலத்தின் கருவறையில் சதுர வடிவான ஆவுடையார்மீது உயர்ந்த இலிங்கத்திருமேனி கொண்டு கிழக்கு நோக்கி அருள்மிகு வேதபுரீசுவரப் பெருமாள் எழுந்தருளியுள்ளார். இறைவி பாலகுசாம்பாள் (இளமுலைநாயகி) வெளிப்பிரகாரத்தில் தெற்கு நோக்கி தனிக்கோயில் கொண்டு அருள்பாலிக்கின்றாள். அம்பாள் சன்னதிக்கு எதிரில் ஐதீகமான பனைமரம், அதனடியில் சிவலிங்கம், அருகில் திருஞானசம்பந்தர் ஆகிய சிலாரூபங்கள் உள்ளன. பஞ்சபூத லிங்கங்கள் தனித்தனி சந்நிதிகளில் வடக்குப் பிரகாரத்தில் உள்ளன.

## நாகலிங்கம்

இங்குள்ள நாகலிங்கம் அற்புத திருவுருவம் கொண்டதாகும். இது நாகதோசத்திற்குப் பரிகாரத்தலமாக உள்ளது. சனிக்கிழமை தோறும் காலை வேளையில் நூற்றுக்கணக்கானோர் நாகலிங்கத்திற்கு அபிசேகம் செய்து திருமண பாக்கியம் பெறுகின்றனர்.



## புராண வரலாறு

புராண காலத்தில் தேவர்களும், முனிவர்களும் வேதங்களின் பொருளைத் தங்களுக்குச் சொல்லியருளுமாறு சிவபெருமானிடம் வேண்டிட, அவர் செய்யாற்றின் கரையில் சிவலிங்க பூசனைச் செய்து அவற்றைப் பெறுமாறு அருளிச்

செய்தார். அத் திருவருளின்படி அவர்கள் செய்யாற்றின் வடகரையினை அடைந்து அங்கு சுயம்பு லிங்கரூபமாய் எழுந்தருளியுள்ள பெருமானை வில்வத்தால் அர்சித்துப் பூசித்தனர். அந்த இலிங்கத்திலிருந்து பெருமான் தோன்றி தேவங்களின் பொருளை ஓதுவித்தார். வேதங்களை ஓதுவித்ததால் இத்தலம் ஓத்தூர் (ஓத்து-வேதம்) என்றும் வேதபுரம் என்றும் வழங்கப்படுகின்றது. இப்பெருமானை வழிபட்டு திருமால் சக்ராயுதம் பெற்றார். சூரியன் வழிபட்டு ஆயிரம் கிரணங்களுடன் கூடிய ஒளியினைப் பெற்றான் விநாயகர் வழிபட்டு பாச, அங்குசம் பெற்றார். சந்திரன் வழிபட்டு நட்சத்திரங்களுக்கெல்லாம் தலைமைப் பதவி பெற்றான். பிரமன், இந்திரன் ஆகியோர் வழிபட்டுச் சாபம் நீங்கப் பெற்றனர். தொண்டைமான் சக்கரவர்த்தி வழிபட்டுப் போரில் வெற்றி பெற்றான். இவ்வாறு பல புராண வரலாறுகள் இத்தலத்திற்கு உள்ளன.

## தொண்டைமான் வழிபாடு

தொண்டைமான் சக்ரவர்த்தி, விசுவாவசு என்னும் மன்னனின் வலிமைக்கு ஆற்றாது ஒரு சமயம் வேதபுரீசுவரரைப் பணிந்தான். அவனது முன்பாக பெருமான் தோன்றி, தனது சேனைகளை அவனுக்கு அளித்து அவற்றைக் கொண்டு விசுவாவசுவுடன் போரிட்டு இழந்த அரசை எய்துமாறு திருவருள் புரிந்தார். அதைக் கேட்ட மன்னன் எங்ஙனம் போரிடுவேன் என்று பெருமானிடம் வேண்டினான். நந்தி உனக்கு படைத்துணையாக வருவான்; பயம் நீங்கிச் செல்க என்று பெருமான் கூறியருளினர். மன்னன் பெருமகிழ்வுற்று திருக் கோயிலை விட்டு வெளியே வந்து பார்க்கையில் அங்கே யிருந்த நந்தி பெருமானுக்கு எதிர்திசையாக கிழக்கு நோக்கித் திருப்பியிருந்தது. பின்னர் அவன் நந்திதேவரை வணங்கி நிற்கையில், நந்தீசர் தனது சிவகணங்களோடு சென்று விசுவாவசுவை போரில் வென்று அரசுரிமையினை மீட்டு அதனைத்



தொண்டைமானுக்கு அளித்தருளினார். இவ்வரலாற்றை உணர்த்தும் வண்ணம் நந்திதேவர் பெருமானுக்கு எதிர்த்திசையில் இராசகோபுரத்தை நோக்கியவாறு உள்ளார்.

## திருஞானசம்பந்தர் ஆண்பனையைக் குலையீனச் செய்தல்

அக்காலத்தில் செய்யாற்றின் தென்கரையில் வாழ்ந்து வந்த சமணர்களின் ஆதிக்கம் ஓங்கியிருந்தது. அவ்வமயம் ஞானசம்பந்தப் பெருமான் திருவோத்தூரை அடைந்து சமணர்களுடன் வாது செய்தார். அனல் வாதம், புனல்வாதம் ஆகியன நிகழ்த்தி சைவத்தை நிலை பெறச் செய்த அவரிடம் சமணர்கள், திருவோத்தூர் தலத்திலுள்ள ஆண்பனையைக் குலையீனச் செய்தல் வேண்டும் என்று சொல்லி, முதலில் தங்களது போதனை களை விளங்கும் வண்ணம் பாடினர். ஆண்பனையில் எவ்வித மாறுபாடும் தோன்றவில்லை. அதன் பின்னர் ஞானசம்பந்த பெருமான் பூத்தேர்ந்தாயன எனத் தொடங்கிப் பதிகம் பாடினார்.



குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும்பு கலியுண் ஞானசம்பந் தன்சொல்
விரும்பு வார்வினை வீடே.

ஆண் பனைகள் குலையீன்று பெண்பனைகளாக மாறின. அனைவரும் வியப்புற்றனர். சமணர்கள் தங்கள் சமயத்தை விடுத்து சைவத்திற்கு மாறினர். இவ்வாறு பல அற்புதங்களைக் கொண்டுள்ள தலமாகத் திருவோத்தூர் உள்ளது. திருநாவுக்கரசு



சுவாமிகளும் இத் தலத்தை அடைந்து திருத் தாண்டகம் முதலான சொல் மாலைகளைச் சாற்றியருளினார். ஆனால் அவர் அருளிச்செய்த பதிகங்கள் கிடைக்கப் பெறவில்லை. திருவோத் தூரைக் குறிக்கும் அவரது சேத்திரக் கோவை பதிகம் மட்டுமே உள்ளது. இத்தலத்தில் உள்ள முருகப் பெருமானுக்கு அருணகிரி நாதர் திருப்புகழ் அருளியுள்ளார். சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த அருட்பிரகாச வள்ளலாரும் இத்தலத்தைப் பணிந்துள்ளார். திருவோத்தூர் தலபுராணம் கருணாகர கவிராயரால் இயற்றப்பட்டு பல்லவபுரம் சோணாசல முதலியாரால் உரை எழுதப்பட்டுள்ளது.

### கல்வெட்டுச் செய்திகள்

இத்தலத்தில் 29 கல்வெட்டுக்கள் தொல்லியல் துறையால் அடையாளமிடப்பட்டுள்ளன. இராசாதிராசசோழன் குலோத் துங்கன், இராஜேந்திரன், விக்கிரமச்சோழன், சுந்தர பாண்டியன், வீரபாண்டியன், ராஷ்டிரகூட கன்னரதேவன் ஆகிய மன்னர் களின் கல்வெட்டுக்கள் இங்குள்ளன. அவை இறைவன் திருப் பெயரை ஓத்தூருடைய நாயனார் என்று தெரிவிக்கின்றன. கோவில் வழிபாட்டிற்கும், விளக்கெரிப்பதற்கும், நிவேதனத் திற்கும், அர்ச்சகர்க்கும் நிலதானமளித்த செய்திகளையும், பூந்தோட்டத்திற்கு நிலமளித்த செய்திகளையும் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. குறிப்பாக சித்திரைத் திருநாள் வழிபாட்டிற்குத் தானம் வழங்கப்பட்ட செய்தியை ஒரு கல்வெட்டு குறிக்கின்றது.

## பூசைகள்

நாள்தோறும் நான்கு கால பூசைகள் செய்யப்படுகின்றன.

| நேரம் | பூசைவிவரம் |
|---|---|
| காலை 6.00 மணி | காலசந்தி பூசை |
| முற்பகல் 11.30 மணி | உச்சிகால பூசை |
| மாலை 5.00 மணி | சாயரட்சை பூசை |
| இரவு 8.00 மணி | அர்த்தசாம பூசை |

## விழாக்கள்

பிரதோச நாளில் இத்திருக்கோயிலுக்கு ஆயிரக்கணக்கில் பக்தர்கள் வருகின்றனர். சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, வைகாசி விசாகம், ஆனித்திருமஞ்சனம், நவராத்திரி, கந்த சஷ்டி, அன்னாபிசேகம், கார்த்திகை தீபம் , திருவாதிரை, இரதசப்தமி பிரம்மோற்சவம், மாசியில் தெப்போற்சவம், பங்குனி உத்திரம் முதலான உற்சவங்கள் நடைபெறுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணிமுதல் 12.00 மணிவரை.

மாலை 4.00 மணிமுதல் 8.30 மணிவரை.

**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்,**

**அருள்மிகு வேதபுரீசுவரர் திருக்கோயில்**
**திருவத்திபுரம்-செய்யாறு,**
**திருவண்ணாமலை மாவட்டம்.**

**அலைபேசி எண் : 73058 86700**

## அருகில் உள்ள தலங்கள்

செய்யாற்றை வென்றான், சுமங்கலி.







**அருள்மிகு பட்சீசுவரர் திருக்கோயில்,**
செய்யாறு,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு பட்சீசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு பார்வதியம்மன் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

### அமைவிடம்

இத்தலம் செய்யாறு நகரின் மத்தியில் பேருந்து நிலையத்திற்கு அருகாமையில் அமைந்துள்ளது.

### தங்கும் வசதி

செய்யாறு.

### திருத்தல சிறப்பு

கிழக்கு நோக்கிய இராசகோபுரத்துடன் திகழும் இத்திருக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம்,

உட்பிரகாரம் என்ற அமைப்புடன் திகழ்கின்றது. கடன் சிவலிங்க பூசை செய்து பேறுபெற்ற தலமாகையால் இறைவன் பட்சீசுவரர் என வழங்கப்படுகின்றார்.

## பூசை மற்றும் விழாக்கள்

இத்திருக்கோயிலில் நான்கு கால பூசைகள் நடைபெறுகின்றன. பிரதோசம், சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டு, வைகாசி பிரம்மோற்சவம், கந்தசஷ்டி, அன்னாபிசேகம், கார்த்திகை தீபம், திருவாதிரை, பங்குனி உத்திரம் முதலான உற்சவங்கள் கொண்டாடப்படுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணிமுதல் 12.00 மணிவரை.

மாலை 4.00 மணிமுதல் 8.30 மணிவரை.

**தொடர்பு முகவரி**

**தக்கார் / ஆய்வர்,**

அருள்மிகு பட்சீசுவரர் திருக்கோயில்,

செய்யாறு,

திருவண்ணாமலை மாவட்டம்.

**ஆய்வாளர் அலைபேசி எண் : 90038 04180.**



## பிரம்மோற்சவம்

பிரமன் காஞ்சீபுரத்தில் திருமாலைக் குறித்து யாகஞ்செய்து அவரது திருக்காட்சி வாய்க்கப்பெற்று உற்சவங்கள் செய்தான். பிரமனே முன்னின்று உற்சவம் செய்ததால் பிரம்மோற்சவம் என வழங்கப்படுகிறது. பிரமனுக்குக் காட்சியளித்த திருமால் தேவராஜப் பெருமாள் என்று வழங்கப் படுகின்றார்.



**அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்,**
செய்யாற்றைவென்றான், செய்யாறு வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு அகத்தீசுவரர் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| தீர்த்தம் | : | வில்வம் |

## அமைவிடம்

இத்தலம் செய்யாறு நகரின் திருவோத்தூர் தலத்திலிருந்து தென்மேற்கில் 4 கி.மீ. தொலைவில் ஆவணியாபுரம் செல்லும் சாலையில் செய்யாற்றைவென்றான் எனும் கிராமத்தில் அமைந்துள்ளது. செய்யாறிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

செய்யாறு.

## திருத்தல சிறப்பு

சுமார் 1500 ஆண்டுகட்கு முன்பு திருவோத்தூரில் சமணர்கள் தங்களது சமயத்தைப் பரப்பி வந்தனர். அவ்வமயம் திருஞானசம்பந்தர் சமணர்களுடன் அனல் வாதம், புனல்வாதம் செய்தார். சமணர்களும், சம்பந்தர் பெருமானும் தங்களது பதிகங்கள் அடங்கிய ஏட்டினை செய்யாற்றில் விட்டனர். சமணர்களின் ஏடு ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டது. சம்பந்தரது பதிகம் தாங்கிய ஏடு வெள்ளத்தினை எதிர்த்துச் சென்று முன்னர் அகத்தியர் வந்து வழிபட்ட அகத்தீசர் எனும் திருக்கோயிலுக்கருகே கரை ஒதுங்கியது. ஏடு கரை ஒதுங்கிய இடம்



செய்யாற்றைவென்றான் என்ற பெயருடன் அழைக்கப் படுகின்றது. இந் நிகழ்வை கருணாகரக் கவிராயர் திரு வோத்தூர் தல புராணத்தில் குறித்துள்ளார்.

செய்யாற்றை வென்றான் என்பதற்கு வேறொரு வரலாறும் சொல்லப்படுகிறது. சுமார் 700 ஆண்டுகட்கு முன்பு தென்திசை கோயில்களைச் சூறையாட வந்த மாலிக்காபூர் எனும் இசுலாமிய மன்னனின் படைகளுக்கும், ஜடாவர்ம வீர பாண்டிய மன்னனின் சார்பாக சம்புவராய மன்னனுக்கும் போர் ஒன்று இங்கு நடைபெற்றதாகவும் அப்போரில் சம்புன்வராயன் வென்றதால் அவனுக்குச் செய்யாற்றை வென்றான் எனும் பட்டப்பெயர் சூட்டப்பட்டதாகவும் வழங்குகின்றனர். அவன் இவ்வூரில் அந்தணர்களை குடியமர்த்தி ஒரு சதுர்வேதி மங்கலத்தை அமைத்து அதற்குச் செய்யாற்றை வென்றான் சதுர்வேதி மங்கலம் என்று பெயரிட்டான். மேலும் அங்கு வேதபாராயணம் நடைபெற 150 குழிநிலம் தானமாக அளித்தான் என்று கல்வெட்டு தெரிவிக்கின்றது.

## பூசை மற்றும் திரு விழாக்கள்

இங்கு தினமும் இரண்டு கால பூசைகள் நடைபெறுகின்றன. பிரதோசம், கார்த்திகை தீபம், மகாசிவராத்திரி ஆகிய நாட்களில் பெருமளவில் பக்தர்கள் வருகின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 11.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 7.30 மணிவரை.

## தொடர்பு முகவரி

**தக்கார் / ஆய்வர்,**

**அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்,**
**செய்யாற்றைவென்றான், செய்யாறு வட்டம்,**

**திருவண்ணாமலை மாவட்டம்.**

**ஆய்வாளர் அலைபேசி எண் : 90038 04180.**

## அருகில் உள்ள தலங்கள்

செய்யாறு, ஆவணியாபுரம்.



## விசுவம்

விஷூ என்பதற்குப் பகலும் இரவும் சமமான நாள் என்று பொருள். இது சித்திரை, ஐப்பசி ஆகிய மாதங்களில் வருகின்றது. அம்மாதங்களின் முதல் நாட்கள் சித்திரை விசு என்றும் ஐப்பசி விசு என்றும் வழங்கப்படுகின்றன. இப்புண்ணிய நாட்களைப் பற்றிப் பல கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இந்நாட்களில் பகலவனின் இயக்கம் தமிழகத்திற்கு நேர் திசையில் இருக்கும்.

## பூசையில் தவிர்க்க வேண்டியவை

சிவபெருமானைத் தாழம்பூவினால் அர்ச்சித்தல் கூடாது. திருமாலை ஊமத்தையும், எருக்கம்பூவும் கொண்டு அர்ச்சித்தலாகாது. விநாயகரைத் துளசியாலும், சூரியனை வில்வத்தாலும், இலட்சுமியைத் தும்பைப் பூவாலும், சரசுவதியைப் பவள மல்லியாலும் அர்ச்சித்தல் கூடாது.



**அருள்மிகு சத்தியநாதேசுவரர் திருக்கோயில்,**
சுமங்கலி, செய்யாறு வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு சத்தியநாதேசுவரர் |
| இறைவன் | : | சுமங்கலி நாயகி |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

இத்தலம் செய்யாறிலிருந்து சுமார் 15 கி.மீ. தொலைவில் உள்ள சுமங்கலி எனும் கிராமத்தில் அமைந்துள்ளது. செய்யாறிலிருந்து நகரப் பேருந்து வசதியுள்ளது.

## தங்கும் வசதி

செய்யாறு.

## புராண வரலாறு

அக்காலத்தில் நீதிநெறி தவறாது அரசாண்ட சத்தியவான் எனும் மன்னன் சாவித்திரி எனும் அரசகுமாரியைத் தெய்வமணம் செய்து கொண்டு வாழ்ந்து வருகையில் விதிவசத்தால் அவன் மாண்டான். செய்வதறியாது தவித்த பத்தினிப் பெண் சாவித்திரி, சத்தியநாதேசுவரரைப் பூசித்து தனது கணவனை உயிர்பித்துத் தருமாறு வேண்டித் திருவருள் பெற்றாள்

பின்னர் சத்தியவானின் பிராணனை இயமன் கொண்டு செல்லும்போது தானும் பின்தொடர்ந்து சென்று இயமனை வேண்டினாள். இயமன் அளவில்லாத செல்வங்களைத் தருவதாகவும், அரசபோகங்களை அளிப்பதாகவும், இன்னும் வேண்டுவனவற்றை யெல்லாம் அளிப்பதாகவும் கூறினான். அதனையெல்லாம் மறுத்து சாவித்திரி மழலைப்பெறு அருளுதல் வேண்டும் என்று வேண்ட, இயமனும் தன்னையறியாமல் வரமருளினான். சாவித்திரி எண்ணிய இலட்சியம் ஈடேறப்பெற்றவளாய் மழலைச் செல்வத்திற்குண்டான தனது கணவனை உயிர்ப்பித்தருளுதல் வேண்டும் என்ற வேண்டி நிற்க, முன்பே வரங்கொடுத்த காரணத்தால் மறுக்காது இயமனும், சத்தியவானை உயிர்ப்பித்தெழச் செய்தான். இவ்வாறு பத்தினிப் பெண்ணுக்குத் திருவருள்செய்து அவள் சுமங்கலியாக வாழுமாறு அருள்பாலித்த சிறப்புக்குரியவர் சத்தியநாதேசுவரப் பெருமான் ஆவர். அதனால் அப்பெருமான் எழுந்தருளியுள்ள ஊருக்குச் சுமங்கலி எனும் திருப்பெயர் வழங்கப்படுகின்றது.

## பரிகார சிறப்பு

நாகதோஷத்திற்குப் பரிகாரத்தலமாகவும், திருமணபாக்கியம் அருளும் தலமாகவும் மக்கட்பேறு அருளும் தலமாகவும் இத்திருக்கோயில் உள்ளது.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

இங்கு தினந்தோறும் ஒரு கால பூசை நடைபெறுகிறது. பிரதோசத்தன்று பெருமளவில் பக்தர்கள் வந்திருந்து அபிசேகம் செய்து வழிபடுகின்றனர்.



## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 10.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை.


**தொடர்பு முகவரி**

**தக்கார் / ஆய்வர்,**

**அருள்மிகு சத்தியநாதேசுவரர் திருக்கோயில்,**
**சுமங்கலி, செய்யாறு வட்டம்,**

**திருவண்ணாமலை மாவட்டம்.**

**ஆய்வாளர் அலைபேசி எண் : 90038 04180.**




## மாதபுட்பம்

பதினாறாம் நூற்றாண்டில் தருமை ஆதீனத்தைச் சேர்ந்த கமலை ஞானப்பிரகாசர் என்பவர், ஒவ்வொரு மாதமும் சிவபெருமானுக்கு எந்தெந்த மலர்களால் அர்ச்சிக்க வேண்டும் என்பது குறித்து, தனது புட்பவிதி எனும் நூலில் அருளிச்செய்துள்ளார். அப்பாடல் வருமாறு,

மெத்திய பலாசு புன்னை வெள்ளெருக் கலரிப் போது
கொத்தலர் சண்பகப் பூக்கொன்றை யேதும்பை செய்ய
கத்தரி பட்டி கஞ்சங் காவி மல்லிகையீ ராறுஞ்
சித்திரை முதலாக் கொள்க சிறந் திடுமாத புட்பம்.

சித்திரைக்கு முருக்கு, வைகாசிக்குப் புன்னை, ஆனிக்கு வெள்ளெருக்கு, ஆடிக்கு அலரி, ஆவணிக்குச் சண்பகம், புரட்டாசிக்குக் கொன்றை, ஐப்பசிக்குத் தும்பை, கார்த்திகைக்குக் கத்திரி, மார்கழிக்குப் பட்டி, தைக்குத் தாமரை, மாசிக்குக் கருங்குவனை, பங்குனிக்கு மல்லிகை சிறப்பு மலர்களாகும். (பலாசு – முருக்கு)

சித்திரைத் திங்களை முதலாவதாகக் கொண்டு ஒவ்வொரு மாத புட்பங்களையும் அவர் குறிப்பிட்டுள்ளார்.



**அருள்மிகு எல்லையம்மன் திருக்கோயில்,**
சேராம்பட்டு, செய்யாறு வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவி | : | அருள்மிகு எல்லையம்மன் எனும் ரேணுகாம்பாள் |
| தலவிருட்சம் | : | வேம்பு |

## அமைவிடம்

இத்தலம் செய்யாறு நகரிலிருந்து ஆரணி செல்லும் வழியில் 15 கி.மீ. தொலைவில் உள்ள சேராம்பட்டு எனும் கிராமத்தில் அமைந்துள்ளது. செய்யாறிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

செய்யாறு.

## திருத்தல சிறப்பு

இத்திருக்கோயிலில் எல்லையம்மன் எனும் திருப்பெயருடன் அம்பாள் எழுந்தருளியுள்ளாள். சுற்றிலும் உள்ள கிராமங்களுக்குக் குலதெய்வக் கோயிலாக இத்தலம் உள்ளது. முடிகாணிக்கை செலுத்துதல், காது குத்தல், வேப்பஞ்சேலை செலுத்துதல், பொங்கலிடுதல் முதலான நேர்த்திக்கடன்கள் இங்கு செலுத்தப்படுகின்றன. விரும்பியவற்றை அளிக்கும் தெய்வமாக எல்லையம்மன் விளங்குகின்றாள்.

## பூசை மற்றும் விழாக்கள்

இத்திருக்கோயிலில் இரண்டு கால பூசைகள் நடைபெறுகின்றன. ஆடி மாதம் வெள்ளிக்கிழமைகளில் உற்சவங்கள் நடைபெறுகின்றன. காணும் பொங்கல் அன்று பெருந்திருவிழா கொண்டாடப்படுகிறது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 12.00 மணிவரை.

மாலை 4.00 மணிமுதல் 7.00 மணிவரை.

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்,**

அருள்மிகு எல்லையம்மன் திருக்கோயில்,
சேராம்பட்டு, செய்யாறு வட்டம்,

திருவண்ணாமலை மாவட்டம்.

**அலைபேசி எண் : 73058 86700.**



### சாளக்கிராமம்



நேபாளத்தில் ஓடும் கண்டகி நதியில் சாளக்கிராம மூர்த்தங்கள் கிடைக் கின்றன. பிரியம்வதை என்ற பக்தை, தனக்கு மகனாகத் திருமால் பிறக்க வேண்டுமென்று வரம் கேட்டாள். அடுத்த பிறவியில் பிரியம்வதை, கண்டகி நதியாகத் தோன்றுவாள் என்றும், அந்த நதியில் தமது அம்சமாகப் பல்வேறு சாளக்கிராம மூர்த்தங்கள் தோன்றுமென்றும் திருமால் வரமளித்தார். அதன்படி கிடைப்பதே சாளக்கிராமங்கள். சாளக்கிராமக் கல்லின்மேல் அம்பு சின்னமிருந்தால் அது இராமச்சந்திர மூர்த்தம், மீன் இருந்தால் மச்ச மூர்த்தம், ஆமை இருந்தால் கூர்ம மூர்த்தம், சிம்மம் இருந்தால் நரசிம்ம மூர்த்தம், இவ்வாறு 31 வகை மூர்த்தங்கள் உள்ளன என்று கூறப்படுகிறது. இத்தகைய சாளக்கிராம மூர்த்தங்களை மாலையாகக் கோர்த்து ஆலயங்களில் பெருமாளுக்குச் சார்த்தப்படுகிறது.




**அருள்மிகு பச்சையம்மன் திருக்கோயில்,**
முனுகப்பட்டு, செய்யாறு வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு மன்னார்சாமி |
| இறைவி | : | அருள்மிகு பச்சையம்மன் |
| தலவிருட்சம் | : | வேம்பு |
| ஆகமம் | : | சேயாறு, கமண்டல நாகநதி |

## அமைவிடம்

செய்யாறிலிருந்து ஆரணி செல்லும் வழியில் சுமார் 25 கி.மீ. தொலைவில் மாம்பாக்கம் எனும் கிராமம் உள்ளது. அங்கிருந்து தெற்காக 8 கி.மீ. தூரம் சென்றால் செய்யாற்றின் தென்கரையில் உள்ள முனுகப்பட்டு எனும் கிராமத்தினை அடையலாம். இக்கிராமத்தின் எல்லையில் ஆற்றங்கரையோரம் கிழக்கு திசை நோக்கி அருள்மிகு பச்சையம்மன் திருக்கோயில் அமைந்துள்ளது. செய்யாறு, ஆரணி ஆகிய ஊர்களிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

ஆரணி, செய்யாறு.

## திருத்தல சிறப்பு

பலருக்குக் குலதெய்வக் கோயிலாக இத்தலம் விளங்குகின்றது. ஆடி மாதம் முதல் 10 திங்கட்கிழமைகளில் ஆயிரக் கணக்கில் பக்தர்கள் வந்திருந்து நேர்த்திக்கடன்களைச் செலுத்துகின்றனர்.

அம்மாதத்தில் முடிகாணிக்கை செலுத்துவோர் எண்ணிக்கை மட்டும் பல்லாயிரத்தைத் தாண்டும், பொங்கலிடுதல், காதுகுத்தல், வேப்பஞ்சேலை செலுத்துதல் முதலான பிரார்த்தனைகள் பெருமளவில் நிறைவேற்றப்படுகின்றன. கருவறையில் அன்னை பச்சையம்மன் கருணை ததும்பும் விழிகளுடன் நின்ற கோலத்தில் கிழக்குத் திசை நோக்கி அருள்பாலிக்கின்றாள். அவளுக்குப் பின்புறமாக அமர்ந்த கோலத்தில் அன்னையின் சுதையுருவத் திருமேனியுள்ளது.

மகாமண்டபத்தில் அன்னையின் தோழிகளும், கிராம தேவதைகளும் உள்ளனர். எழிலான கற்கோயிலாக இத்தலம் உள்ளது. வெளியே பிரகாரத்தில் வாழ்முனி, செம்முனி, கருமுனி, முத்துமுனி, வேதமுனி, நாதமுனி, ஜடாமுனி, லாடமுனி முதலான காவல் தெய்வங்களின் சுதைரூபங்கள் கம்பீரமாக உள்ளன.

கருவறைக்குத் தென்புறம் அருள்மிகு மன்னார்சாமி தனிக்கோயில் கொண்டு கிழக்குத் திசை நோக்கி எழுந்தருளியுள்ளார். கருவறைக்கு வடபுறமுள்ள தனிக்கோயிலில் உற்சவ விக்கிரகங்கள் உள்ளன.

## புராண வரலாறு

கச்சியம்பதியில் அன்னை காமாட்சிதேவி இடப்பாகத் தையருளுமாறு திருவேகம்பப் பெருமானிடம் வேண்டினாள். அதனைத் திருவண்ணாமலைக்குச் சென்று பூசை செய்து பெற்றுக்கொள்ளுமாறு பெருமான் சொல்லியருளினர். அத்திருவருளின்படி காமாட்சிதேவி அருணையம்பதி நோக்கிச் செல்லும் வழியில் மாலை வேளையில் ஓரிடத்தில் வாழைப்பந்தல் அமைத்து அங்கு சிவபூசை செய்யவேண்டி அதற்கான நீரினைக் கொண்டு வருமாறு முருகப் பெருமானைப் பணித்தனள். அத்திருவாணைப்பாடி முருகன் செயாற்றை உண்டாக்கினன். அந்த ஆற்றில் நீர் செந்நிறமாக வந்ததால், பூசைக்கான நீரினைக் கொண்டுவருமாறு தேவி, விநாயகப் பெருமானையும் பணித்தனள். அவர் மேற்குத் திக்காகச் சென்று கமண்டல நாக நதியை கொணர்ந்தார். அதற்குள் பூசைக்கான நேரம் வந்துவிடவே காமாட்சிதேவி தனது கைப்பிரம்பினால் புவியைத் தட்டினாள். தட்டியவுடன் புவியிலிருந்து பீறிட்டுக்கொண்டு நீர் பெருகியது. அந்நதி பிரப்பம் நதி எனும் பெயர் பெற்றது. அதனைக் கொண்டு தேவி மணலால் இலிங்கம் ஒன்று தாபித்து வழிபட்டாள்.

முருகன், விநாயகன், காமாட்சிதேவி ஆகியோரால் உருவாக்கப்பட்ட மூன்று நதிகளும் அவ்விடத்து ஒன்றாக சங்கமித்து ஓடிற்று.

பின்னர் தேவி உயிர்களுக்கு அருள்செய்ய அவ்விடத்து பச்சையம்மன் எனும் திருப்பெயருடன் அர்ச்சாரூபமாய் கோயில்கொண்டாள் என்பது இத்தலத்தின் புராண வரலாறாகும். தேவி பூசித்த இலிங்கம் இத்தலத்திலிருந்து சற்று தொலைவில் அமைந்துள்ளது.

### பூசை மற்றும் விழாக்கள்

தினமும் மூன்று கால பூசைகள் நடைபெறும் இத்திருக் கோயிலில் ஆடி மாதம் திங்கட்கிழமைகளில் உற்சவங்கள் நடைபெறுகின்றன. வாரந்தோறும் ஞாயிறு, திங்கள் ஆகிய இரு தினங்களில் பெருமளவில் பக்தர்கள் வருகின்றனர். ஆடிப்பூரம், நவராத்திரி முதலான உற்சவங்கள் கொண்டாடப்படுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 1.00 மணிவரை.

மாலை 4.00 மணிமுதல் 7.00 மணிவரை.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்,
அருள்மிகு பச்சையம்மன் திருக்கோயில்,
முனுகப்பட்டு, செய்யாறு வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.
தொலைபேசி : 04182 244441.

## அருகில் உள்ள தலம்

ஆவணியாபுரம்





வன்பார்த்தான் பனங்காட்டூர்,

**அருள்மிகு தாளபுரீசுவரர் திருக்கோயில்,**
திருப்பனங்காடு, செய்யாறு வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | பனங்காட்டீசுவரர், தாளபுரீசுவரர் |
| இறைவி | : | அமிர்தவல்லி |
| தீர்த்தம் | : | சடாகங்கை |
| தலவிருட்சம் | : | பனைமரம் |
| ஆகமம் | : | காமிகம்<br>இத்தலம் அகத்திய முனிவர் வழிபட்டது. |
| இறைவன் | : | கிருபாநாதேசுவரர் |
| இறைவி | : | கிருபாநாயகி<br>இத்தலம் புலத்தியர் வழிபட்டது. |

## அமைவிடம்

இத்திருக்கோயில் செய்யாறிலிருந்து பெருங்கட்டூர் வழியாக காஞ்சிபுரம் செல்லும் சாலையில் செய்யாறிலிருந்து சுமார் 25 கி.மீ. தொலைவில் உள்ள திருப்பனங்காடு எனும் கிராமத்தில் அமைந்துள்ளது. செய்யாறிலிருந்தும், காஞ்சிபுரத்திலிருந்தும் பேருந்து வசதியுள்ளது.

## தங்கும் வசதி

செய்யாறு, காஞ்சிபுரம்

## திருத்தல சிறப்பு

இது சுந்தரரால் பாடல் பெற்ற தொண்டைநாட்டுத் தலமாகும். இத்தலம் தூங்கானை மாடவடிவில் உள்ள இரண்டு கருவறைகளைக் கொண்டு கிழக்கு திசைநோக்கி விளங்குகின்றது. இரண்டு கருவறையெதிரிலும் இரண்டு கொடி மரங்கள், இரண்டு நந்திகள் உள்ளன. அம்பாள் சன்னதிகள் தெற்கு நோக்கியுள்ளன. கோயிலுக்கு வெளியே பரந்துவிரிந்த மிகப்பெரிய திருக்குளம் ஒன்று உள்ளது. பக்தன் ஒருவனுக்கு திருவருள்புரியும் வகையில் சிவபெருமான் தனது சடைமுடியிலிருந்து துளிர்த்த நீர் திருக்குளமாக திகழ்வதால் இது சடாகங்கை என்று வழங்கப்படுகிறது.

ஊருக்குச் சற்று தொலைவில் ஊற்றுதீர்த்தம் உள்ளது. சுந்தரர்க்கு இறைவன் கட்டமுது அளித்தபோது அவர் தனது பாதத்தால் கிளறி உண்டாக்கிய தீர்த்தமே ஊற்றுதீர்த்தம் என்று வழங்கப்படுகிறது என்பர். இத்தலம் முன்பு மாட மாளிகைகள் ஓங்கி செல்வம் மல்கும் பதியாய்த் திகழ்ந்திருந்தது. இங்குள்ள பெருமான் அடியார் பெருமக்களின் அல்லல் அறுக்கும் அருமருந்தாய் உள்ளான் என்று சேக்கிழார் பெருமான் அருளியுள்ளார். தாலம் என்பது பனைமரத்தினைக் குறிக்கும். பனைமரங்கள் சூழ்ந்துள்ள இடத்தில் பெருமான் எழுந்தருளியுள்ளமையால் தாலபுரீசர் என வழங்கப்படுகின்றார்.

## புராண வரலாறு

அகத்தியர் தென்திசை நோக்கி செல்லும் வழியில் இத்தலம் அமைந்துள்ள பகுதியை கடக்குஞ்சமயம் அங்கு தவஞ்செய்து கொண்டிருந்த புலத்திய முனிவருக்குத் திருவருள் செய்து அங்கு சுயம்பு ரூபமாய் எழுந்தருளியுள்ள தாலபுரீச பெருமானை வழிபட்டார். அவ்வமயம் அருகிலிருந்த பனைமரத்திலிருந்து கோட்டை முனீசுவரர் பனைக்கனிகளை உதிரச் செய்ய, அகத்தியர் அவற்றையெடுத்துச் சென்று இறைவனுக்கு நிவேதனம் செய்து வழிபட்டார். அதனால் அம்மரத்திலிருந்து பனம்பழம் கிடைக்கும் காலங்களில் அவை சுவாமிக்கே அர்ப்பணிக்கப்படுகின்றன.

தாலபுரீசருக்கு அருகில் புலத்தியர் கிருபாநாதேசுவரர் எனும் பெயரால் இலிங்கம் ஒன்றினைப் பிரதிட்டைச் செய்து வழிபட்டார். சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூருக்குச் செல்லும் வழியில் இத்தலத்தை அடைந்து வழிபடுகையில் அவருக்குச் சிவபெருமான் கட்டமுது அளித்து திருவருள் செய்தார் என்பர்.

விடையின் மேல் வருவானை வேதத்தின் பொருளானை

அடையில் அன்புடையானை யாவர்க்கும் அறிவொன்னா

மடையில் வாளைகள் பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்

சடையிற் கங்கை தரித்தானைச் சாராதார் சார்வு என்னே.

-என்று சுந்தரமூர்த்தி நாயனார் பெருமானைப் பணிந்து பதிகம் பாடியருளிச் செய்தார்.

வல்லபை கணபதி, மீனாட்சி சொக்கநாதர், கஜலட்சுமி, முருகன், நடராசர் ஆகியோருக்குச் சந்நிதிகள் இங்கு உள்ளன. கோயிலுள் பக்கத்திற்கு ஒன்றாக இருபுறமும் இரு பனைமரங்கள் உள்ளன. ஒன்று ஆண்பனையாகவும், மற்றொன்று பெண்பனையாகவும் உள்ளது. பட்டினத்தடிகளின் திருவேகம்பர் திருவந்தாதியிலும், வடலூர் இராமலிங்கசுவாமிகளின் வாக்கிலும் இத்தலம் குறிக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டு செய்திகள்

சோழர், விசயநகர மன்னர்கள் ஆகியோரது கல்வெட்டுக்கள் இத்திருக்கோயிலில் உள்ளன. இறைவன் திருப்பெயரை திருப்பனங்காடுடைய நாயனார் என்றும், ஊரின் பெயரை காலியூர்க் கோட்டத்து கழுமலநாட்டுத் திருப்பனங்காடு என்றும் அவை குறிக்கின்றன. கோயிலின் முகப்பு வாயிலில் உள்ள ஒரு கல்வெட்டு தேசாந்திரிகளுக்கு அன்னதானம் செய்வதற்காக நிலதானம் வழங்கப்பட்டுள்ள செய்தியினை தெரிவிக்கின்றது.

## பூசை மற்றும் விழாக்கள்

தினமும் இரண்டு கால பூசைகள் நடைபெறுகின்றன. பிரதோசம், திருவாதிரை, மகாசிவராத்திரி ஆகிய நாட்களில் திரளான பக்தர்கள் வந்திருந்து வழிபடுகின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 12.00 மணிவரை.

மாலை 4.00 மணிமுதல் 7.30 மணிவரை.

### தொடர்பு முகவரி


**தக்கார் / ஆய்வர்,**<br>
**அருள்மிகு தாலபுரீசுவரர் திருக்கோயில்,**<br>
**திருப்பனங்காடு, செய்யாறு வட்டம்,**<br>
**திருவண்ணாமலை மாவட்டம்**<br>
**ஆய்வாளர் அலைபேசி எண் : 90038 04180.**


## அருகில் உள்ள தலம்

அழிவிடைதாங்கி.



### வைணவாகமங்கள்

வைணவாகமங்கள் பாஞ்சராத்ரம், வைகானஸம் என இருவகைப்படும். பாஞ்சராத்ரம் பல ரிஷிகளின் மூலமாகவும், வைகானஸம் விகநசர் என்ற மகரிஷியின் மூலமாகவும் உபதேசிக்கப்பட்டன. ஒருயாகத்தின் இடையில் ஐந்து இரவுகளில் பகவானால் உபதேசிக் கப்பட்டதால் பாஞ்சராத்ரம் எனப்பெயர் பெற்றது எனவும் கூறுவர்.

### அன்னதானமளிக்கச் சிறந்த நாள்

அமாவாசை நாளில் அன்னதானம் அளித்தால் அதிகப் புண்ணியம் கிடைக்கும். அமாவாசையில் ஒருவனுக்கு அன்னமளித்தால் அப்போது முதல் 15 நாட்களுக்கு அன்னமளித்த பலன் ஒரே நாளில் கிடைக்கும்.



**அருள்மிகு வாலீசுவரர் திருக்கோயில்,**
குரங்கணில்முட்டம், செய்யாறு வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | வாலீசுவரர், கொய்யாமலைநாதர் |
| இறைவி | : | இறையார் வளையம்மை |
| தீர்த்தம் | : | காக்கை மடு, காக்கை தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | இலந்தை |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

வந்தவாசி, செய்யாறு ஆகிய ஊர்களிலிருந்து காஞ்சிபுரம் செல்லும் சாலையில் உள்ள தூசி எனும் கிராமத்திற்குக் கிழக்குப் புறமாக 4 கி.மீ. தொலைவில் குரங்கணில் முட்டம் எனும் கிராமத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தூசியிலிருந்து காஞ்சிபுரம் 8 கி.மீ. தொலைவில் உள்ளது. பேருந்து வசதியுள்ளது. இது திருஞானசம்பந்தரால் பாடல்பெற்ற தொண்டை நாட்டுத் தலமாகும்.

## தங்கும் வசதி

காஞ்சிபுரம்

## புராண வரலாறு

கருவறையில் இறைவன் வாலீசுவரர் எனும் திருப்பெயர் கொண்டு மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். புராண காலத்தில் ஒரு சாபத்தினால் அணில் உருவம் பெற்ற இந்திரனும், காகம் உருவம் பெற்ற இயமனும் சாப நீக்கம் வேண்டி இத்தலத்திற்கு வந்திருந்து சுயம்பு ரூபமாய் எழுந்தருளியுள்ள இலிங்க மூர்த்தத்தைப் பூசித்தனர். காக உருவிலிருந்த இயமன் தனது அலகினால் கொத்தி தீர்த்தமொன்றினை உண்டாக்கி நாள்தோறும் பெருமானைப் பூசித்தனன். அவ்வாறே அணில் உருவிலிருந்த இந்திரன் இலந்தை மலர்களைப் பறித்து வந்து பெருமானைப் பூசித்தனன். இருவரின் பூசனைக்கு மகிழ்ந்த பெருமான் அவ்விலிங்கத்திலிருந்து அம்பிகையுடன் காட்சியளித்து அவர்களுக்குச் சாப விமோசனம் அளித்தருளினார். பின்பு வாலி வந்து வழிபட்டதால் பெருமான் வாலீசுவரர் என்று வழங்கப்படுகிறார்.

திருஞானசம்பந்தர் கச்சியம்பதி செல்லும் வழியில் குரங்கணில் முட்டத்தை அடைந்தார்.

> மையார் நிறமேனி அரக்கர்தம் கோனை
> உய்யா வகையால் அடர்த்து இன்னருள் செய்த
> கொய்யார் மலர்சூடி குரங்கணில் முட்டம்
> கையால் தொழுவார் வினை காண்டல் அரிதே.

என்று பதிகம் பாடியருளி வாலீசுவரப் பெருமானைப் பணிந்தார்.

இங்கு அம்பிகை தெற்கு நோக்கி அருள்பாலிக்கின்றாள். விநாயகர், முருகன், சப்தமாதர்கள், சண்டேசுவரர் சந்நிதிகள் உள்ளன. கருவறையைச் சுற்றிலும் கல்வெட்டுக்கள் உள்ளன. பிரகாரத்தில் தல விருட்சம் இலந்தை, வில்வமரங்கள், மலர்ச் செடிகளுடன் கூடிய நந்தவனம் உள்ளது. திருக்கோயிலுக்குப்



பின்புறம் பிறைச்சந்திர வடிவில் காக்கை மடு எனும் தீர்த்தம் அமைந்துள்ளது. குரங்கு (வாலி), அணில், முட்டம் (காகம்) ஆகியவை வந்து வழிபட்டதால் இவ்வூருக்குக் குரங்கணில் முட்டம் எனப் பெயர் வழங்கப்படுகிறது.

## கல்வெட்டுச் செய்திகள்


இலந்தை மரம்

கருவறையைச் சுற்றிலும் கல்வெட்டுக்கள் உள்ளன. காலியூர்க் கோட்டத்து இருகழிநாட்டு மாமண்டூர்ப் பற்றத்து பல்லவ புரமான குரங்கணில் முட்டம் என்றும், இறைவன் பெயர் குரங் கணில் முட்டமுடைய நாயனார், கொய்யாமலர் ஈசுவரதேவர் என்றும் கல்வெட் டுக்கள் தெரிவிக் கின்றன. சகம் 1451 இல் பூசைக்காக கிருஷ்ணதேவராயர் பல்லவபுரம் கிராமத்தை இக்கோயிலுக்கு அளித்ததாக ஒரு கல்வெட்டு தெரிவிக் கின்றது.

## பூசை மற்றும் திருவிழாக்கள்

இங்கு தினமும் இரண்டு கால பூசைகள் நடைபெறுகின்றன. பிரதோசம், கார்த்திகை தீபம், அன்னாபிசேகம், திருவாதிரை, மகாசிவராத்திரி, பங்குனி உத்திரம் ஆகிய நாட்களில் திரளான பக்தர்கள் வந்திருந்து வழிபடுகின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 12.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 7.30 மணிவரை.

## குடை வரைக் கோயில்

குரங்கணில் முட்டம் தலத்திற்குப் பின்புறமாகச் சென்றால் சிறிது தூரத்தில் மகேந்திரவர்ம பல்லவன் காலத்திய குகைக் கோயில் ஒன்று உள்ளது. இது மத்திய தொல்லியல் துறை பராமரிப்பில் உள்ளது. குகைக் கோயிலினுள் உள்ள சந்நிதிகளில்



சிதிலமடைந்த நிலையில் இறை மூர்த்தங்கள் உள்ளன. மண்டபத் தூண்களில் கல்வெட்டுக்கள் உள்ளன.

## தொடர்பு முகவரி

**தக்கார் / ஆய்வர்,**


**அருள்மிகு வாலீசுவரர் திருக்கோயில்,**<br>
**குரங்கணில்முட்டம், செய்யாறு வட்டம்,**<br>
**திருவண்ணாமலை மாவட்டம்.**<br>
**ஆய்வாளர் அலைபேசி எண் : 90038 04180.**




## ஐந்தங்கம்

வாரம், திதி, நட்சத்திரம், யோகம், கரணம் ஆகியன ஐந்தங்கம் (ஐந்து+அங்கம்) எனப்படும். இதுவே பஞ்சாங்கம் ஆகும்.

சுமார் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே, தமிழர் பஞ்சாங்க அறிவு பெற்றிருந்தனர் என்பதனைச் சிலப்பதிகாரம் தெரிவிக்கிறது.



**அருள்மிகு பேசும் பெருமாள் திருக்கோயில்,**
கூழமந்தல், செய்யார் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

இறைவன் : அருள்மிகு பேசும் பெருமாள்

## அமைவிடம்

இத்தலம் வந்தவாசியிலிருந்து காஞ்சிபுரம் செல்லும் சாலையில் சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ள கூழமந்தல் எனும் கிராமத்தில் அமைந்துள்ளது. பேருந்து வசதி அடிக்கடி உள்ளது.

## தங்கும் வசதி

வந்தவாசி, காஞ்சிபுரம்

## திருத்தல சிறப்பு

இத்திருக்கோயில் கிழக்குத் திசைநோக்கிய இராசகோ புரத்துடன் அமைந்துள்ளது. கருவறையில் நெடிய திருமேனியுடன் நின்ற கோலத்தில் பேசும்பெருமாள் எனும் திருப்பெயருடன் திருமால் காட்சியருளுகின்றார். சுமார் 1000 ஆண்டுகட்கு முற்பட்ட இம்மூர்த்தம் மண்ணுள் புதையுண்டு இருந்தது. 20 ஆண்டுகட்கு




முன்பு இப்பகுதியில் பள்ளம் தோண்டுகையில் இந்த இறைத் திருமேனி வெளிக்கொணரப்பட்டு, பின்னர் அங்கேயே பிரதிட்டை செய்யப்பட்டு கோயில் எழுப்பப்பட்டது. மூலவருக்கு அருகில் ஸ்ரீதேவி, பூதேவி உள்ளனர். அருகில் ஸ்ரீதேவி பூதேவியுடன் வெங்கடேசப்பெருமாள், பாமா, ருக்மணியுடன் கிருஷ்ணன் ஆகியோரது உற்சவ விக்கிரகங்கள் உள்ளன.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

இத்திருக்கோயிலில் தினந்தோறும் இரண்டு கால பூசைகள் நடைபெறுகின்றன. சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடும், இராமநவமி, ஆடிப்பூரம், அனுமன் ஜெயந்தி, வைகுண்ட ஏகாதசி ஆகிய நாட்களில் உற்சவங்களும் செய்யப்படுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 12.00 மணிவரை.

மாலை 4.00 மணிமுதல் 7.30 மணிவரை.

## தொடர்பு முகவரி

செயல் அலுவலர்,
அருள்மிகு பேசும்பெருமாள் திருக்கோயில்,
கூழமந்தல், செய்யார் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.
அலைபேசி எண் : 9655777628.

## அருகில் உள்ள தலம்

கங்கை கொண்ட சோழீசம்





**அருள்மிகு கங்கைகொண்ட சோழீசுவரர் திருக்கோயில்,**

கூழமந்தல், செய்யார் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

இறைவன் : அருள்மிகு கங்கைகொண்டசோழீசுவரர்

தலவிருட்சம்: வில்வம்

ஆகமம் : காமிகம்

## அமைவிடம்

இத்தலம் வந்தவாசியிலிருந்து காஞ்சிபுரம் செல்லும் சாலையில் சுமார் 20 கி.மீ.; தொலைவில் உள்ள கூழமந்தல் எனும் கிராமத்தில் அமைந்துள்ளது. பேருந்து வசதி அடிக்கடி உள்ளது.

## தங்கும் வசதி

வந்தவாசி,

## திருத்தல சிறப்பு

சோழர்கால கற்றளியாக விளங்கும் இத்திருக்கோயிலைச் சுற்றிலும் கல்வெட்டுக்கள் உள்ளன. முதலாம் இராசேந்திர சோழனின் குலகுருவான ஈசான சிவ பண்டிதர் என்பவரால் இவ்வாலயம் கட்டப்பட்டது. ஊரின் பெயர் கங்கைகொண்ட சோழபுரம் என்றும், இறைவன் பெயர் கங்கைகொண்ட



சோழீசுவரர் என்றும் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. மேலும் பூசைகள் செய்யவும், விளக்கெரிக்கவும் தானங்கள் வழங்கப்பட்ட செய்திகளையும் தெரிவிக்கின்றன.

## பூசைகள் மற்றும் விழாக்கள்

இங்கு தினந்தோறும் ஒரு கால பூசை நடைபெறுகிறது. பிரதோசத்தன்று பெருமளவில் பக்தர்கள் வந்திருந்து அபிசேகம் செய்து வழிபடுகின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 10.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை.

### தொடர்பு முகவரி

தக்கார்/ஆய்வர்,
அருள்மிகு கங்கைகொண்ட சோழீசுவரர்
திருக்கோயில்,
கூழமந்தல், செய்யார் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.
அலைபேசி எண் : 9003804180.





**அருள்மிகு சொர்ணகாலபைரவர் திருக்கோயில்,**
அழிவிடைதாங்கி, செய்யார் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

இறைவன் : அருள்மிகு சொர்ணகால பைரவர்

தலவிருட்சம் : வில்வம்

## அமைவிடம்

இத்தலம் செய்யாறிலிருந்து பெருங்கட்டூர் வழியாக காஞ்சிபுரம் செல்லும் சாலையில் சுமார் 22 கி.மீ. தொலைவில் உள்ள அழிவிடைதாங்கி எனும் கிராமத்தில் அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

செய்யாறு, வந்தவாசி,

## திருத்தல சிறப்பு

அழிபடைதாங்கல் என்னும் தினையின் பெயரைக் கொண்டுள்ள இத்தலத்தின் பெயர் மருவி தற்போது

அழிவிடைதாங்கி என்று வழங்கப்படுகின்றது. இங்கு சிவபெருமானின் அற்புதத் திருக்கோலங்களுள் ஒன்றான அருள்மிகு சொர்ணகால பைரவர் தெற்கு நோக்கிக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளார். ஞாயிறுதோறும் ராகு காலத்தில் சிறப்பு பூசைகள் செய்யப்படுகின்றன. பௌர்ணமியன்று நடைபெறும் பூசையிலும், யாகத்திலும் கலந்துகொள்ள வெளியூர்களிலிருந்து பலர் வருகின்றனர். செய்வினைகளைப் போக்கும் தெய்வமாக சொர்ணகால பைரவர் விளங்குகின்றார்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 10.00 மணிவரை.

மாலை 4.00 மணிமுதல் 7.00 மணிவரை.

### தொடர்பு முகவரி


தக்கார்/ஆய்வர்,

அருள்மிகு சொர்ணகாலபைரவர் திருக்கோயில்,
அழிவிடைதாங்கி, செய்யார் வட்டம்,

திருவண்ணாமலை மாவட்டம்.

அலைபேசி எண் : 9003804180.


### அருகில் உள்ள தலம்

திருப்பனங்காடு.



### இறைவழிபாடு

நினைக்க நெஞ்சினையும், பேசுவதற்கு வாயினையும் இந்த இரண்டினையும் தாங்கி நின்று தொழிற்படுகிற உடம்பினையும் தந்த இறைவனை, நாம் ஒவ்வொருவரும் நன்றி மறவாமையின் பொருட்டு, பூவும், நீரும் கொண்டு வழிபடுதல் வேண்டும்.

-திரு முருக கிருபானந்த வாரியார்



**அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்,**
புரிசை, செய்யார் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு அகத்தீசுவரர் |
| இறைவி | : | அருள்மிகு அகிலாண்டேஸ்வரி |
| தீர்த்தம் | : | சிவகங்கை தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | பவழமல்லி, வில்வம், |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

இத்தலம் செய்யாறிலிருந்து வந்தவாசி செல்லும் சாலையில் சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ள புரிசை எனும் கிராமத்தில் அமைந்துள்ளது.

## தங்கும் வசதி

செய்யாறு, வந்தவாசி,

## திருத்தல சிறப்பு

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் தேவாரத்துள் புரிசை நாட்டுப் புரிசை என்று குறித்துள்ள வைப்புத்தலம் இதுவாகும். இத்தலத்திற்கு அகத்தியர் வந்து பூசை செய்ததால் பெருமான் அகத்தீசுவரர் என வழங்கப்படுகிறார். பெருமானுக்கு முன்பாக

நந்தி தேவரின் திருமேனியும், கைகளைக் கூப்பி வணங்கிய வண்ணம் அகத்தியரின் திருமேனியும் உள்ளன. மூலவர் முன்பாக அகத்தியரின் திருமேனியுள்ளது இங்கு மட்டுமேயாகும்.



சுவாமி மேற்கு நோக்கியும் அம்பாள் கிழக்கு நோக்கியும் உள்ளனர். அம்பாள் சந்நிதி, நடராசர் சபை, பைரவர், சூரியன், நவக்கிரகங்கள் ஆகியோரை வணங்கிச் சென்று மூலவரை அடையலாம். கோஷ்டமூர்த்தங்களாக துர்க்கை, பிரமன், திருமால் தட்சிணாமூர்த்தி, விநாயகர் ஆகியோர் உள்ளனர்.

கருவறையின் வெளிப்புறத்தில் மகாமண்டபச் சுவரில் நாயன்மார்களின் வரலாறுகள், சிவபெருமானின் திருவிளையாடல்கள் ஆகியன புடைப்புச் சிற்பங்களாக அமைந்துள்ளன. காமதகனம், ராவணன் கயிலையை எடுப்பது. மனுநீதிச் சோழன், ஆனாய நாயனார் குழலூதுதல், கண்ணப்பர் பன்றி வேட்டை மற்றும் சிவலிங்கத்தின் மீது காலை ஊன்றியவாறு கண்ணைப் பெயர்த்தல், திருக்குறிப்புத் தொண்டர் ஆடையைப் பெறுவது மற்றும் தலையை கல்லில் முட்டிக் கொள்வது, சுந்தரர் யானை மீதும் சேரமான் பெருமான் குதிரை மீதும் செல்வது முதலான சிற்பங்கள் அழகுறவுள்ளன. அனைவரும் அவசியம் காணவேண்டிய அற்புத கலைப் படைப்பாக இச்சிற்பங்கள் உள்ளன. சுற்றிலும் கல்வெட்டுகளும் விநாயகர், முருகன், பைரவர் ஆகியோரின் சன்னதிகளும் உள்ளன.



## தேவாரப் பாடல்

தென்னூர் கைம்மைத் திருச்சுழியல் திருக்கானப்பேர்
பன்னூர் புக்குறையும் பரமர்க்கு இடம் பாய்நலம்
என்னூர் எங்கள் பிரான் உறையும் திருத்தேவனூர்
பொன்னூர் நாட்டுப் பொன்னூர் புரிசை நாட்டுப் புரிசையே

(சுந்தரர்)

## பூசை மற்றும் திருவிழா

தினந்தோறும் இரண்டு கால பூசைகள் செய்யப்படுகின்றன. பிரதோசம், தமிழ்ப்புத்தாண்டு, கார்த்திகை தீபம், மகாசிவராத்திரி முதலான நாட்களில் பெருமளவில் பக்தர்கள் வருகின்றனர்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணிமுதல் 11.00 மணிவரை.

மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை.

### தொடர்பு முகவரி

தக்கார்/ஆய்வர்,
அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்,
புரிசை, செய்யார் வட்டம்,
திருவண்ணாமலை மாவட்டம்.
அலைபேசி எண் : 9003804180.

## அருகில் உள்ள தலம்

செய்யாறு, வந்தவாசி





## நினைவுப் பெட்டகத்தில்
## அண்ணாமலையார் திருக்கோயில்








## உண்ணாமுலையம்மன் சந்நிதி முன்பு உள்ள மகாமண்டப தூண்களில் காணப்படும் தெய்வச் சிற்பங்கள்













யானையைப் பொருதும்
சிம்மத்தின் மீது தேவி
(கம்பத்திளையனார் பின்புறமுள்ள
மண்டபத் தூண்).



செந்தூர விநாயகர் சந்நிதி முன்புள்ள மண்டப
தூணின் மேல்பகுதி குமுதம்



செந்தூர விநாயகர் சந்நிதி தென்புற
சுவரில் காணப்படும் பைரவர்.



கல்யாண மண்டபத்திலுள்ள
தூணொன்றில் உமையொருபாகர்,
(மூன்றாம் பிரகாரம்)



கல்யாண மண்டபத்திலுள்ள
தூணொன்றில் ஐயனார்.



கல்யாண மண்டபத்திலுள்ள
தூணொன்றில் யானை உறித்தபிரான்



மங்கையர் பிணைந்திருக்கும்
சங்கிலித் தோற்றம் (பிரம்ம தீர்த்தமருகில்
உள்ள தீர்த்தவாரி மண்டபத்தூண்)



கரும்பு வில்லுடன் மன்மதன்
(கம்பத்திளையனார் பின்புறமுள்ள
வளைகாப்பு மண்டபத்தூண்)



அஞ்சனை மைந்தனுக்கு
இராமன் உபதேசம் (கம்பத்திளையனார்
பின்புறமுள்ள வளைகாப்பு மண்டபத்தூண்)



கண்ணப்பனும் காளத்திநாதனும்
(ஆயிரங்கால் மண்டபம்)



நரசிம்மர் இரணியனை
பாய்ந்து பிடித்தல்
(ஆயிரங்கால் மண்டபம்)



இரணிய வதம்
(ஆயிரங்கால் மண்டபம்)





செந்தூர விநாயகர் முன்புள்ள மண்டப தூண்கள் - கல்லோ ஓவியமோ!



மண்டபத் தூண்



கோபுர நுழைவாயிலில்
காணப்படும் கொயிடை மங்கை



பல்லவர் கால சேத்திர கணபதி



பல்லவர் கால புடைப்புத் திருமேனி





அடிமுடிகாணா அண்ணலின் முன்பு மிரளவைக்கும் துவாரபாலகர்கள்.



சுரதேவர்





உண்ணாமுலையம்மன் முன்புள்ள துவார பாலகிகள்

## ஓவியங்கள்
## (மூன்றாம் பிரகாரம் - கல்யாண மண்டபம்)


இலிங்கோத்பவர்


ஏகபாதமூர்த்தி


அர்த்தநாரீசுவரர்


கஜசங்காரமூர்த்தி



பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடல்

## இதர திருக்கோயில்கள்



பல்லவர் கால விநாயகர்,
அருள்மிகு தீர்க்கசாலேசர் திருக்கோயில்,
நெடுங்குன்றம்.



யோக தட்சணாமூர்த்தி
அருள்மிகு தீர்க்கசாலேசர் திருக்கோயில்,
நெடுங்குன்றம்.



பாதாள இலிங்கேசர், அருள்மிகு தீர்க்கசாலேசர் திருக்கோயில், நெடுங்குன்றம்.



ஜேஷ்டா தேவி,
அருள்மிகு தீர்க்கசாலேசர் திருக்கோயில்,
நெடுங்குன்றம்.



நூற்றுக்கால் மண்டப தூண்,
அருள்மிகு இராமச்சந்திர
பெருமாள் திருக்கோயில், நெடுங்குன்றம்.



மாமண்டூர் குகைக்கோயில் -
முதலாம் மகேந்திரவர்ம பல்லவன் காலம்
(செய்யார் - காஞ்சிபுரம் செல்லும் வழி)



சீயமங்கலம் குகைக்கோயில் - முதலாம்
மகேந்திரவர்ம பல்லவன் காலம்



புலியைக் கொல்லும் மறத்தமிழன்,
(நூற்றுக்கால் மண்டப தூண்)
அருள்மிகு வேதபுரீசுவரர் திருக்கோயில்,
செய்யார்.



சீயமங்கலம் குகைக்கோயில் தூணில்
காணப்படும் ஆடல் வல்லான் - முதலாம்
மகேந்திரவர்ம பல்லவன் காலம்





துவார பாலகர்களாக எமதர்மன், சித்ரகுப்தன் - சீயமங்கலம் குகைக்கோயில்

# அன்னதானத் திட்டம்

விழுப்புரம் இணைஆணையர் மண்டலத்திற்குட்பட்ட
திருவண்ணாமலை மாவட்டத்தில் அன்னதான திட்டம் நடைபெறும்
திருக்கோயில்களின் விபரம்.

| வ.எண் | திருக்கோயில் பெயர் | நாள் ஒன்றுக்கு பயனாளிகள் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. | அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில் திருவண்ணாமலை | 300 நபர்கள் |
| 2. | அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயில், அ.கோ.படைவீடு, போளூர் வட்டம். | வெள்ளி - 200<br>ஞாயிறு - 200<br>இதர நாட்கள் - 100 நபர்கள் |
| 3. | அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில், புதூர் செங்கம், செங்கம் வட்டம். | 50 நபர்கள் |
| 4. | அருள்மிகு பச்சையம்மன் திருக்கோயில், முனுகப்பட்டு, செய்யார் வட்டம். | 50 நபர்கள் |
| 5. | அருள்மிகு வேதபுரீசுவரர் திருக்கோயில், திருவத்திபுரம், செய்யார். | 50 நபர்கள் |
| 6. | அருள்மிகு இலட்சுமி நரசிம்ம சுவாமி திருக்கோயில், ஆவணியாபுரம், வந்தவாசி வட்டம். | 50 நபர்கள் |
| 7. | அருள்மிகு சிவசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில், எலத்தூர் மோட்டூர், | 50 நபர்கள் |

மேலே குறிபிட்டுள்ள திருக்கோயில்களில் பக்தர்கள் தாங்கள் விரும்பும் நாட்களில் 300 நபர்களுக்கு அன்னதானம் செய்வதற்கு ரூ.6000-மும், 200 நபர்களுக்கு ரூ.4000-மும், 100 நபர்களுக்கு ரூ.2000-மும், 50 நபர்களுக்கு ரூ.1000-மும் அந்தந்த திருக்கோயில்களில் தொகையினைச் செலுத்தி அன்னதானம் செய்யலாம். இதற்கு வருமான வரிவிலக்கு உண்டு.

